

நோபல் உரை
செஸ்லா மிலாஸ்

சென்னையில் ஒரு
கூவக்கரைப் பேட்டை
சந்தியா நடராஜன்





# அம்ருதா


Amrudha Tamil Monthly

Volume 19 Issue 07 February 2025 Rs.30
ஆண்டு 19 இதழ் 07 பிப்ரவரி 2025 ரூ.30


## சமரசங்கள் அவசியமானவை

எம்.டி.வாசுதேவன் நாயர்

ஆண்டு 19 இதழ் 07



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

பிப்ரவரி - 2025 விலை ரூ. 30



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்...

# சமரசங்கள் அவசியமானவை

● எம்.டி.வாசுதேவன் நாயர்

உரையாடல்: **சுதா கோபால கிருஷ்ணன்** தமிழில்: **தி.இரா. மீனா**

**சுதா: வணக்கம். சகபீடியாவில் எங்களோடு நீங்கள் பேசுவது மிக்க மகிழ்ச்சி. சகபீடியா என்பது இந்தியாவின் கலை, கலாச்சாரம், தொன்மை ஆகியவற்றின் மீது கவனம் செலுத்தும் ஆன்லைன் கலைக்களஞ்சியம். எல்லாரும் சுலபமாக அணுகும் வகையில் இது அமைந்துள்ளது. இது அச்சு மீடியாவை விடப் படிப்பவருக்கு ஏற்றதாகவும் பயன்படுத்த எளிதாகவும் இருக்கிறது. இந்த அடிப்படையில் இதில் உங்களது படைப்பாக்கப் பயணத்தை பற்றிப் பேசுவது எங்களுக்கு மிகப் பெருமையாக உள்ளது.**

**உலகெங்கிலுமுள்ள மக்கள், குறிப்பாக மலையாள மொழியினர் உங்கள் கதைகளால் கவரப்பட்டவர்கள். மிகச் சிறிய வயதிலேயே நீங்கள் எழுத ஆரம்பித்ததற்கு எது தூண்டுதலாக இருந்தது?**

**எம்.டி.வி:** நான் மலையாள மொழியில் பேசுவது எனக்கு வசதியாக இருக்கும்.

**சரி. தாராளமாகப் பேசுங்கள்.**

உலக இலக்கியமோ படைப்புகளோ புத்தகங்களோ சிறிதும் அறியப்படாத பாரதபுழா என்னும் கிராமத்தில் நான் பிறந்தேன். அங்கு செய்தித்தாள்கள் தபாலில் மூன்று நாட்கள் தாமதமாக வரும். எப்போதாவது எனக்குப் புத்தகங்கள் கிடைக்கும். திருச்சூரில் படித்துக் கொண்டிருந்த என் அண்ணன் எனக்குப் புத்தகங்கள் கொண்டு வந்து தருவார். எல்லோரும் அவற்றை இங்கும் அங்குமாகப் படிப்பார்கள். அதைத் தவிர இலக்கியத்தின் மீது எந்தப் பற்றுதலுமில்லை. ஒரு தனி ஆசிரியரை மட்டுமே கொண்டு இயங்கிய பள்ளியில் எங்கள் உறவினர் வீட்டுப் பையன் படித்துக் கொண்டிருந்தான். அவன் இரண்டாம் வகுப்பில் இருந்தான். நானும் அவனுடன் உட்கார்ந்திருப்பேன். பிறகு அருகில் இன்னொரு பள்ளி திறக்கப்பட்டது. அங்கு நான் நான்காவது வகுப்பில் சேர்க்கப்பட்டேன். நான் முதல் வகுப்பில் படிக்காமலே இரண்டாம் வகுப்பில் சில காலம் இருந்தேன். இருந்த போதிலும் என் மாமா அந்தப் பள்ளியில் ஆசிரியராக இருந்ததால் நான்காம் வகுப்பில் சேர்த்துக் கொள்ளப்பட்டேன். அவர் என்னை கவனித்துக் கொள்வார் என்று என் குடும்பத்தினர் அங்கு அனுப்பினார்கள். செய்யுள்களை மனப்பாடம் செய்து ஒப்புவிப்பது எனக்கு மிகவும் பிடிக்கும்.

**எப்போது எழுத ஆரம்பித்தீர்கள்?**

உயர்நிலைப் பள்ளிக்குப் போனவுடன் பள்ளி நூலகத்தில், அக்கம் பக்கத்தில் என்று எங்கெல்லாம் கதைகள், நாவல்கள் கிடைத்ததோ எல்லாவற்றையும் படிக்கத் தொடங்கினேன். படித்த பிறகு ஏதாவது எழுத வேண்டுமென்று விரும்பினேன். நான் படித்தவற்றிற்குச் சமமாக என்னால் எழுத முடியாதென்றாலும் தனிமையில் எதையாவது கிறுக்க நினைத்தேன். நன்றாக இல்லாததால் யாரிடமும் காட்டாமல் கிழித்துவிட்டேன். அதைத் தொடர்ந்தும் செய்து வந்தேன். பிறகு சிறந்த எழுத்தாளர்களின் படைப்புகளைப் படித்தேன். அவற்றின் மீது பக்தியும் பிரமிப்பும் கலந்து வந்தன. கவிஞர் அக்கிதம் அச்சுதன் நம்பூத்ரி என் பள்ளியின் அருகே வசித்து வந்தார். அவர் வீட்டில் புத்தகங்களிருந்தன. விடுமுறை நாட்களில் அவர் வீட்டுக்குப் போய் மற்றவர்கள் பரிந்துரைக்கும் புத்தகங்களை எடுத்துப் படிப்பேன். என்ன எழுதுவதென்று எனக்குத் தெரியவில்லை. முன்பெல்லாம், மாணவர்கள் தாங்கள் எழுதியதை ஆசிரியரிடம் காட்டுவார்கள். பிறகு, ஆசிரியரின் அபிப்ராயத்தைப் பொறுத்து அவர்கள் செயல்பாடுகள் இருக்கும். வழி நடத்துபவர்கள் என்று யாரும் எனக்கில்லை. நான் எல்லாவற்றையும் தனியாகச் செய்தேன். நான் படித்த சிறந்த கவிதைகள் எனக்கு முன் மாதிரியாக இருந்தன. நன்றாக இல்லை என்று எனக்குத் தோன்றினால் எழுதியதைக் கிழித்து விடுவேன். எழுதுவேன். கிழித்து விடுவேன்.



**திரும்பத் திரும்ப எழுதிய பயிற்சிதான் உங்களது எழுத்தைக் கூர்மைப்படுத்தி மாறுபட்ட படைப்பாளியாக்கியதோ?**

ஒரு வேளை அதுவாகவுமிருக்கலாம். பிறகு நான் கவிதை எழுதுவதை நிறுத்திவிட்டேன். முன்னோடிகளின் படைப்புகளோடு ஒப்பிடும் போது அது ஒன்றுமேயில்லை. எனக்குப் பல சிறந்த கவிதைகள் மனப்பாடமாகத் தெரியும். வள்ளத்தோள், ஆசான், உல்லூர் போன்றோருடையவை. பிறகு நான் ஒரு வருடம் படிப்பில் இடைவெளி எடுத்துக்கொண்டேன். என் அண்ணன் கல்லூரியில் படித்ததால் இரண்டு மகன்களை ஒரே நேரத்தில் கல்லூரிக்கு அனுப்பும் வசதி என் பெற்றோர்களுக்கில்லை. அதனால் ஒரு வருடம் நான் வீட்டிலிருந்தேன். ஆரம்பத்தில் வருத்தமாக இருந்தது. பிறகு அது நல்லது தானென்று உணர்ந்தேன். விரைவில் அந்த ஓய்வு நேரத்தை சரியாகப் பயன்படுத்திக் கொண்டேன்.

அக்கிதம் அவர்களின் வீட்டிற்குப் போய் பெரிய புத்தகக் கட்டுகளோடு திரும்புவேன். படித்தபின் திருப்பிக் கொடுத்துவிட்டு மீண்டும் எடுத்து வருவேன். உலகப் புத்தகங்களுடனான பயணம் அருமையானதாக இருந்தது. விளையாட நண்பர்கள் என்று யாரும் இருந்ததில்லை. மலைப் பகுதிகளில் தனியாகத் திரிந்து கொண்டிருக்கும் போது என் மனதில் கருத்துக்களை உருவாக்கிக்கொள்வேன். என் கதைகளை அனுப்பி வைக்க வேண்டிய செய்தித்தாள்களின் முகவரிகள் எனக்குத் தெரியாது. நான் மிகச் சாதாரணமான கிராமத்துப் பையன். என் எழுத்துக்களை யாராவது பிரசுரம் செய்வார்களா என்று கூட எனக்குத் தெரியாது. சென்னையிலிருந்து 'சித்ரகேரளம்' என்றொரு பெரிய பத்திரிகை வருவதை ஒரு விளம்பரத்தில் பார்த்தேன். பல பிரபல எழுத்தாளர்கள் அதில் எழுதுவார்கள். சிறந்த எழுத்தாளரான எஸ்.கே.பொட்டேகட் பாணியில் வி.என். தீக்காபட்டு என்ற புனை பெயரில் ஒரு கட்டுரை எழுதினேன். தீக்காபட்டு என் வீட்டின் பெயராகும். என்னைப் பெரிதும் கவர்ந்த தகழி சிவசங்கரன் பிள்ளை, காரூர் நீலகண்ட பிள்ளை போன்ற சிறந்த எழுத்தாளர்கள் தங்கள் கிராமங்களின் பெயர்களை அடைமொழியாக வைத்துக் கொண்டிருந்தனர். இரண்டாவது படைப்பை கோடலூர் வாசுதேவன் நாயர் என்ற பெயரில் எழுதினேன். மூன்றாவதை என் சொந்தப் பெயரிலே எம்.டி. வாசுதேவன் நாயர் என்ற பெயரில் அனுப்பினேன். மூன்று படைப்புகளும் அதே பத்திரிகைக்கு அனுப்பப்பட்டன. இரண்டு மாதங்களுக்குப் பிறகு, அருகேயுள்ள குட்டிபுர ரயில்வே ஸ்டேஷனுக்கு ஒரு பார்சல் வந்தது. யாரையாவது அனுப்பிப் பெற்றுக்கொள்ளும்படி எங்களிடம் சொன்னார்கள். அது அந்தப் பத்திரிகை. மூன்று படைப்புகளும் பிரசுரமாகியிருந்தன.

அந்த வருடம் சில கட்டுரைகளை மொழிபெயர்த்து எனக்கு முகவரிகள் தெரிந்த பத்திரிகைகளுக்கு அனுப்பினேன். அதற்கடுத்த வருடம் கல்லூரியில் சேர்வதற்குப் பதிவு செய்தேன். இதற்கிடையில்

சிறுகதைகள் எழுதும் போது எனக்குள் அதிக சுய நம்பிக்கை இருப்பதை உணர்ந்தேன். மாத்ருபூமியைத் தவிர வேறு சில பிரபலமான வாரப் பத்திரிகைகளும் அந்தக் காலகட்டத்திலிருந்தன. அதிலொன்று பி. பாஸ்கரனை ஆசிரியராகக் கொண்டு, மெட்ராஸிலிருந்து வெளிவந்த 'ஜெயகேரளம்'. வைக்கம் முகமது பஷீர் அதில் கட்டுரைகள் எழுதுவார். மற்றொன்று கே. பாலகிருஷ்ணனை ஆசிரியராகக் கொண்டு திருவான்கூரில் இருந்து வந்த 'கௌமுடி'. இந்தப் பத்திரிகைகளுக்கு என் கதைகளை அனுப்பினேன். ஒரு சிறுகதை கௌமுடியில் பிரசுரமானது. கே. பாலகிருஷ்ணனிடமிருந்து ஒரு கடிதம் வந்தது இன்னும் நினைவிருக்கிறது. 'எனக்கு உங்கள் கதை மிகவும் பிடித்திருக்கிறது. அடுத்த இதழில் அதைப் பிரசுரம் செய்கிறோம்' என்று ஆங்கிலத்தில் இருந்தது. பிறகு நான் கல்லூரியில் இருந்த போது அந்தக் கதைகளின் படங்களைப் பார்த்த மாணவர்கள் 'கௌமுடி' போன்ற பத்திரிகையில் என் கதைகள் வந்ததைப் பார்த்து வியப்படைந்தனர். எனக்கு பத்து ரூபாய்க்கு காசோலை அனுப்பினார்கள்.

**அதுதான் உங்களுடைய முதல் ஊதியமா?**

இல்லை, அதற்கு முன்னால் இன்னொரு பத்திரிகையிலிருந்து எனக்கு ஐந்து ரூபாய் கிடைத்தது. இது இரண்டாவது. இது போலவே என் கதைகளைப் பல பத்திரிகைகளுக்கு அனுப்பத் தொடங்கினேன். சில பிரசுரமாயின. அந்தக் காலகட்டத்தில் மிகப் பிரபலமாக இருந்த ஜெயகேரளத்தில் என்னுடைய பல கதைகள் வெளி வந்துள்ளன. அதுவரை நான் ரகசியமாக வைத்திருந்தது என் கல்லூரி நண்பர்களுக்குத் தெரிய வந்தது. நான் ஓர் எழுத்தாளரென்று யாரிடமும் சொன்னதில்லை. கல்லூரி நண்பர்களுக்கு இந்த ரகசியம் தெரிந்தவுடன் எழுத்தாளர் என்பதை முன் வைத்து கல்லூரித் தேர்தலில் என்னை நிறுத்தினர். நான் கல்லூரியை விட்டு வெளியேறிய சமயத்தில் இந்த மாணவர்கள் என்னுடைய சில கதைகளைச் சேகரித்து அதைப் புத்தகமாக்கினர். அதுதான் என் முதல் புத்தகம்.

**உங்கள் தொடக்க காலக் கதைகளில், மிக முக்கியமான கரு என்பது ஒரு குழந்தையின் கோணத்தில் நிலப்பிரபுத்துவ அமைப்பின் சிதைவு மற்றும் தாய்வழிக் குடும்பங்கள் ஆகியவையாக இருந்தன. அது முதல் உள்ளார்ந்த அந்த வகையே உங்கள் எழுத்தில் வெளிப்படுகிறது. மேலும், சிறுகதை அல்லது நாவலென்று எதுவாக இருந்தாலும், அந்த அமைப்பின் வளர்ச்சி சுய வளர்ச்சியை பிரதிபலித்தலாகிறது, சுயத்தேடல் என்பது சுய மாற்றமாகி இருக்கிறது.**

இதற்குக் காரணம் என்னவெனில், கடந்த காலம் பற்றி பல கதைகளை என் தாய் மற்றும் அத்தைகளிடம் கேட்டிருக்கிறேன். மாமன்களின் கொடுரமான செயல்களைக் கதைகளாக அவர்கள் விளக்குவார்கள். அவற்றைக் கேட்பதில் எனக்கு அவ்வளவு விருப்பம் இருந்ததில்லை. நீங்கள் வளரும் போது இந்தக் கதைகள் உங்களுடன் தங்கிவிடும். வெவ்வேறு இடங்களில் நீங்கள் அவற்றை எதிரொலிப்பீர்கள். இந்தக் கதைகளின் பின்புலம்தான் 'நாலுகெட்டு' [நான்கு முற்றங்களைக் கொண்டு அமையும் வீடு] நான் எட்டுக்கட்டு வீட்டில்



மனைவி சரஸ்வதி உடன்



*வாழ்ந்திருக்கிறேன் [எட்டு முற்றம் கொண்டது]. பின்னாளில் அது இடிக்கப்பட்டது. மிகப் பழமையான பெரிய வீடுகளை இடித்ததைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால், அவை எதையும் பார்த்ததில்லை. அதைக் கற்பனை செய்து என் கதைகளில் பிரதிபலிக்க முடிந்திருக்கிறது.*

**இது பற்றிய கற்பனையை படைப்பாளி பேசும் போது, அதன் மூலம், கற்பனைப் பாத்திரங்கள் குறிப்பாக பெண் பாத்திரங்கள் பற்றி ஒருவித ஆர்வம் அவருக்குள் அதிகமாகும். பெண் பாத்திரங்கள் பற்றிய அபிப்பிராயங்களுக்கு உங்கள் அனுபவம் எவ்வகையில் உதவியதாக நினைக்கிறீர்கள்?**

*எல்லா வகையான அனுபவங்களும்தான். 'குட்டியேடத்தி ' என்னும் பெண் பாத்திரம் மீனாட்சி ஏடத்தி [அக்காவின் பெயர் மீனாட்சி]. காதில் மணி அணிந்திருப்பாள். கூர்மையான கத்தியால் அவள் வெட்டுவதைப் பார்த்திருக்கிறேன். என்னை அடுக்களையிலிருந்து கத்தியை எடுத்து வரச் சொல்லி கதவை மூடி விடுவாள். பக்கத்து வீட்டில் மூளை வளர்ச்சி குறைந்த வேலாயுத அண்ணன் இருந்தார். குழந்தைகளாக நாங்கள் இருக்கும் போது அவர் வீட்டில் இருக்கும் பெரிய குளத்தில் குளிக்கப் போவோம். அவரைச் சங்கிலியால் கட்டிப் போட்டிருப்பார்கள். பக்கத்தில் சாப்பாடிருக்கும். அது பரிதாபமான காட்சி. சிறுவர்களாக இருக்கும் நாங்கள் அவரை பார்க்கக் கூடப் பயப்படுவோம். அவர் உருவம் என் மனதில் ஆழமாகப் பதிந்தது.*

*நான் பெரியவனான சில வருடங்களுக்குப் பின்னால் அவர் ஒரு நாள் மாலைப் பொழுதில் சங்கிலியை அறுத்துக்கொண்டு, எங்கள் வீட்டிற்கு வந்து என் தாயின் பெயரைச் சொல்லி அழைத்தார். என் அம்மா சிறிதும் பதட்டப்படாமல் என்ன வேண்டுமெனக் கேட்டார். சாப்பாடு வேண்டுமென அவர் சொல்ல அம்மா அவரை உள்ளே அழைத்துப் போய் உணவு பரிமாறினாள். அவர் வயிறு நிரம்பச் சாப்பிட்டு விட்டுப் போனார். இந்த நிகழ்வு, சங்கிலியில் கட்டப்பட்டிருந்த மனிதன், அதை உடைத்துப் போட்ட மனிதன் என்று மனதில் பதிந்தது.*

**வேலாயுத அண்ணனின் கதை பித்து நிலையிலிருந்து குணமாகி விட்ட நிலையிலிருந்து ஆரம்பமாகிறது. ஆனால், அவர் குணமானதை கிராமத்து மக்கள் நம்பத் தயாராக இல்லை. கடைசியில் தான் ஒரு பைத்தியம் என்று அவரே அறிவிக்க வேண்டியிருக்கிறது. என்ன ஒரு பரிதாப நிலை!**

ஆமாம் ' நான் பைத்தியம்,என்னைக் கட்டிப் போடுங்கள்' என்று சொல்கிறார். அந்த வகையான அனுபவங்களை நாம் நமக்குள்ளே சேகரித்து வைத்திருக்கிறோம். அவை உடனடியாகப் பயன்படுத்தப் படுவதில்லை. குழந்தைகள் தங்கள் சிறிய சிறிய பொருட்களை, கூழாங்கற்கள் மற்றும் பிற பொருட்களைத் தங்கள் பாக்கெட்டுகளில் வைத்துக் கொண்டு, பின்பு அவற்றை வைத்து விளையாடுவதைப் போல, நாமும் அம்மாதிரி ஞாபகங்களை இருத்திக்கொள்கிறோம்.

**லீலா...**

என் தந்தை நீண்ட காலம் இலங்கையில் இருந்தார். பணியாளர்களாக வேறு சிலரும் அவருடன் சென்றிருந்தனர். லீலா அவருடைய மகள் என்ற வதந்தியை அவர்கள் பரப்பினார்கள். அது ஒரு பெரிய பிரச்னையாகி விட்டது. என் பெற்றோர் சண்டை போட்டுக் கொண்டனர். என் தந்தை லீலாவுடன் அந்த இடத்தை விட்டுப் போய்விட்டார். இவையெல்லாம் என் மனதிலிருந்தன. உலகின் பல பகுதிகளுக்கு பயணம் செய்திருந்தாலும் எனக்கு இலங்கைக்குப் போக வேண்டுமென்ற ஆசையிருந்தது. அருகிலிருந்தாலும், நான் அடிக்கடி மெட்ராஸ் போனாலும், என்னால் போக முடியவில்லை. கடுகன்னவா என்ற இடத்தில் என் தந்தை வசித்து வந்தார். பிறகு நான் அங்கு போனேன். என் தந்தை நீண்ட காலம் முன்பே அங்கிருந்து போய்விட்டதால் என்னால் எதையும் கண்டுபிடிக்க முடியவில்லை. இந்தக் கற்பனையான விளக்கங்கள் மனதை மாற்றுவது என்பதால், உண்மையை அறிய வேண்டியது மிக அவசியமானது. பிறகு நான் கொழும்பு போனேன். நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் பயணம் செய்தேன். கடுகன்னவா தான் என் தந்தையின் இடம் என்பது என் மனதிலிருந்தது. எங்களிடமிருந்த தந்தையின் முகவரி 'டி.என். நாயர், கடுகன்னவா சாலை' என்பது மட்டும்தான். நாங்கள் என்ன நினைப்பது? நாம் கடுகன்னவா என்ற இடத்திற்குப் போனால் தந்தையை அறிந்த மனிதர்கள் இருப்பார்கள் என்று தானே நினைப்போம்? யாருமில்லை அங்கே, யாருமேயில்லை. வருடங்கள் கடந்தன. நாயர் ஒருவர் இங்கே வியாபாரம் செய்தாரா? யாருக்கும் நினைவிலில்லை. லீலா அவருடன் இருந்திருக்க வேண்டும். ஆனால், யாருக்கும் அவளைப் பற்றியும் தெரியவில்லை. இவையெல்லாம் உண்மைச் சம்பவங்கள். ஆனால், வருடங்கள் கடக்க சூழ்நிலை மாறிப் போனது. தலைமுறைகள் கடந்தன. கேரளாவிலிருந்து வியாபாரம் செய்ய வந்த டி.என். நாயரைத் தெரிந்தவர்கள் காட்சியை விட்டே போய்விட்டார்கள்.

**'காலம்' என்ற உங்களது படைப்புக்குள் வரும் போது, நாவலின் அமைப்பும் கதையுமே மாறுபடுகின்றன. இது தீவிரமான மாற்றுருவங்களுக்கான காலம். இதை ஒரு மைல்கல் என்பதாகப் பார்க்கிறீர்களா?**

நமக்குப் பழக்கப்பட்ட வாழ்க்கை மாறிவிட்டது. நாம் வாழ்க்கையைப் பார்த்த விதமும் மாறிவிட்டது. இது என் ஒருவனுக்கு மட்டுமில்லை, உலக இலக்கியத்தின் போக்கும் இந்தச் சூழல்தான். உயர்ந்த இடத்தை அடைய வேண்டும் என்ற வேகத்தில் அதற்கான வழிவகைகளைப் பொருட்படுத்துவது இல்லை. எப்படியாவது நாம் அந்த உயரத்தைத் தொட வேண்டும். 'எது நடந்தாலும் நான் உயரே போயாக வேண்டும்'. கிராமம், நகரம் என்று எல்லா இடங்களிலும் இந்த மனப்பாங்கைப் பார்க்கிறோம். கால மாற்றங்களை இந்த நாவல் பிரதிபலிக்கிறது.

**உண்மைதான். நீங்கள் விரும்புவது சிறுகதைகளா அல்லது நாவல்களா?**

இரண்டும் முற்றிலும் மாறுபட்டவை. ஒரு நாவலில் சில பகுதிகள் வலுவற்றதாக இருக்கலாம். இதைப் பின்னாளில் படிக்கும் போதுதான் நாம் உணர்வோம். ஆனால், சிறுகதையில் இதற்கு வாய்ப்பேயில்லை. அது சரியான முறையில் அமைந்திருக்க வேண்டும்.

**உங்களுடைய 'கதாகாரன்ட பணிப்புரா' [கதை சொல்லியின் பட்டறை] 1963இல் எழுதப்பட்டது. கதை சொல்லும் திறன் பற்றி உங்கள் பார்வையை விளக்குகிறது.**

என் கதை எழுதும் பாணி இப்படித்தான்: கதை பற்றிய அடிப்படை கருத்து வந்தவுடன், பெரும்பாலான நேரங்களில் முதலில் அதை என் மனதிற்குள் எழுதிக்கொள்வேன். இதைச் செய்த பிறகுதான் எழுத உட்காருவேன். ஆரம்பம், இடை என்று எல்லாமும் எழுதப்படாத வடிவமாய் மனதில் இருக்கும். பிறகு அதைத் தாளில் எழுதி, திருத்தி நகாசு படுத்துவேன். ஒவ்வொரு படைப்பாளிக்கும் ஒவ்வொரு பாணியிருக்கும். சிலர் ஒரே நேரத்தில் உட்கார்ந்து எழுதி முடித்து விடுவார்கள். நான் சில நாட்கள் யோசித்து, பிறகு எழுதுவேன்.

**பீமனின் கோணத்தில் மகாபாரதக் காப்பியத்தை யதார்த்த ரீதியில் எழுதியிருக்கிறீர்கள். பொதுவாக பீமன் சித்தரிக்கப்பட்டிருக்கும் விதம் அறிவற்றவன், உடல் பலம் பெற்றிருக்கிறவன் என்றுதான்.**

நான் மகாபாரதத்தை திரும்பப் படித்த போது அதில் முழு உண்மையில்லை என்று உணர்ந்தேன். பீமன் மிக வலிமையானவன். அவன் வலிமையே அவனுக்குச் சாபமாகவும் வரமாகவும் இருந்தது. தன் தம்பியின்



துணை கொண்டு போரில் வெற்றி பெற்றுவிடலாம் என்பது அவன் மூத்த சகோதரனின் நம்பிக்கையாக இருந்தது. முக்கியமான தருணங்களில் துணை நின்று, கடுமையான தாக்குதல்களை எதிர்கொண்டவன். கால்பந்து விளையாட்டில் இடையில் நிற்பவர் போல அவன் எல்லாவற்றையும் எதிர்கொண்டவன். அவன் எதையும் எதிர்நோக்கும் இயல்புடையவன். நான் எப்போதும் அந்தப் பார்வையில்தான் அவனைப் பற்றி யோசித்திருக்கிறேன். மருமகன் அபிமன்யுவை அவன் மிகவும் நேசித்தான். அபிமன்யுவின் ஆயுத வலிமை பற்றிப் பெருமைப்படுபவன். அபிமன்யு கொல்லப்பட்ட போது முழுப் படையே துக்கமானது.

பிறகு அவன் சொந்த மகன் கடோத்கஜன் கொல்லப்பட்ட செய்தி வந்த போது பீமன் படைமுகாமில் இருந்தான். அவன் பாண்டவர்களின் முதல் குழந்தை என்று சொல்லி வருந்தினான் யுதிஷ்டிரன். இதைக் கேட்டுக் கொண்டிருந்த கிருஷ்ணன் ஏன் அவர்கள் சோகமாக இருக்கிறார்கள் என்று கேட்டான். கடோத்கஜன் மரணச் செய்தி சொல்லப்பட்ட போது, ''முட்டாள்களே துக்கம் அனுசரிப்பதற்குப் பதிலாக நீங்கள் அவன் இறப்பைக் கொண்டாட வேண்டும்.' ஒரு தந்தை இதைக் கேட்டுக் கொண்டிருந்தார். கிருஷ்ணன் பின்னால் நின்று கொண்டு பீமன் இதைக் கேட்டுக் கொண்டிருந்தான்.

இது போன்ற நிகழ்வுகள்... எல்லோருக்கும் அவன் வலிமை வேண்டியிருந்தது; ஆனால், யாரும் அவன் மனதைப் பார்க்கவில்லை. அவன் வலியை உணரவில்லை.

**திரௌபதியும் கூட...**

ஆமாம், அவளும் கூட. அதனால் தெளிவான பொருத்தமான காரணங்கள் இருந்தால் எந்தப் பாத்திரத்தையும் ஒரு புதிய கோணத்தில் நம்மால் படைக்க முடியும்.

**உங்களது வலிமையான பெண் பாத்திரங்களான விமலா [ஸ்னோ கதை] திரௌபதி, சுமித்ரா ஆகியோர் பற்றிச் சொல்ல முடியுமா? இந்தப் பெண்கள் தங்கள் சூழ்நிலையால் எல்லைகளைக் கடந்து மேம்பட்டவர்கள்.**

இந்தப் பெண்கள் - என் அம்மா, உறவினர்கள் - இவர்களின் தாக்கம் தான் எனக்குள். எப்போதும் என் அம்மாதான் எனக்கு முன்மாதிரி. நான் எழுதிய எதையும் என் அம்மா படித்ததில்லை. நான் கல்லூரியில் இருந்த போது சிகிச்சைக்காக மெட்ராஸ் அழைத்துச் செல்லப்பட்டார்.

அது மட்டுமில்லை, அம்மா ஒரு வலிமையான பெண். நாங்கள் நான்கு சகோதரர்கள். ஒரு முறை சொத்துப் பிரிவினை நடந்த போது நான்கு பாகமாகப் பிரிக்க வேண்டுமென்று எல்லோரும் சொன்னார்கள். அம்மா வெளியே வந்து சொன்னாள், ஐந்தாகப் பிரிக்க வேண்டுமென்று. 'எனக்கு ஒரு சகோதரி இருக்கிறாள். அவளுக்கு ஒரு மகள். என் மகன்கள் எப்படியோ பிழைத்துக் கொள்வார்கள். ஆனால், அவள் என்ன செய்வாள்? அதனால், நான்கு இல்லை, ஐந்து.'' என் அம்மா அப்படிப்பட்டவள்.

நாங்கள் சிரமப்பட்ட காலங்களுண்டு. வீட்டருகேயுள்ள உறவினர்கள் கடனாக ஒரு சாக்கு

மூட்டை தானியங்கள் கொடுப்பார்கள். எங்களுக்கு கிடைத்த பிறகு, அம்மா அவர்கள் வீட்டிற்குப் போய் அவர்களுக்குத் தேவையான உணவு இருக்கிறதா என்று உறுதி செய்துகொண்டு வருவாள். என் அம்மா எல்லோருடைய நலனிலும் அக்கறை காட்டும் சுபாவம் கொண்ட பெண்மணி.

என்னைச் சுற்றி வலிமையான பெண்களைப் பார்த்திருக்கிறேன், என் குடும்பத்தில் மட்டுமல்ல, சுற்று வட்டார கிராமங்களிலும். அவர்களின் வலிமை என்னை வியப்பில் ஆழ்த்தியிருக்கிறது. சொல்லப் போனால், மகாபாரதத்தில் ஒரு பாத்திரம் - நாம் எப்போதும் ஒதுக்கிவிடும் வலந்தாரா, பீமனின் மனைவி. வியாசர் கூட அவளைப் பற்றி விரிவாகப் பேசவில்லை. சக்தியான, மரியாதைக்குரிய பாத்திரம்.

**அதனால் உங்கள் பார்வையில் வலந்தாராவை உருவாக்கியிருக்கிறீர்கள்.**

என் வலந்தாரா வலிமையானவள். உண்மையைச் சொன்னால் அவளுக்கு போதுமான முக்கியத்துவம் அங்கு தரப்படவில்லை. ஆனால், அவள் ஒரு சிறந்த அரசனின் மகள். திரௌபதியுடன் போட்டியிடுமளவுக்குச் சிறந்தவள். அவள் முக்கியத்துவத்தை நான் உணர்ந்த போதும், நான் அவள் பாத்திரத்தை முழுவதுமாக வெளிக்கொண்டு வரவில்லை.

**மாறாக, 'ஒப்பூல்' சிறுகதையில் அந்தப் பெண் தன் சூழ்நிலைக்கு அடிபணியும் நிலைக்கு ஆளாகிறாள். அந்தப் பையன் அவளுடைய மகன் என்று நம் எல்லோருக்கும் தெரிந்தாலும் அவன் அவளை 'மூத்த சகோதரி' என்கிறான். ஆனால், சூழ்நிலை காரணமாக, அவள் தாய் அவளைத் திருமணம் செய்துகொள்ள வற்புறுத்துகிறாள். அந்தக் குழந்தையின் மனநிலை... அது மிக அழகாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது.**

அந்தக் குழந்தை அப்படித்தான் வளர்க்கப்பட்டிருக்கிறது. அவன் தன் பாட்டியிடம் தன் தாய் என்றே குறிப்பிடுகிறான்.

**நான் இன்னொரு கேள்வி கேட்கிறேன். நீங்கள் சில திரைக் கதைகள் எழுதியிருக்கிறீர்கள். சில படங்களையும் இயக்கியிருக்கிறீர்கள். உங்கள் கதை திரைப்படமாகும் போது என்ன ஆகும்? என்ன விதமான சமரசங்களை நீங்கள் செய்ய வேண்டும்? உங்களுக்கான சுதந்திர அனுபவம் பற்றிக் குறிப்பிடுங்கள்.**

நிச்சயமாக சமரசங்கள் அவசியமானவை. மீடியம் வித்தியாசமானது. அதன் விதிப்படி நாம் சில விஷயங்களை நீக்கி விடவேண்டும். சில சமயங்களில் சிலவற்றைச் சேர்க்கும் சுதந்திரம் நமக்கு உண்டு.

**ஒரு கதையைத் திரைப்படமாக்க நினைக்கும் போது, எந்த வகையான மீடியத்தைத் தேர்வு செய்வீர்கள்?**

கதைக்கு இணையானது எதுவுமேயில்லை. என்னைப் பொறுத்த வரை நான் எப்போதும் இலக்கியத்தையே தேர்ந்தெடுப்பேன்.

**மொழிபெயர்ப்பு பற்றி என்ன நினைக்கிறீர்கள்? உங்கள் படைப்புகள் பல மொழிகளில் மொழிபெயர்க்கப் பட்டிருக்கின்றன.**

அந்தந்த மொழி சார்ந்த வாசகர்கள் சில மொழிபெயர்ப்புகள் மிகச் சிறப்பாக இருக்கிறதென்று என்னிடம் சொல்லியிருக்கிறார்கள். ஒரு மலையாள மொழி படைப்பாளரால் கன்னடத்தில் மொழிபெயர்க்கப் பட்ட நாவல் 'ரெண்டாம் மொழம்.' அது அங்குள்ள என் நண்பர்களிடம் பெரும் பாராட்டைப் பெற்றுள்ளது. எங்களை அவர்கள் எழுத்தாளர்களாக அறிந்திருந்தாலும் தங்கள் மொழியில் ஒரு படைப்பு கிடைக்கும் போது அது அவர்களுக்கு நிறைவைத் தருகிறது.

**ஒரு முன்னாள் பத்திரிகை ஆசிரியராக மீடியாவின் தற்போதைய போக்குக் குறித்து உங்கள் பார்வை என்ன?**

நான் மிக நீண்ட காலம் பத்திரிகைத் துறையிலிருந்தாலும் என் பங்கு இலக்கியம் சார்ந்த வாரப் பத்திரிகை வகையில்தான். எப்போதும் பிற மொழி எழுத்தாளர்களையும் மொழிபெயர்ப்புகளையும் மிக விருப்பத்தோடு அறிமுகப்படுத்தியிருக்கிறேன். அது என் ஆர்வமாக இருந்திருக்கிறது. Republic edition ஒவ்வொரு இந்திய மொழியிலிருந்தும் அதன் ஆசிரியர், கதை குறித்து சிறிய குறிப்புகளோடு ஒரு கதையை மொழிபெயர்த்துப் பிரசுரம் செய்திருக்கிறது. இது சில வருடங்களுக்குத் தொடர்ந்தது. பிறமொழி எழுத்தாளர்களுடன் ஒரு நல்ல உறவு இருந்தது.

**உங்களுக்குள் தாக்கத்தை ஏற்படுத்திய மேற்கத்திய எழுத்தாளர்கள்?**

வெவ்வேறு எழுத்தாளர்கள் வெவ்வேறு சமயங்களில் என்னைப் பாதித்து இருக்கிறார்கள். இன்னமும் வெல்ல முடியாத உன்னத எழுத்தாளர்கள் ஆண்டன் செக்காவும் மாப்பசானும். பிறகு லத்தீன் அமெரிக்க இலக்கியங்களும் நம்மை அணுகத் தொடங்கிவிட்டன.

**உங்கள் நேரத்தை எங்களோடு செலவிட்டதற்கு நன்றி.**

(ஜனவரி 2019இல் எடுக்கப்பட்ட நேர்காணல் இது.)

mail to: **meenmix@yahoo.com**

# முள்ளுப் பாடம்

வலி, இதுவரை அனுபவித்திராத வலி. காலிலிருந்து கடுகடுவென்று மேலெழுந்து பரவி மூளையைத் தீண்டி உடலெங்கும் வாதையைக் கொடுக்கும் வலி. பொறுக்கமாட்டாமல் குரலை அனத்தி வலியை மட்டுப்படுத்த முயற்சி செய்தவாறு சாளைத் திண்ணையில் படுத்திருந்தான் செல்லப்பன். அவன் படுகிற பாட்டைக் கண்டு மனம் தாளாத ஆத்தா ஏதாவது செய்யும்படி அய்யனை நச்சினாள். அவருக்கோ ஓடியாட முடியாத அளவுக்கு மூப்பு கூடிவிட்டது. வேலியடைத்தவர்கள் சொன்ன தகவலைக் கேட்டு தோட்டத்துக்கு வந்துவிட்ட பங்காளிகள் ராசாமணியும் வெங்கடாசலமும் அய்யனுக்கு கண்மறைவாய் பீடி குடித்தவாறு என்ன செய்வதென்று கலந்துகொண்டிருந்தார்கள்.

● **குணா கந்தசாமி**

ஓவியம்: **கண்டி நரசிம்லு**

தெரியாத புதிய வேலையைச் செய்து ஏற்படுத்திக்கொண்ட வினையல்ல இது. ஆடி, ஆவணிகளில் காடெங்கும் முள்ளுச்செடிகளைக் கொத்திச் சுத்தமாக்குவது, வேலா மரங்களின் வாதுகளை அரக்கிவிடுவது, கிளுவை வேலிகளை வெட்டி அடைப்பது மாதிரியான வேலைகள் அவனுக்கு மனப்பழக்கமும் கையோட்டமும் உடையவைதான். கருக்கிடையாகச் செய்யவேண்டிய வேலைகளைச் சூதானத்தைச் சொல்லித்தான் அய்யன் பழக்கியிருந்தார். அவனுடைய வேலைகளும் நுட்பமும் நேக்கும் கொண்டிருப்பவைதான். கண் பார்த்தால் கை செய்யும் என்று அய்யன் பெருமையாக சொல்லுவார். இத்தனை வருஷங்களில் ஒரு சிறுகீறல், காயம் ஏற்பட்டதில்லை. இன்று எப்படியோ பிசகிவிட்டது.



பழையசோற்று நேரம் முடிந்து பொழுது உச்சிக்கு ஏறிக்கொண்டிருந்தது. கிளுவை முட்கள் வாச்சி வாச்சியாக இருந்த வாதுக்குக் கவையை வாகாக முட்டுக்கொடுத்துதான் வெட்டினான். கவையின் பிடியிலிருந்த வாது எப்படி நழுவியதென்று பலமுறை யோசித்தும் ஞாபகத்துக்கு வரவில்லை. உள்ளுணர்வின் அனிச்சையில் வலது காலை பின்னே இழுக்க முயன்ற கணத்தில் புறங்காலில் முள் பாய்ந்துவிட்டது. வலியினால் உடல் நடுங்கிக் கண்களில் பூச்சிகள் பறந்தன. உட்பாய்ந்து முறிந்திருந்த முள்ளின் சொரசொரப்பான மேற்பாகம் தோலோடு ஒட்டியிருக்க ஒரு வினோதமாக துளி சொட்டு ரத்தங்கூட வெளியே கசியவில்லை.

அரிவாளையும் கவையையும் எறிந்துவிட்டு நொண்டியவாறு நகர்ந்து கொழுக்கட்டான் புல்லின் மீது உட்கார்ந்தான். வலியினாலும் கண்ணீரினாலும் பார்வை மங்கலாகிவிட்டது. கூட வேலியடைத்த ஆள்க்காரர்கள் வாதின் தூரை ஆராய்ந்து முள்ளின் நீளத்தை யூகித்துத் திடுக்கிட்டுப் போனார்கள். இடுக்கியை வைத்து எடுக்கும் முயற்சியில் நூலாளவும் முள் அசையாமலிருக்க வலி பொறுக்காமல் அலறினான். பச்சைக் காயத்தில் ஒன்றும் செய்யமுடியாது என்று புரிந்து முள்ளடித்த தாரையில் எருக்கலம்பாலை வழிய விட்டு சாளைக்குக் கூட்டி வந்தார்கள்.

மேவியிருந்த வலியினால் பேச்சுக்குரல்கள் தெளிவாக விளங்கவில்லை. ஏதேனும் மாயம் நிகழ்ந்து வலி தீர்ந்துவிடாதா என்ற ஏக்கம் பெருகினாலும் இந்த முள் தன்னை ஆட்டிப்படைத்துவிட்டுத்தான் தணியும் என்று உள்ளுணர்வுக்குத் தோன்றியது. வலியைத் தாங்குவது குறித்த நம்பிக்கையும் அவநம்பிக்கையும் மாறி மாறி எழுந்தன. கண்ணைத் திறந்தபோது மீண்டும் கண்ணுக்கெதிரே மயமயவென்று பூச்சிகள் பறந்தன. சற்றே நிதானித்துப் பார்வையை நிலைப்படுத்தியபோது எதற்கோ தயங்கி நிற்பதுபோல் தெரிந்த ராசாமணி தூணைப் பிடித்தவாறு சொன்னான்: "தெய்வாகிட்டயே போயிடலாம், அவளுக்கு மீறுன முள்ளு உலகத்துல கிடையாது."

அவர்கள் இதைச் சொல்வார்கள் என்று தெரியும். தெய்வானை எப்படியும் முள்ளை எடுத்துவிடுவாள் என்றாலும் அவளிடம் போனால் இத்தனை நாள்களாக அவன் காத்து நிற்கும் முடிவின் தீர்க்கம் குலைந்துவிடும். அவனை மான ரோஷம் கெட்டவனாக ஊர் பழிக்கும்.

"அவகிட்ட போறதுக்கு நானென்ன மானங்கெட்டவனா? வண்டியப் பூட்டு, ஆஸ்பத்திரிக்கே போலாம்." வரவழைத்துக்கொண்ட உறுதியோடு சொன்னான்.

"அந்த ஓடுகாலிகிட்டப் போனா என்ற மவன் கவுரவம் என்னாகறது?" மகனுக்கு ஆதரவாக ஆத்தா சொன்னாள்.

"பெரீம்மா, சட்டுனு அப்படியெல்லா வார்த்தைய வுட்றக்கூடாது. எனக்கென்னவோ தெய்வாள அப்படி நெனைக்க முடியல. ஏதோ ஒரு வழக்கமில்லாத காரியம் எப்பவோ நடந்துபோச்சு. யாராவது ஒருத்தர் தணிஞ்சு போயிருந்தா இந்நேரத்துக்கு குடும்பம் ஒண்ணாயிருந்துருக்கும்." வெங்கடாசலம் இடைமறித்துச் சொன்னபோது எல்லோரிடமும் சிறுமௌனம் சூழ்ந்தது.

அய்யன் மெதுவாகச் செல்லப்பனிடம் கேட்டார்: "பண்டுவம் பாக்கறதுல என்ன பாவம் வந்துறுது?"

"அது ஆவாதுங்க." முகத்தை வேறுபக்கமாக திருப்பியவாறே தீர்க்கமாகச் சொல்லிவிட்டு கண்களை இறுக்க மூடிக்கொண்டான் செல்லப்பன்.

"செரி, அப்றம் என்ன பண்றது? நாம் போயி வண்டியப் பூட்டறன்."

துண்டை உருமாலாகக் கட்டிக்கொண்டு போன ராசாமணி மயிலையும் பில்லையும் பூட்டிய கூட்டுவண்டியோடு வந்தான். நொண்டியவாறு ஏறி உள்ளே சுருண்டுகொண்டான் செல்லப்பன். கவனம் பேச்சில் குவியாமல் மொத்த உயிரும் முள்ளடித்த தடத்திலேயே இருந்தது. இடையிடையே தெய்வானையின் உருவம் மனதுக்குள் தோன்றி வலியை அதிகரிக்க மனக்காட்சியை அழிக்க முயற்சி செய்துகொண்டிருந்தான்.

"பாதமா இருந்துருந்தா எப்படியாவது களஞ்சு எடுத்துடலாம். இது புறங்கால்ல அடிச்சிருக்குது. அறுத்துத்தான் எடுக்கோணும். அப்படிப் பண்ணுனாலும் புண்ணு ஆறறதுக்கு நாளாகும். கத்திய வைக்காம வேறெதாவது செஞ்சு முள்ள எடுக்கறதுதான் ஆகற காரியமாத் தெரியுது. இந்தப் பக்கத்துல தெய்வானைனு ஒரு அம்மிணி முள்ளுப் பாடத்துல ராசிக்காரங்கனு யாரோ சொன்னாங்க. ஒருதடவப் போய் பாத்துட்டு, காரியம் ஆகலீன்னா பெரியாஸ்பத்திரிக்குப் போயிடுங்க. இந்த மாதிரி வேலைகளுக்கு இங்க கொஞ்சம் சௌகரியம் கம்மி."



தீர்க்கமாகச் சொன்ன டாக்டரிடம் மறுபேச்சு பேச ஏதுமின்றி தலையாட்டிவிட்டுத் திரும்பினார்கள். அவர் கூறியபடி பண்டுவத்திற்கு தெய்வானையிடம் செல்வதே உசிதமானது என்று பேசிப்பேசி செல்லப்பனின் மனதைக் கரைத்துவிட்டான் ராசாமணி. காலில் பாய்ந்திருக்கும் முள்ளின் நீளமும் அதுகொடுக்கும் வலியும் செல்லப்பனின் பயத்தைக் கூட்டிவிட்டன. அவளிடம் செல்வதைத் தவிர்த்து நடைமுறையில் வேறு வழி தெரியவில்லை. ஊர்வாயில் அவன் விழுந்துதான் ஆகவேண்டும்.

வாய்க்கால் மேட்டுத் தடத்தில் வண்டி மேற்கே செல்லும்போது பொழுது சாயத் தொடங்கியிருந்தது. மேகாற்றின் வேகத்துக்குப் பனையோலைகள் ப்பர்ரென்ற ஓசையோடு அதிர்ந்தன. மதியத்தில் மேய்ந்துவிட்டுப் போயிருந்த பண்டம்பாடிகளின் வாசனை கொறங்காடுகளுக்குள் மீந்திருந்தது. வேறொரு நாளாக இருந்திருந்தால் காட்சியிலும் வாசனைகளிலும் லயித்திருப்பான், இன்றைக்கு எல்லாம் காண்கிற கணத்திலேயே குலையும் பிம்பங்களாக இருந்தன.

தெய்வானையைக் காணும்போது என்ன பேசுவது என்ற குழப்பமான யோசனை வலியை மீறி எழுந்தது. அவள் பண்டுவத்திற்கு மறுக்கமாட்டாள். தேடி வருகிறவர்களுக்கு தன் சக்திக்கு உட்பட்டதைச் செய்வது என்பது அவளுக்கு சத்தியவாக்கு. இருந்தாலும் மனம் தடுமாறினான். இந்த சூழ்நிலை நேராதிருந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும் என்று கற்பனை செய்துகொள்வது ஆசுவாசத்தைக் கொடுத்தது.

ராசாமணி வண்டியை விரட்டியதில் மூன்று மைல் தூரத்தை சீக்கிரத்திலேயே கடந்து விட்டிருந்தார்கள். நான்கு வருஷத்திற்கு முன்பு தெய்வானையின் தகப்பனார் தவறியபோது உடலை எடுக்கும் நேரத்தில் வந்து தலையைக் காட்டிவிட்டுச் சென்றதுதான் கடைசியாக வந்தது. தெய்வானையின் தம்பி மனோகரன் அவனுடைய கல்யாணத்துக்குப் பிறகு டார்சு சாளை எடுத்துத் தனியாக குடிபோய்விட்டான். தெய்வானையும்

அவளுடைய தாயார் அங்காத்தாளும் பழைய சாளையிலேயே இருந்தார்கள்.

வாசலிலில் நின்றிருந்த அங்காத்தாள், ராசாமணியின் கைத்தாங்கலாக செல்லப்பன் இறங்குவதைக் கண்டதும் வரவேற்காமல் உள்ளே போய்விட்டாள். இது நடக்கும் என்று யூகித்திருந்ததால் அங்காத்தாளின் புறக்கணிப்பை சாதாரணமாகவே எடுத்துக்கொண்டு சோர்வோடு திண்ணையில் காலை நீட்டி அமர்ந்தான். கட்டித்தாரையில் பால் கறந்து கொண்டிருந்த தெய்வானை கன்றுக்குட்டியை அவிழ்த்துவிடுவதற்கும் ராசாமணி அவளை நெருங்குவதற்கும் சரியாக இருந்தது. பேச்சினூடே ஒருமுறை இந்தப் பக்கமாகத் திரும்பிப் பார்த்தாள்.

கையில் பால் போசியோடு வந்தவளின் முகத்தில் பிரத்யேக உணர்ச்சிகள் எதுவுமின்றி மூன்றாம் மனிதனுக்கு பண்டுவம் பார்க்கிற பாவனைதான் இருந்தது. அதை செல்லப்பன் எதிர்பார்த்திருக்கவில்லை. இன்னுங்கூட நடந்தவற்றிற்காக அவள் வருத்தப்படவில்லை என்று நினைத்தான். அவளுடைய வெறுமையான பார்வையினால் அவனுடைய ஈசு சீண்டப்பட்டாலும் உரிமையற்ற இடத்தில் கொள்ளும் கோபத்திற்கு அர்த்தமில்லை என்று மௌனமாக இருந்துவிட்டான்.

தெய்வானையின் மாநிற லட்சணம் மெலிதாகக் குலைந்து உடல் இளைத்திருந்தாலும் வசீகரம் மிச்சமிருந்தது. அவன் ஆண்டு அனுபவித்த வசீகரம். இருவரிடமும் மிச்சமிருக்கும் இளமையை நினைத்து மனதில் கசப்பு திரண்டது. புன்னகை செய்ய நினைத்தவனின் முகத்தில் துணுக்களவு தசைகூட அசையவில்லை. ஆனால், அவள் அதையெல்லாம் எதிர்பார்த்த மாதிரி தெரியவில்லை. முள்ளடித்த காலை ஆராய்ந்தவள் ஆட்காட்டி விரலால் தாரையைச் சுற்றி வருடியபோது வலி தாளாமல் மூச்செறிந்தான்.

“சிக்கலத்தான் இருக்குமாட்ட இருங்குதுங் மச்சா, ஒருவாரத்துக்கு தெனமும் வெண்ண மந்திரிச்சுப் பூசி காரத்தழை வேவிச்சுக் கட்டோணுங்க.” தன்னிடம் சொல்லாமல் ராசாமணியிடம் சொன்னது எரிச்சலூட்டினாலும் தணிந்த குரலில் கேட்டான்: “வலி ரொம்ப இருக்குது. கொறையறதுக்கு எதாவது வழி இருக்குதா?”

“முள்ள எடுத்து புண்ணு ஆறற வரைக்கும் வலி இருக்கத்தாஞ் செய்யும். தாங்கித்தான் ஆகோணும். இப்ப ஒண்ணும் பண்ண முடியாது. காலைலதா மந்திரிக்கோணும்.” அவனுடைய கண்களைப் பார்த்துச் சொன்னாள்.

ராசாமணியும் வெங்கடாசலமும் மறுநாள் கோழி கூப்பிடும் நேரத்தில் சித்துரக மிளகாய் நாற்று வாங்குவதற்காக தேனிக்குக் கிளம்பும் திட்டத்தில் இருந்தார்கள். ஏற்கெனவே பாத்தி தயாராகி ஆட்களுக்கு சொல்லி வைத்து நடவு தவணையில் இருக்கிறது. தன்னால் அது தாமதப்பட வேண்டுமா என்று யோசித்தவனுக்கு நாளை வண்டி கட்டி கூட்டிவர யாரை அழைப்பது என்ற கேள்வி எழுந்தது. அவர்கள் இருவரைத் தவிர பங்காளிகள் பலரோடு இணக்கமில்லாத சூழலே இருந்தது.

“போலாமாப்பா? போயிட்டுக் காலைல வருலாம்.” ராசாமணி சொன்னான்.

“நீயும் வெங்காட்டானும் நாத்து வாங்கறதுக்கு நாளைக்குத் தேனிக்குப் போறன்னு சொன்னீங்க.”

“அது கெடக்குதுப்பா, ஒருவாரங் கழிச்சுப் பாத்துக்கலாம். மொதல்ல இதுக்கொரு வழி பண்ணுவோம்.”

“வேண்டா வேண்டா, அப்பறம் எல்லாமே தவணையாப் போயிரும். நீங்க போயிட்டு வாங்க. ஊருக்குள்ள சொல்லிவுட்டு யாரையாவது வரச்சொல்றேன்.”

இருவரையும் மாறி மாறிப் பார்த்தவாறு யோசித்த ராசாமணி சொன்னான்: “எதுக்குப்பா முள்ளுக் காலோட அங்கியும் இங்கியும் அலஞ்சுக்கிட்டு? ரெண்டு நாளைக்கு இங்கியே இரு. நானு நாத்து வாங்கிட்டு நாளான்னிக்கு வந்தப்பறம் வேணா தெனமும் வந்துட்டுப் போய்க்கலாம். என்ன தெய்வா நாஞ் சொல்றது? உனக்கொண்ணுஞ் சங்கடமில்லையே?”

எதிர்பாராமல் ராசாமணி அப்படிச் சொன்னதில் செல்லப்பன் திடுக்கிட்டான். இருவரையும் சேர்த்து வைத்துவிடவேண்டுமென்று ஒருகாலத்தில் ராசாமணி முசுவாக இருந்தான். இவன்தான் பிடி கொடுக்காமல் இருந்துவிட்டான். இப்போது முள்ளைச் சாக்காக வைத்து ஏதேனும் தந்திரம் செய்கிறானோ என்ற சந்தேகம் வந்தாலும் அவனென்னவோ யதார்த்தமாகச் சொன்னதுபோலத்தான் இருந்தது.

“இருக்கறவிய இருந்தா எனக்கென்னங்க மச்சா? இது என்ன பொழங்காத எடமா? சனமா? ஒரு சேர அரிசி கூடப்போடறதுல என்ன கொறஞ்சு போயிருது.” சுதாரித்துக்கொண்ட தெய்வானை சொன்னாள்.

அவளே அப்படிக் கூறியபிறகு மறுப்பதில் தயக்கம் எழுந்தது. வலியின் அவஸ்த்தை வேறு கூடிக்கொண்டிருந்தது. அவளுடைய அண்மையில் இருந்தால் வலியைத் தாங்கமுடியாத பட்சத்தில் ஏதேனும் செய்து வலியைத் தணிப்பதற்கு உதவுவாள் என்ற நினைப்பில் ஆமோதிப்பாய்த் தலையசைத்தான்.

“நா வண்டியத் தோட்டத்துல அவுத்து வுட்டுட்டு அய்யங்கிட்ட தகவல் சொல்லிட்டுப் போறன். நாத்து வாங்கிட்டு வந்ததியும் நாளான்னிக்கு பழைய சோத்து நேரத்துக்கு வாறன்.”

ராசாமணி கிளம்பியபிறகு அவன் மட்டும் திண்ணையிலிருந்தான். கண் மசங்கும் மாலைநேரம். காரை வாசலுக்கு அப்பால் அடர்ந்திருந்த செடிகொடிகள், சிறுமரங்களின் பச்சையின் மீது இருட்டு படியத் தொடங்கியது. உள்ளிருந்து வந்த தெய்வானை தோளில் ஆடைகளோடு பக்கவாட்டுக் குளியலறைக்குப் போனாள். அவள் அவனை அலட்சியப்படுத்தாதது ஆறுதலைக் கொடுத்தது. அவர்களுடைய திருமண நாளின் மாலையிலும் இப்படித்தான் திண்ணையில் அமர்ந்திருந்தான். அன்று உறவினர் கூட்டமும் மங்கலமும் நிறைந்திருக்க இருவரின் கண்களில் பரிபாஷை இருந்தது. இன்றைய மாலையோ மூளியாகவும் வலியோடும் இருக்கிறது.

செருமலுக்குக் கண் திறந்தபோது தோளில் குழந்தையோடு மனோகரன் நின்றிருந்தான். செல்லப்பனுக்கும் தெய்வானைக்குமான சங்கடத்தில் மனோகரனுக்கு இவன் மேல் வருத்தமோ புகாரோ இருக்கவில்லை. சொல்லப்போனால் கோபமெல்லாம் தன் அக்காவின் மீதுதான். அவனுடைய வரவை ஆமோதிக்கும் வகையில் முதுகைச் சற்று நிமிர்த்தி அமர்ந்தான். குழந்தை செல்லப்பனையே பார்த்தாள். முள்ளடித்த விவரத்தைக் கேட்டு மெய்யாகவே வருத்தப்பட்டான். தலையில் ஈரத்துண்டோடு தெய்வானை வருவதைக் கண்டு குழந்தை நழுவி ஓடினாள். குழந்தையை தூக்கிக்கொண்டு அவள் உள்ளே போகவும் காலையில் வருவதாகச் சொல்லிவிட்டுப் போனான் மனோகரன். தனியாக அமர்ந்திருந்தவன் மனதில் வெகுநாட்களுக்கு இளஞ்சூடாக காமம் பரவியது.

திண்ணையில் நாற்பது வாட்ஸ் விளக்கு மங்கலாக எரிந்தது. சிறிதுநேரம் கழித்து குழந்தை வாயில் அதக்கிய பிஸ்கட்டோடு வாசல் நிலவினோரம் வந்து நின்று செல்லப்பனையே பார்த்தாள். வலியை மீறி முகத்தில் ஒரு சிரிப்பைப் பொருத்தியவாறு சைகையில் அருகே அழைத்தான். அவளோ சட்டென்று உள்ளே ஓடிவிட்டாள். வெகுநேரத்துக்குப் பிறகு அரிசீம்பருப்பு சோற்றையும் சொம்பு நீரையும் கொண்டு வந்து வைத்தாள் தெய்வானை. அவனுடைய பெயர் பொறிக்கப்பட்ட வட்டில் இன்னும் அங்கிருப்பதைக் கண்டு ஒரு பெருமூச்செறிந்தான்.

**தெ**ய்வானையின் அப்பத்தா பண்டுவத்தில் பெரிய கெட்டிக்காரி. அவளுடைய பண்டுவ நுட்பங்கள் இயல்பாகவே தெய்வானைக்குக் கைவந்தன. எவ்வளவு சிக்கலான முட்களையும் களைவது, கால் ஆணிகளை எடுப்பது, தேள், பூரான் போன்ற விஷக்கடிகளை முறிப்பது போன்றவற்றைச் சராங்கமாகச் செய்தாள். அவள் வேர் அரைத்துக் கொடுத்தால் மஞ்சள் காமாலை குணமாவதாகச் சொன்னார்கள். அதே நேரத்தில் தன் சக்திக்கு மீறிய உபாதைகளோடு வருகிறவர்களை உடனடியாக ஆசுபத்திரிக்குப் போகச் சொல்லிவிடுவாள் தெய்வானை.

அவளிடம் பண்டுவம் பார்க்க அவ்வப்போது யாரேனும் தோட்டத்துக்கு வருவார்கள். செல்லப்பனும் அய்யனும் எதுவும் சொல்லமாட்டார்கள். ஆத்தா ஏதாவது முணுமுணுத்தாலும் தெய்வானை கண்டுகொள்வதில்லை. வீட்டு வேலைகளிலும் காட்டு வேலைகளிலும் கெட்டிக்காரியாக இருந்தாள். ஆனால், சொல் பொறுக்காதவள். ஏதேனும் குத்தலாகச் சொல்லிவிட்டால் மறுகிப்போய்விடுவாள். திருமணமாகி மூன்றாண்டுகள் ஆகியும் கருவுறுவது தள்ளிப்போக ஆத்தா நுணை பேச ஆரம்பித்துவிட்டாள். தெய்வானை மாமியாரோடு பேச்சை நிறுத்திக்கொண்டாள். இத்தனை விவரமறிந்தவள் இதற்கொரு வழி கண்டுபிடிக்கமுடியாதா என்று ஒரிரவில் கேட்டபோது முதுகுகாட்டிப் படுத்துக்கொண்டாள்.

திருமண வாழ்க்கையின் நான்காவது வருஷம் அது. கிழக்கத்துப் பண்டுவர் ஊருக்கு வந்து கோவிலில் தங்கியிருந்தார். அவர் செரவு போட்டால் பெண்களின் விருமத்தி நீங்குவதாகவும் மருந்து கொடுத்தால் சில குறிப்பிட்ட உடல் உபாதைகள் குணமாவதாகவும் பழமை பரவியிருந்தது. ஆணியை விழுங்கிவிட்ட குழந்தையொன்றை சில வருஷங்களுக்கு முன்பு அவரிடம் கூட்டிவந்தபோது இரண்டே நாளில் மலத்தில் வெளியேற்றி எடுத்துவிட்டார் என்று பேசிக்கொண்டார்கள். அடர்முடியும் தாடியுமாய் ஆகிருதியோடு இருந்த பண்டுவரின் அறுபது வயது அவரது தோற்றத்தில் தெரியவில்லை. கனிந்த குரல். மூட்டையாக கட்டி வைத்திருந்த பைகளுக்குள் மூலிகைகளும் தானியங்களும் உலர்ந்த இலைகளும் இருந்தன.

தினமும் மாலைகளில் கோவிலில் கூட்டம் கூடிவிடும். பக்கத்து ஊர்களில் இருந்தெல்லாம் வந்தார்கள். காலைகளிலும் முற்பகல்களிலும் மூலிகைகளையும் வேர்களையும் தேடி தோட்டங்காடுகளுக்குள் அலைவார். அப்படித்தான் தோட்டத்துக்கு வந்தார். இலையில் சோறுபோட்டு உபசரித்த தெய்வானையின் பண்டுவத் திறமைகள் குறித்து யாரோ சொல்லி அவர் கேள்விப்பட்டிருக்க இருவரின் பேச்சும் பண்டுவத்தைப் பற்றி விரிந்தது.

பண்டுவரோடு பேசப்பேசத்தான் தனக்கு எவ்வளவு குறைவாகத் தெரிந்திருக்கிறது என்பதைப் புரிந்துகொண்டாள். சிலவற்றை எவ்வளவு துருவிக் கேட்டாலும் ரகசியத்தை நோக்கிய பயணத்துக்கு சில பிடிமானங்களை மட்டும் கொடுத்துவிட்டு புன்னகையோடு நழுவி விடுகிறவராகவும் இருந்தார் பண்டுவர். கொடிகளையும் இலைகளையும்



வேர்களையும் பிடுங்கிவந்து ஆராய்ந்தவாறு யோசனையிலிருந்தாள் தெய்வானை. வழக்கமான வேலைகளின் சுணக்கம் ஏற்பட்டு அடுப்பில் பால் பொங்கியது, சோறு பற்றியது. ஆத்தாள் மகனிடம் எந்நேரமும் மருமகளைப் பற்றி கோள் மூட்டிக்கொண்டிருந்தாள்.

மூன்றாவது நாள் பண்டுவர் தோட்டத்துக்கு வந்து கண் வலி கிழங்கைப் பரப்பி வைத்து எதையோ சொல்லிக்கொண்டிருந்தபோது ஆத்தாள் முகத்தைக் காட்டிவிட்டாள். அவனுக்குங்கூடப் பண்டுவரின் வருகையும் பேச்சும் பிடிக்கவில்லை. அவருடைய அண்மையில் தெய்வானை கொமுரி கணக்காக நடந்துகொள்கிறாள் என்று நினைத்தவனுக்கு பண்டுவன் ஏதாவது வசியம் வைத்துவிட்டானா என்ற சந்தேகங்கூட எழுந்தது.

போகக்கூடாது என்று தடுத்தும் நான்காவது நாள் முற்பகலில் கிளம்பிப்போய் பண்டுவரோடு காடு காடாகச் சுற்றிவிட்டு சாயங்காலமாக வந்தாள். தன்னுடைய பேச்சை மதிக்காமல் போனவளை மூர்க்கத்தோடு அடிக்கச்சென்றவனை அய்யன்தான் தடுத்து நிறுத்தினார். அடுத்த நான்கு நாட்களுக்கு மௌனமாக வீட்டுக்குள்ளேயே அடைந்து கிடந்தாள். அவளுடைய வீம்பைக் அவனும் கண்டுகொள்ளவில்லை.

ஊரைவிட்டுக் கிளம்புகிற அன்று பண்டுவர் தோட்டத்துக்கு வந்தார். புகையிலைக் காட்டுக்கு தண்ணீர் கட்டிக்கொண்டிருந்தான். நேராக அவனிடம் வந்தவர் அம்மிணியிடம் சொல்லிவிட்டுப் போவதற்காக வந்தாகச் சொன்னார். பீடை ஒழிந்தது என்று நினைத்தவாறு சாளைக்குப் போகச் சொன்னான். அரைமணி நேரம் கழித்து பண்டுவர் உணவுண்ட இலையை வேலியோனோரம் வீசுவது தெரிந்தது. அன்றிரவு அவளைச் சமாதானப்படுத்தி நெருங்கியபோது மறுக்காமல் அனுமதித்தாள்.

பண்டுவர் கிளம்பிப்போன மூன்றாவது நாள் அதிகாலையில் தெய்வா காணாமல் போய்விட்டாள். இரவில் அவனருகில்தான் படுத்திருந்தாள். எந்நேரத்தில் எப்படி அரவமின்றிப் போனாள் என்பது புதிராக இருந்தது. இரவில் நாய் உலைத்த சத்தமும் கேட்கவில்லை. கோபித்துக்கொண்டு மாமனாரின் தோட்டத்துக்குப் போயிருப்பாளோ என்று சென்று பார்த்தான். தெய்வானை காணாமல் போன தகவல் மதியத்துக்குள் ஊருக்குள் பரவி பல ரூபங்கள் எடுத்துவிட்டது. எல்லா கதைகளும் அவளைப் பண்டுவரோடு முடிச்சுப்போட்டு உலவின.

உடலும் மனமும் மரத்து அவன் தோட்டத்தைவிட்டு நகரவில்லை. ஊர் சொல்கிற கதைகளை அவனுடைய ஆழ்மனம் நம்பாவிட்டாலும் அவளுடைய நடத்தையால் ஏற்பட்டுவிட்ட அவப்பெயர் வதைத்தது. ராசாமணியும் மனோகரனும் பண்டுவரின் ஊரைத் தேடி கிழக்கே போனபோது அவர் ஊருக்கு வந்தே பல மாதங்கள் ஆனதாகச் சொன்னார்கள். ஒருவாரத்திற்கு மேலே அலைந்து திரிந்தும் எந்தப் பலனும் கிடைக்கவில்லை. இனி வழியில்லை, கேஸ் கொடுத்துவிடலாம் என்று மற்றவர்கள் சொன்னபோது முடிவெடுக்கமுடியாமல் மறுகினான் செல்லப்பன்.

பன்னிரெண்டாவது நாள் விடியலில் மாற்றுத்துணி எடுத்துப்போயிருந்த பையோடு தெய்வானை வாசலுக்குள் வந்தபோது செல்லப்பன் திண்ணையில் டீ குடித்தவாறு அமர்ந்திருந்தான். அச்சமோ களங்கமோ எதுவுமின்றி எல்லாமே வழக்கமான விதத்தில்தான் நடக்கின்றன என்ற பாவனையோடு நின்றிருந்தாள். கத்துவதற்கு வாயெடுத்த ஆத்தா பிறகு அமைதியாகி மகனையே பார்த்தாள். செல்லப்பன் ஏதாவது சொல்வானென்று நின்ற தெய்வானை அவன் மௌனமாக இருக்கவும் உள்ளே நுழைய காலை எடுத்துவைத்தாள். தோளில் கிடந்த துண்டை எடுத்து சட்டென்று குறுக்கே வீசினான்.

“நீ பத்தினின்னா இந்தத் துண்டத் தாண்டிட்டு உள்ளே போ.”

எங்கு போனாள், ஏன் சொல்லாமல் போனாள் என்று பொறுமையாக கேட்கத்தான் நினைத்திருந்தான். ஆனால், மனதின் எந்த மூலையில் இருந்து அந்தக் கேள்வி வெளிப்பட்டது என்று புரியவில்லை. தான் அப்படிக் கேட்டுவிட்டது அவனுக்கே அதிர்ச்சியூட்டினாலும் பாரம் இறங்கி மனம் இப்போது சுமையில்லாததாகத் தோன்றியது. அவனுடைய வார்த்தைகளைக் கேட்டு ஒரு கணம் உறைந்திருந்தவளின் கன்னச்சதைகள் துடித்தன. சட்டென்று பின்னால் நகர்ந்தவள் திரும்பிப் பார்க்காமல் வெளியேறினாள்.

திண்ணையில் படுத்திருந்தவனுக்கு வலியினாலும் தாறுமாறான கனவுகளாலும் சரியான உறக்கம் கூடவில்லை. உடலுக்கு அசதியூட்டிய கனவுகள். விடியலில் சற்று கண்ணசந்தவன் கிழக்கு வெளுக்கும்போது கதவு நீக்கப்படும் ஓசைக்கு விழித்துவிட்டான். தெய்வானை பால்கறக்கப் போனாள். எழுந்து அமர்ந்தவனின் கண்கள் அனிச்சையாக முள்ளடித்த காலை வெறித்தன.

இத்தனை மன ஆயாசத்தோடு ஒரு காலைப்பொழுது இதுவரை விடிந்ததில்லை. பேசாமல் நேற்று தோட்டத்துக்குப் போய்விட்டு இன்று வந்திருக்கலாமோ, ராசாமணி சொன்னபோது ஏதோவொரு பலகீனத்தில் ஒப்புக்கொண்டது பிழையாகத் தெரிந்தது. பெருமூச்சோடு எழுந்து மெதுவான அடிகள் வைத்து குளியலறையில் வாய் கொப்பளித்து வந்தான். கிழக்கே பொழுது தகதகவென்று மேலேறியது.

பால் கறந்துவிட்டு வந்தவளின் முகத்தில் ஏதேனும் இளக்கம் இருக்கிறதா என்று தேடினாலும் அவளுடைய முகக் குறிப்பில் எந்த மாற்றமும் இருக்கவில்லை. சாளைக்குள்ளிருந்து காரத்தழை வணக்கப்படும் வாசனை காறலோடு வந்தது. வெந்நீரில் நனைத்த ஈரத்துணியால் முள்ளடித்த புறங்காலை தெய்வானை சுத்தப்படுத்தியபோது வலி தாளாமல் வாயூதினான். வெண்ணெயையும் வணக்கப்பட்ட காரத்தழையையும் கொண்டுவந்து வைத்த அங்காத்தாவின் முகத்தில் இன்னும் இணக்கமற்ற பாவம்தான் இருந்தது. தூக்கக் கலக்கத்தோடு உள்ளிருந்து வந்த மனோகரனின் குழந்தை அத்தையின் காரியத்தைப் பார்த்தவாறு கதவினோரம் நின்றுகொண்டாள்.

குளிர்ச்சியான வெண்ணெய்யை முள்ளடித்த தாரையிலும் புறங்காலிலும் சொதம்ப நீவியபோது அவளுடைய உதடுகள் எதனையோ முணுமுணுத்தன. வெண்ணெயை நீவியவுடன் இளஞ்சூடாக இருந்த காரத்தழையை முள்தாரையின் மீது வைத்து உலர்ந்த வெள்ளைத்துணியால் காலைச் சுற்றிக் கட்டுப்போட்டாள். அந்தப் பண்டுவம் மனதுக்கு சற்று இதத்தைக் கொடுத்தது.

"வெண்ணை கால எளக்கறதுக்கு, எளக எளக காரத்தழ அந்த எளக்கத்த உறிஞ்சி முள்ள மெதுவா மேல கொண்டாந்துறும். நாலஞ்சு நாள் இதைச் செய்யோணும்." அவள் சொல்லியதைக் கேட்டுத் தலையாட்டினான்.

பொழுது கழிவது சிரமமாக இருந்தது. தென்னை மரத்தின் நிழலடிக்குப் போய் அமர்ந்துகொண்டான். அங்கிருந்து தோட்டம் முழுமையும் தெரிந்தது. மனோகரன் சுறுசுறுப்பாக அலைவதையும் ஆட்களிடம் வேலை வாங்குவதையும் வெறித்தான். மனதுக்குள் ஏதேதோ யோசனைகள். இங்கிருந்து போய்விட்டால் நிம்மதியாக இருக்கமுடியும் என்றும் தோன்றியது.

நேரத்துக்கு நேரம் தெய்வானை சோறு போட்டாலும் விருப்பமின்றி அரைவயிறு மட்டும் உண்டான். அன்றைய மாலையிலும் மனோகரனின் மகள் உறங்குவதற்கு அங்குதான் வந்தாள். தங்களுக்கு ஒரு குழந்தை இருந்திருந்தால் இந்நேரத்துக்கு ஏழெட்டு வயதாகியிருக்கும் என்று நினைத்தான். முந்தைய நாளைப் போலில்லாமல் இன்று அலைகழிப்புகள் குறைந்து மனம் சமனப்பட்டிருந்தது. மறுநாளும் நேரத்திலேயே முள்ளடித்த காலுக்கு வெண்ணெய் நீவி காரத்தழையோடு கட்டுப் போட்டுவிட்டாள். எப்போது ராசாமணி வருவானென்று வண்டித் தடத்தையே பார்த்துக்கொண்டு காத்திருந்தான். நடவு வேலையால் நேரம் தளுங்கிவிட்டதாகச் சொல்லியவாறே ராசாமணி வந்தபோது பொழுது உச்சிக்கேறியிருந்தது.

தோட்டத்துக்குத் திரும்பியபின்னரே சற்று விடுதலையாக உணர்ந்தான். இரண்டு நாள்களாக தண்ணீர் வார்க்காதவனுக்கு உடலெல்லாம் கசகசத்தது. முள்ளடித்த காலுக்கு நீர் படாதவாறு யூரியாச் சாக்கை கட்டிகொண்டு மேலுக்கு வார்த்துக்கொண்டபிறகுதான் சடவு நீங்கியது. அய்யனிடமும் ஆத்தாளிடமும் ராசாமணி விவரம் சொல்லிக் கொண்டிருந்தான்.

அடுத்தடுத்த நாள்களில் ராசாமணியும் வெங்கடாசலமும் மாறி மாறி அவனைத் தெய்வானையிடம் கூட்டிப்போனார்கள். மெல்லப் புறங்கால் சுரந்து உறைந்திருந்த முள்ளின் இருப்பை உணர்ந்தான். வேலை செய்வதற்கு வழியின்றி வெறுமனே அமர்ந்திருந்தவனின் பொழுதுகளை தெய்வானை ஆக்ரமித்தாள். அவளுடைய உடலின் வாசனை, அவனுக்கு மட்டுமேயான அவளுடைய சில பிரத்யேக அங்க அசைவுகள் என அந்தரங்கமான நினைவுகள் பலவும் சூழ்ந்தன. காலின் வலியையும் தாண்டி நள்ளிரவுகளில் அவளுடனான முயக்கக் கனவுகள் எழுந்தன.

ஏழாவது நாளில் கட்டை அவிழ்க்கும்போது முள் விரற்கடையளவு வெளியே நீண்டிருந்ததைக்கண்டு உடல் லேசாக விதிர்த்தது. புறங்காலை மெலிதாக அழுத்திப் பார்த்தவள் சட்டென்று முள்ளைப் பிடுங்கிவிட்டாள். உடலெங்கும் மின்னதிர்வாய் பாய்ந்த வலியை பற்களைக் கடித்துத் தாங்கிக்கொண்டான். வெளியே எடுத்த கிளுவை முள்ளின் நீளம் நடுக்கமூட்டியது. தாரையில் ரத்தமும் சீழும் நிணமும் கலந்து வழிந்தன. சுத்தப்படுத்தி வணக்கிய காரத்தழையை மட்டும் வைத்துக் கட்டிவிட்டாள்.

"ரெண்டு மூணு நாளுக்கு காரத்தழைய மட்டும் வணக்கி கட்டிக்குங்க. வலி மெதுவாக் கொறையும். புண்ணு ஆறறதுக்குப் பத்து பதினஞ்சு நாளாகும்.

அது வரைக்கும் பாங்கா இருக்கோணும். உனி வேறொண்ணும் பண்டுவந் தேவையில்லை.”

மனோகரனைப் பார்த்து வருவதாகச் சொல்லிவிட்டு பீடியைப் பற்றவைத்துக்கொண்டு நடந்தான் ராசாமணி. அங்காத்தாள் காட்டுக்குப் போயிருக்க இருவர் மட்டும் சாளையில் தனித்திருந்தார்கள். அவளிடம் மன்னிப்புக் கேட்கவேண்டும் என்ற எண்ணம் எழுந்தாலும் ஏதோவொரு எதிர்ப்புணர்வு சொற்கள் கட்டி வைத்தது. கண்களில் மட்டும் சட்டென்று நீர் கோர்த்துவிட்டது. நடுங்கும் குரலில் சொன்னான்: “நாஞ் சொன்னது தப்புத்தான். எதோ ஆத்தரத்துல சொல்லிட்டன். மன்னிச்சுரு. ஆனது ஆயிப்போச்சு. தோட்டத்துக்குப் போலாம் வா.”

அவனுடைய கண்களையே வெறித்தவள் நிதானமாக எழுந்து கால்களை அகட்டி சேலையைத் திரைத்து உயர்த்திக் காட்டியவாறே கேட்டாள்: “இது சுத்தமா இருக்கறங்கற நம்பிக்க இப்ப வந்துருச்சா?”

திகைத்துப்போனவன் சட்டென்று முகத்தை விலக்கிக்கொண்டான். அவளுடைய ஆழத்தில் அவன் இறைத்த சொல்லின் முள் இன்னும் உறைந்திருப்பதைக் கண்டான். அதைக் களையும் பாடத்தைக் காலம்தான் அவனுக்குச் சொல்லிக்கொடுக்க வேண்டும். நொண்டியவாறு வெளியே வந்து தூரத்தில் மனோகரனோடு பேசிக்கொண்டிருந்த ராசாமணிக்கு வண்டியைப் பூட்டுமாறு சைகை செய்தான். ●

*mail to:* **gunakandasamy79@gmail.com**

## உமாமோகன்

# புன்னகை பூத்த முகம்

பத்து ஆண்டுகளுக்கு முன்பு சென்னை புத்தகக் காட்சியில்தான் கவிஞர் உமா மோகனை முதன்முதலாகச் சந்தித்தேன்.

● பாவண்ணன்

அன்று மாலையிலேயே கண்காட்சிக்கு வந்துவிட்ட நான் ஒரு சுற்று எல்லாக் கடைகளிலும் ஏறி இறங்கிவிட்டு இரண்டாவது சுற்றில் சந்தியா பதிப்பகத்துக்கு வந்து சேர்ந்தேன். அப்போது உமா மோகனும் வண்ணதாசனும் அங்கு நின்றிருந்தனர். வண்ணதாசன் என்னை அவருக்கு அறிமுகப்படுத்தினார். உமா மோகன் புன்னகைத்தபடியே, "என்ன சார் நீங்க? எங்க ஊருக்காரர எனக்கு அறிமுகப்படுத்திறீங்களா? அவரைப் பார்த்ததில்லையே தவிர, நிறைய படிச்சிருக்கேன்" என்று கூறினார். "அப்படியா, சரி சரி" என்று சிரித்துக்கொண்டார் வண்ணதாசன்.

வண்ணதாசனுடைய கையில் உமா மோகனின் கவிதைத் தொகுதி இருந்தது. அதன் அட்டையில் புதுச்சேரி கவர்னர் மாளிகையை ஒட்டி நின்றிருக்கும் ஆயி மண்டபத்தின் படம் இருந்தது. ஆயி மண்டபம் மாபெரும் தாஜ்மகாலைப் போன்ற உருவத்தைக் கொண்டதல்ல. ஆயினும் சிறு வடிவத்திலேயே கண்களை நிறைக்கும் அழகான கட்டமைப்பைக் கொண்ட மண்டபம். தாஜ்மகாலைப் பார்க்கச் செல்லும் சுற்றுலாப் பயணியர் பலரும் அதன் முன்னால் நின்று படமெடுத்துக்கொள்வதுபோல, புதுச்சேரிக்கு வரும் பயணியர் பலரும் அந்த ஆயி மண்டபத்தின் முன்னால் நின்று படம் எடுத்துக்கொள்வது வழக்கம். அந்தக் காலத்தில் ஆயி மண்டபத்தின் முன் ஒருவர் நிற்க, இன்னொருவர் படமெடுப்பார். இன்று ஒவ்வொருவரும் பிறர் துணையின்றி தற்படம் எடுத்துக்கொள்கிறார்கள்.



'ஆயி மண்டபத்தின் முன் ஒரு படம்' என்னும் தலைப்பிட்ட தன் கவிதைத் தொகுதியை உமா மோகன் தன் பையிலிருந்து எடுத்து கையெழுத்து போட்டு எனக்குக் கொடுத்தார். எழுத்துகளை உருண்டையான பெரிய வடிவில் அவர் எழுதிய முறை எனக்கு மிகவும் பிடித்திருந்தது. புதுச்சேரி வானொலி நிலையத்தில் வேலை செய்வதாகவும் அடுத்தமுறை புதுச்சேரிக்கு வரும்போது நிலையத்துக்கு வரவேண்டும் என்றும் சொன்னார். நான் அந்த அழைப்பை ஏற்றுக்கொண்டேன். அவருக்கு உதவி செய்ய அவரோடு ஓர் இளம்பெண்ணும் வந்திருந்தார். கண்காட்சியில் சுற்றியலைந்த பிறகு புதுச்சேரிக்குப் புறப்பட்டுச் செல்லவேண்டும் என்று சொல்லிக்கொண்டே இருந்தார். ஆனால் உரையாடலில் ஆர்வம் கொண்டவராக புதிது புதிதாகக் கேள்வி கேட்டு உரையாடலை வளர்த்துக்கொண்டே இருந்தார். "நேரமாகலையா? இனிமேல எங்க போய் சாப்ட்டு, எத்தனை மணிக்கு ஊரு போய் சேருவீங்க?" என்று தயக்கத்துடன் கேட்டேன். "எப்படியும் பன்னெண்டு மணிக்குள்ள போயிடுவேன்" என்று புன்னகைத்தபடி சொன்னார்.

நான் ஊருக்குத் திரும்பி வந்த பிறகு அவருடைய தொகுப்பைப் படித்துவிட்டு ஒரு கடிதம் எழுதி அனுப்பினேன். அது அவருக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. அக்கடிதத்தைப் பற்றி அதற்குப் பிறகு பலமுறைநினைவுகூர்ந்துசொல்லிக்கொண்டே இருந்தார்.

அந்தத் தொகுதிக்குப் பிறகு உமா மோகன் மேலும் இரு கவிதைத் தொகுதிகளையும் ஒரு சிறுகதைத் தொகுதியையும் எழுதி வெளியிட்டார். புத்தகம் தயாராகி வெளிவந்ததுமே எனக்கு அனுப்பி வைத்துவிடுவார். 'கனவு செருகிய எரவாணம்' தொகுதி எனக்கு மிகவும் பிடித்திருந்தது. புதுவகைகளில் அவர் உருவாக்கி எழுதும் பல சொல்லாட்சிகள் நினைத்து நினைத்து ரசிக்கத்தக்கவை.

ஓலை வேய்ந்த கூரை வீடுகளைப் பார்த்தவர்களுக்கு எரவாணம் என்றால் என்ன என்பது தெரியும். தபால்காரர் கொடுத்துவிட்டுச் செல்லும்



அஞ்சலட்டைகள், பால்கணக்குச் சீட்டு, மளிகைக் கடைச் சீட்டு, சீப்பு, ரிப்பன் என ஏராளமான பொருட்களை அந்த எரவாணத்தில்தான் செருகி வைத்திருப்பார்கள். ஓர் அலமாரித் தட்டில் வைக்கத்தக்க எல்லாப் பொருட்களுக்கும் எரவாணம்தான் பொருத்தமான அடைக்கலம். 'கனவு செருகிய எரவாணம்' என்று குறிப்பிட்டதுமே அது நம் மனத்தைக் குறிக்கும் படிமமாக மாறிவிட்டது. கனவு, இனிப்பு, கசப்பு, சிரிப்பு என எல்லா அனுபவங்களையுமே இன்று நாம் அந்த எரவாணத்தில்தானே செருகி வைத்திருக்கிறோம்.

உமா மோகன் தன் தொகுதிக்குச் சூட்டியிருந்த இந்த தலைப்பு என்னை வெகுதொலைவுக்கு அழைத்துச் சென்றுவிட்டது. நான் அதைப் பற்றியும் அவருக்கு எழுதியிருந்தேன். அவருடைய 'சிப்பம் கட்டிய கடல்' என்னும் அருமையான சொல்லாட்சியையும் மறக்கவே முடியாது.

கொரானா காலத்துத் துன்பங்கள் அனைவருமே அறிந்த வரலாறு. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான துன்பம். அதை ஒவ்வொருவரும் அவரவருக்கே உரிய வழிகளில் எதிர்கொண்டு கரையேறி மீண்டு வந்தனர். நோயில் சிக்கி மீண்டு வந்தவர்களில் உமா மோகனும் ஒருவர். இருளடர்ந்த அந்தக் காலத்தை அவர் தன் கவிதைகள் வழியாகவே கடந்துவந்தார். அந்த மன உறுதி அவரிடம் இருந்தது. அக்காலத்தில் அவர் எழுதிய கவிதைகளை 'முகம் அழிந்த காலம்'

தொகுதியாகவும் கொண்டுவந்தார். கவிதை, சிறுகதை, கட்டுரை, நாவல் போன்ற இலக்கிய வகைமைகள் எல்லாம் பலருடைய வாழ்வில் மிகச்சிறந்த மாமருந்தாக விளங்கியிருக்கின்றன.

புதுவை வானொலிக்காக ஓராண்டு இடைவெளியில் அவர் என்னை இருமுறை நேர்காணல் செய்தார். ஒன்று மிகச்சிறிய நேர்காணல். பத்து நிமிடங்கள் மட்டுமே கொண்டது. இன்னொரு நேர்காணல் அரைமணி நேரத்துக்கும் மேல் நீளமானது. இடையிடையே சில பாடல்களோடு அந்த நேர்காணல் பகுதியை அவர் அழகாக அமைத்திருந்தார். ஒருசில வாரங்கள் கழித்து கைபேசியில் உரையாடும்போது, அந்நேர்காணல் குறித்து பல நேயர்களிடமிருந்து கடிதங்கள் வந்ததாகத் தெரிவித்தார். அதற்குப் பின்பு ஒரு தனி உரைக்காகவும் அழைத்திருந்தார். அந்த உரையை முடித்துவிட்டு விடைபெறும்போது மேசையின் இழுப்பறையிலிருந்து ஒரு புத்தகத்தை எடுத்து கையெழுத்திட்டு என்னிடம் கொடுத்தார்.

'ராஜகுமாரி வீடு வழியில் இருந்தது' என்பது அப்புத்தகத்தின் தலைப்பு. அவருடைய புதிய கவிதைத்தொகுதியாக இருக்கக்கூடும் என்றுதான் நான் முதலில் நினைத்தேன். பிரித்துப் பார்த்தபோதுதான் அது சிறுகதைத் தொகுதி என்பதை உணர்ந்தேன். "கவிதைக்குள்ள அடங்காத சில விஷயங்கள் மனசுல இருந்தது சார். அதுங்களையெல்லாம் கதைகளாத்தான் சொல்லமுடியும்னு தோணிச்சி. அதன் விளைவுதான் இந்தத் தொகுப்பு" என்றார். புதியதொரு வகைமைக்குள் அவர் மிக எளிதாக தன்னைப் பொருத்திக்கொண்ட விதம் எனக்கு மிகவும் பிடித்திருந்தது. "வாழ்த்துகள். தொடர்ந்து இப்படியே எழுதுங்கள். கதைக்குள்ள அடங்க மறுக்கிற சில விஷயங்களும் உங்களுக்கு சீக்கிரமே கெடைக்கணும். அதை நீங்க ஒரு நாவலா எழுதணும்" என்றேன். புன்னகையோடு அந்த வாழ்த்தை அவர் ஏற்றுக்கொண்டார்.

வானொலி நிலையத்தில் அவருக்கு இயக்குநராக அப்போது கண்ணையன் தட்சிணாமூர்த்தி இருந்தார். அவரும் என் மனைவியின் தங்கையுடைய கணவரும் பணிநிமித்தமாக தில்லியில் ஒரே சமயத்தில் பயிற்சி பெற்றவர்கள் என்கிற வகையில் அவருடைய அறிமுகம் இருந்தது. தொலைபேசி வழியாக மட்டுமே ஒருசில முறை அவரோடு பேசியிருந்தேன். நேஷனல் புக் டிரஸ்ட்டுக்காக அவர் ஏராளமான நூல்களை ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழிபெயர்த்திருக்கிறார். அவரைச் சந்திக்கச் செல்லும்போதெல்லாம் உமா மோகனையும் உமா மோகனைச் சந்திக்கச் செல்லும்போதெல்லாம் அவரையும் சந்திப்பதும் வழக்கமாகிவிட்டது. இருவருமே இலக்கிய உரையாடல்களில் ஆர்வம் கொண்டவர்களாக இருந்ததால், பொழுது போவது தெரியாமலேயே பேசிக்கொண்டிருப்போம்.

இந்தியா விடுதலையடைந்து எழுபத்தைந்தாவது ஆண்டு தொடங்குவதை முன்னிட்டு வானொலி நிலையத்தில் ஏதேனும் புதிய நிகழ்ச்சியைத் தொடங்க நினைத்த உமாமோகன் தேச விடுதலையில் மகளிர் ஆற்றிய பங்கினை அனைவருக்கும் தெரியச்செய்யும் வகையில் ஒரு புதிய நிகழ்ச்சியைத் தொடங்கினார். ஆர்வத்தோடு பலவேறு தகவல்களைத் திரட்டி சிறுசிறு கட்டுரைகளாகவும் எழுதினார். 365 பேர்களைப் பற்றிய தகவல்களைத் திரட்டவேண்டும் என்பது அவருடைய இலக்காக இருந்தது. கவிதை, சிறுகதை அனைத்தையும் நிறுத்திவிட்டு, திடுமென ஆவணமாக்கச் செயலில் தன்னை முழுமையாகவே ஈடுபடுத்திக்கொண்டார். 365 ஆளுமைகளைப் பற்றிய அனைத்துத் தகவல்களையும் திரட்டி வைத்துக்கொண்டு எழுதி நூலாக்க வேண்டும் என்பதுதான் அவருடைய ஆரம்ப விழைவாக இருந்தது. ஆயினும் ஒலிபரப்புக்கான கட்டுரைகளை வேகவேகமாக எழுத வேண்டிய தேவை இருந்ததால், ஓர் ஆளுமையைப் பற்றிய தகவல் கிடைத்ததுமே எழுதி முடிப்பதை வழக்கமாக வைத்துக்கொண்டார். அவர் தனக்குத்தானே வகுத்துக்கொண்ட விதி அது. அந்த விதியின்படி ஒழுகியதால்தான் அந்த வேலையை அவரால் வெகுவிரைவில் சாதிக்க முடிந்தது. தன் அயராத உழைப்பின் வழியாக ஐந்து தொகுதிகளை அடுத்தடுத்து கொண்டுவந்துவிட்டார்.

கடந்த 2024ஆம் ஆண்டு ஜூன் மாத இறுதியில் வானொலி நிலையத்தில் செய்திப் பிரிவில் துணை இயக்குநராக பணிபுரிந்த என் மனைவியின் தங்கையுடைய கணவர் ஓய்வு பெற்றார். அவரை வழியனுப்பும் விதமாக வானொலி நிலையத்தில் நடைபெற்ற பிரிவுபச்சார விழாவில் கலந்துகொள்வதற்காக நான் சென்றிருந்தேன். வாழ்த்திப் பேசும் பேச்சாளர்களில் ஒருவனாக நான் இருந்தேன். உமா மோகன் அந்த நிகழ்ச்சியின் ஒருங்கிணைப்பாளராக இருந்தார். நிகழ்ச்சி நிறைவுற்றதும் உமா மோகனைச் சந்திப்பதற்காக அவருடைய அறைக்குச் சென்றிருந்தேன். வீரமகளிர் தொடர்பான ஐந்து தொகுதிகளும் அவருடைய மேசையில் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. எல்லாமே 'ஹெர் ஸ்டோரிஸ்' வெளியீடுகள். நான் ஒவ்வொன்றாக எடுத்துப் பார்த்தேன்.

"சீக்கிரமாவே ஆறாவது தொகுதி வேலையை முடிச்சிருவேன் சார். அத்தோடு 365 பேர்னு நான் வகுத்துகிட்ட இலக்கு முடியுது. அந்த ஆறாவது தொகுதிக்கு நீங்கதான் சார் சிறப்பு முன்னுரை எழுதித் தரணும்." பேச்சோடு பேச்சாக உமா மோகன் தன் வேண்டுகோளை முன்வைத்தார். ஒரு தகவலைத் திரட்டுவது என்பது எவ்வளவு கடுமையான பணி என்பதை அறிந்தவன் என்பதால், அவருடைய கோரிக்கையை அக்கணமே ஏற்றுக்கொண்டேன்.



உமா மோகனுடன் பாவண்ணன்

“தியாகிகள் பத்தின ஒரு புத்தகத்துக்கு முன்னுரை எழுதறதுல எனக்கு ரொம்ப சந்தோஷம். உங்க எழுத்து வேலை முடிஞ்சதுமே எனக்கு ஒரு செட் பிரிண்ட் அவுட் அனுப்பி வச்சிடுங்க. நேரம் கிடைக்கும்போது நான் கொஞ்சம் கொஞ்சமா படிச்சி முடிச்சிடுவேன். அதுக்கப்புறம் ஒரு ரெண்டுநாள்ல முன்னுரையை கொடுத்துடுவேன். கவலையே வேண்டாம்” என்றேன்.

“அப்படியே செய்யறேன் சார்” என்றார் உமா மோகன்.

அவருக்கு இன்னும் கொஞ்சம் சுறுசுறுப்பூட்டும் வகையில், “இதோ இப்பவே ஆறு மாசம் ஓடிப் போயொடுச்சி. சீக்கிரமா வேலையை ஆரம்பிச்சி செஞ்சீங்கன்னா, வர சென்னை புத்தகக் காட்சிக்குள்ள புத்தகத்தை கொண்டுவந்துடலாம்” என்று சொன்னேன். அச்சொற்கள் உண்மையிலேயெ அவருக்குள் ஒரு மாயத்தை நிகழ்த்தின. “ஆறு மாசம் எனக்குத் தாராளமா போதும் சார். எல்லா வேலையையும் முடிச்சிட்டு உங்களை வந்து சந்திக்கிறேன்” என்று சொன்னார் உமா மோகன்.

சிவக்குமாரின் மகனுக்கு 15.12.2024 அன்று புதுவையில் திருமண வரவேற்பு நடைபெற்றது. அதில் கலந்துகொள்வதற்காக 10.12.2024 அன்றே நான் புதுச்சேரிக்குப் போய்விட்டேன். அச்சமயத்தில் சென்னை புத்தகக் கண்காட்சி 27 முதல் நடைபெறும் என அறிவிப்பும் வந்துவிட்டது. அந்த அறிவிப்பைப் பார்த்ததும் நான் உமா மோகனைத்தான் நினைத்துக்கொண்டேன். அந்த ஆறாவது தொகுதியைப் பற்றிய நினைவும் வந்தது. அவரைச் சந்திக்கலாம் என்றுதான் நினைத்தேன். ஆனால், வெளியே செல்லமுடியாதபடி விடிந்ததிலிருந்து கடுமையாக மழை பொழிந்து கொண்டிருந்தது.

முற்றிலும் எதிர்பாராத விதமாக அவரே அக்கணத்தில் என்னை கைப்பேசியில் அழைத்துவிட்டார். வழக்கமான நலன் விசாரணைகளுக்குப் பிறகு, “முழு தொகுதியும் தயாராக இருக்குது சார். நேரா அச்சுக்குக் கொடுத்துடலாம். உங்க முன்னுரை மட்டும்தான் சார் வேணும்” என்றார். எனக்கும் உடனடியாக அவற்றைப் படிக்கவேண்டும் என விருப்பமாக இருந்தது.

“எரநூறு முன்னூறு பக்கம்லாம் சிஸ்டத்துல படிக்க சிரமமா இருக்கும். ப்ரிண்ட் அவுட்டா இருந்தா சீக்கிரம் படிச்சிடுவேன். ஒரு செட் ப்ரிண்ட் அவுட்டை யார் மூலமாவது இங்க வீட்டுக்கு கொடுத்தனுப்பிறீங்களா? இங்க, நான் சிவக்குமார் வீட்டுலதான் தங்கியிருக்கேன்” என்று கேட்டேன்.

“பழம் நழுவி பால்ல விழுந்தாமாதிரின்னு சொல்றமாதிரி இருக்குது சார். இந்த முன்னுரையே உங்களை இந்த ஊருக்கு உங்களை இழுத்து

வந்திருக்குதுபோல. கூடிய சீக்கிரம் உங்களுக்கு அனுப்பி வைக்கறேன் சார்.''

அடுத்த ஒரு மணி நேரத்தில் யாரோ ஓர் இளைஞர் இரண்டு சக்கர வாகனத்தில் மழைக்கோட்டு அணிந்துகொண்டு வந்து பிளாஸ்டிக் உறை போட்டு மூடிய ஸ்பைரல் பைண்டிங் செய்யப்பட்ட ஒரு பெரிய கையெழுத்துப் பிரதியைக் கொண்டுவந்து கொடுத்துவிட்டுச் சென்றார். வீட்டில் யாருமில்லை. நான் மட்டும்தான் தனியாக இருந்தேன். எல்லோரும் திருமணத்துக்கான பொருட்களை வாங்க கடைத்தெருவுக்குச் சென்றிருந்தனர். அதனால் மதிய உணவுக்குப் பிறகு பிரதியைப் படிக்கத் தொடங்கி ஒரே மூச்சில் இரவு ஏழு மணியளவில் படித்து முடித்தேன். நிறைவாக இருந்தது. நம் நாடு முழுதும் வாழ்ந்த பல்வேறு தியாகப் பெண்மணிகளின் வாழ்க்கை வரலாற்றை நினைக்க நினைக்க பெருமையாக இருந்தது.

அவர்களுடைய தியாகங்களையெல்லாம் நினைவில் திரட்டி அசைபோட்டபடி நடைப்பயிற்சிக்குச் சென்றேன். ஒரு மணி நேரத்துக்குப் பிறகு வீட்டுக்குத் திரும்பி குளித்து முடித்து சூடாக ஒரு தேநீரை அருந்திவிட்டு அத்தொகுதிக்கான முன்னுரையை எழுதத் தொடங்கினேன். பத்து மணிக்கு எழுதி முடித்து அவருக்கு மின்னஞ்சலில் அனுப்பும் நேரத்தில்தான் கடைக்குச் சென்றிருந்தவர்கள் எல்லோரும் வீட்டுக்குத் திரும்பிவந்தனர். முன்னுரையை அனுப்பி வைத்திருப்பதாக கைபேசியில் அவருக்கு ஒரு குறுஞ்செய்தியை மட்டும் அனுப்பிவிட்டு நான் ஓய்வெடுக்கச் சென்றுவிட்டேன்.

அடுத்தநாள் காலையில் உமா மோகனே கைபேசியில் அழைத்தார். முன்னுரை தனக்குப் பிடித்திருப்பதாகச் சொன்னார். ''எப்படி சார் இவ்ளோ சீக்கிரமா படிச்சி முடிச்சி எழுதினீங்க?'' என்று ஆச்சரியத்தை வெளிப்படுத்தினார்.

''பெண்மணிகளைப் பற்றிய வரலாறு என்பது அந்த வேகத்துக்கு ஒரு காரணம். அப்புறம் உங்களுடைய மொழிநடை இன்னொரு காரணம். இந்த நேரத்துல பப்ளிஷர் கைக்குப் போனாதான் சீக்கிரம் புஸ்தகம் தயாராவும்ங்கறது மற்றொரு காரணம்'' என்றேன்.

''நன்றி சார், நன்றி சார்'' என பலமுறை அவர் சொல்லிக்கொண்டே இருந்தார் உமாமோகன்.

15ஆம் தேதி மாலையில் திருமண வரவேற்புக்கு உமா மோகன் வந்திருந்தார். ''முன்னுரையை பப்ளிஷர்ஸ்க்கு அனுப்பி வச்சிட்டேன் சார். நெனச்ச மாதிரியே கண்காட்சிக்குள்ள வந்துடும் சார். ரொம்ப திருப்தியா இருக்குது சார்'' என்றார். நிகழ்ச்சிக்கு வந்திருந்த தம் நண்பர்களை அவர் எனக்கு அறிமுகப்படுத்தினார். நான் என்னுடைய நண்பர்களை ஒவ்வொருவராக அவருக்கு அறிமுகப்படுத்தினேன். மாறிமாறி படங்கள் எடுத்துக்கொண்டோம்.

குடும்ப வேலைகளையெல்லாம் முடித்துக்கொண்டு நான் நேராக பெங்களூருக்கே திரும்பிவிட்டேன். நாலைந்து வாரங்களாக செய்யாமல் விட்ட பல வேலைகள் அடுக்கடுக்காக இங்கு காத்திருந்தன. வீட்டுக்கு வந்ததுமே, அந்த வேலைகளின் அலைகளால் நான் அடித்துச் செல்லப்பட்டுவிட்டேன். வேறெந்த நினைவும் இல்லை.

06.01.2024 காலை எழுந்ததும் வந்திருந்த மின்னஞ்சல்களையும் செய்திகளையும் படிக்கத் தொடங்கினேன். எண்ணற்ற தகவல்களுக்கு நடுவில் மொழிபெயர்ப்பாளர்கள் கண்ணையன் தட்சிணாமூர்த்தியும் வெங்கட சுப்ராய நாயகரும் அனுப்பியிருந்த மரணச்செய்தி வரிகள் திகைக்க வைத்தன. 'உமாமோகன் இயற்கையெய்தினார்' என்னும் இரண்டு சொற்களை என்னால் எளிதில் கடக்க முடியவில்லை. சட்டென்று நெஞ்சில் துக்கம் கவிந்தது.

பத்து நாட்களுக்கு முன்னால் எங்கள் வீட்டுப் பிள்ளைக்கு நடந்த திருமணத்தில் விருந்தினர் வரிசையில் அமர்ந்து எல்லோரோடும் சிரிக்கச் சிரிக்க பேசிக்கொண்டிருந்த உமா மோகன் மரணமடைந்து விட்டார் என்பதையே என் மனம் நம்ப மறுத்தது. புதுச்சேரி நண்பர்களை அழைத்து உரையாடினேன். அனைவருமே அச்செய்தியை உறுதிப்படுத்தினர்.

திருமண நிகழ்ச்சியில் எடுத்த புகைப்படங்களையெல்லாம் கணிப்பொறியிலேயே சேமித்துவைத்திருந்தேன். பல படங்களில் அவர் இருந்தார். பளிச்சென்ற புன்னகை மாறாத முகம். ஒவ்வொன்றாகப் புரட்டிப் புரட்டிப் பார்த்துக்கொண்டிருந்தேன். துயரம் நெஞ்சை அழுத்துவதைத் தாங்கவே முடியவில்லை.

விடுதலைக்கு வித்திட்ட வீர மகளிர் பற்றிய தொகைநூல் அவருடைய வாழ்நாள் கனவாக இருந்தது. கவிதை, சிறுகதை, கட்டுரை என கொஞ்சம் கொஞ்சமாக விரிந்த அவருடைய உலகமும் மொழியும் அந்தத் தொகைநூல் ஆக்கத்துக்காகவே வார்த்தெடுக்கப்பட்டவையோ என்று இப்போது தோன்றுகிறது. தியாகப் பெண்மணிகளின் வரலாற்றை எழுதும் முனைப்பில் தம் படைப்பாக்கப் பணிகளையெல்லாம் தியாகம் செய்து நேரமொதுக்கி ஒற்றை நோக்கத்துடன் உழைத்த அந்த உயர்ந்த உள்ளம் இன்று நம்மிடம் இல்லை. இனி, அவர் இருந்த இடத்தில் அவருடைய நூல்கள் நம்மோடு இருக்கும். அவருடைய புன்னகை மாறாத முகம் என்றென்றும் நம் நினைவில் நீடித்திருக்கும். கவிஞர் உமா மோகனுக்கு அஞ்சலி.

(உமா மோகனின் 'விடுதலைக்களத்தில் வீர மகளிர்' நூலுக்கு பாவண்ணன் எழுதிய முன்னுரை – அடுத்த பக்கம்)

# முத்தைத் தேடி

கராச்சியில் நடைபெற்ற ஒரு மாநாட்டில் காந்தியடிகள் முதன்முதலாக உரையாற்ற நேர்ந்தபோது இந்தியச் சமூகம் பெண்களை நடத்தும் விதத்தைப் பற்றிய தன் ஆற்றாமையை வெளிப்படையாகவே பகிர்ந்துகொண்டார்.

● பாவண்ணன்

நம் குடும்பங்களிலும் இதயத்திலும் ஓர் அரசியாக வைத்து மதிக்க வேண்டிய பெண்களை நாம் நிலம், வீடு, தங்க ஆபரணங்களைப் போன்ற பாதுகாக்கப்பட வேண்டிய சொத்துகளைப் போல நினைத்துக் கொண்டிருக்கிறோம். நம் பிரச்சினைகள் அனைத்தும் அந்தக் கருத்துருவிலிருந்து தொடங்குகிறது என்று குறிப்பிட்டார்.

கூட்டத்தில் அமர்ந்திருந்தவர்கள் அனைவரும் திகைப்புடன் அவரையே அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்தனர். அதைப் பொருட்படுத்தாத காந்தி தன் உரையைத் தொடர்ந்தார். இறைவனின் உருவத்திலேயே சரிபாதியான இடத்தைப் பெண்களுக்குக் கொடுத்திருப்பதை நாம் நம்முடைய புராணக் கதைகளில் படித்திருக்கிறோம். ஆனால், நம் தினசரி வாழ்க்கையில் பெண்களை ஓர் அடிமையைவிட மோசமாக நடத்துகிறோம். பெண்களை அடிமைப்படுத்தி வைத்திருக்கும் சமூகம் மேன்மேலும் முடங்கிச் சுருங்குமே தவிர, ஒருபோதும் ஓங்கி வளர வழியே கிடையாது. ஒரு பெண்ணைத் தாயாகவும் சக்தியாகவும் தலைவியாகவும் கருதிப் போற்றும் சமூகமே மேம்படும் என அழுத்தம் திருத்தமாக கூட்டத்தில் குழுமியிருந்தவர்களைப் பார்த்துக் கூறினார் காந்தி.



சத்தியாகிரகத்தையும் அகிம்சையையும் தம் போராட்ட வழிமுறைகளாக காந்தி அறிவித்த சமயத்தில் அங்கு குழுமியிருந்த பல தலைவர்களும் அவரை விசித்திரமாகப் பார்க்கத் தொடங்கினர். அவருடைய செயல்முறைகள் பெண்கள் மேற்கொள்ளும் செயல்முறைகளை ஒத்திருப்பதாகத் தெரிவித்து நகையாடினர். அவர் ஒரு தலைவருக்குரிய கம்பீரத்துடன் நடந்துகொள்ளாமல் ஒரு பெண்ணைப்போல அமைதி, விரதம் என வேறொரு வழியில் நடப்பதாகக் குற்றம் சுமத்தினர். ஆனால், அத்தகு சொற்களுக்கெல்லாம் செவி கொடுக்காமல் தன் முடிவுப்படியே இயங்கினார் காந்தி. பாலின அடிப்படையில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையில் அமைந்திருக்கும் வேறுபாட்டைத் தவிர, பிற அம்சங்களில் இருபாலினரும் சமமானவர்களே என்பதுதான் காந்தியின் கருத்து.

1915ஆம் ஆண்டில் காந்தி தென்னாப்பிரிக்காவிலிருந்து இந்தியாவுக்கு வந்தார். இரண்டாண்டு காலம் இந்தியா முழுதும் பயணம் செய்து மக்களின் வாழ்வியலை நேரிடையாகவே பார்த்துத் தெரிந்துகொண்டார். அதற்கிடையில் சம்பாரண், கேடா போன்ற இடங்களில் நடந்த போராட்டங்களிலும் வெற்றி கிடைப்பதற்கு அவரே முக்கிய காரணமாக இருந்தார். எளிய விவசாயிகளுக்காக நடைபெற்ற அப்போராட்டங்கள் வழியாக மிகவும் குறுகிய காலத்திலேயே பொதுமக்களின் நம்பிக்கைக்குரிய தலைவராகவும் மாறினார். தேசமெங்கும் ஏராளமான ஆண்களும் பெண்களும் அவருக்குப் பின்னால் அணிவகுத்து நிற்கத் தொடங்கினர். அந்தக் காலகட்டத்தில்தான் பிரவபதி தேவி, ராஜவம்ஷி தேவி, பகவதிதேவி போன்ற பல இளம்தலைவிகள் உருவாகி, இன்னும் கூடுதலான எண்ணிக்கையில் குடும்பப் பெண்களை விடுதலைப் போராட்டத்தை நோக்கி அழைத்து வந்தனர்.

1921இல் காந்தி ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடங்கியபோது, ஏராளமான ஆண்களும் பெண்களும் அவர் மீது நம்பிக்கை கொண்டு பின்தொடர்ந்தனர். கதர் பிரச்சாரத்திலும் கள்ளுக்கடை மறியல் போராட்டங்களிலும் அந்நிய நாட்டு ஆடைகளை விற்பனை செய்யும் கடைகளின் முன்னால் நிகழ்ந்த மறியல்களிலும் ஆண்களுக்கு இணையாக பெண்களும் பங்குகொண்டனர். அவர்கள்தான் முதன்முதலாக தெருத்தெருவாக நடந்து சென்று



கதராடைகளை விற்றனர். துண்டுப் பிரசுரங்களை விநியோகித்தனர். ஊர்வலங்களில் கலந்துகொண்டு முழக்கமிட்டனர். மன உறுதியோடு சிறைத் தண்டனையை ஏற்றுக்கொண்டு சிறைக்கும் சென்றனர். காவல் துறையினர் இழைத்த மனிதாபிமானமற்ற தண்டனைகளையெல்லாம் அமைதியாக ஏற்றனர்.

காந்தி வகுத்த போராட்டங்களே, இந்தியப் பெண்களை முதன்முதலாக அரசியல்மயப்படுத்தின. பெண்களின் போராட்டங்கள் வெறும் விடுதலையை நாடும் போராட்டமாக நின்றுவிடாமல் குழந்தைத் திருமணங்களை எதிர்க்கும் போராட்டங்களாகவும் விதவை மறுமணத்துக்கான போராட்டங்களாகவும் வளர்ந்தன.

மேற்கு வங்காளத்தில் முதன்முதலாக சரளாதேவி சௌதுராணி என்பவர் பெண்களுக்கென தனிப்பட்ட விதத்தில் பாரத் ஸ்த்ரி மகாமண்டல் என்னும் அமைப்பைத் தொடங்கி நடத்தினார். அதைத் தொடர்ந்து குறுகிய காலத்திலேயே அதையொத்த அமைப்புகள் நாடெங்கும் உருவாகின. சாதி, மத வேறுபாடுகளைக் கடந்து இந்தியாவின் விடுதலைக்காக இந்தியப் பெண்கள் ஒரே அணியில் திரண்டு நின்றனர். ஆந்திரப்பிரதேசத்தில் காந்தியடிகளின் சுற்றுப் பயணத்தின் போது துர்காபாய் தேஷ்முக் ஏறத்தாழ ஆயிரத்துக்கும் மேற்பட்ட தேவதாசிப் பெண்களைத் திரட்டி வந்து, அவர்களிடையில் காந்தியடிகளை உரை நிகழ்த்த வைத்தார். ஊர்வலங்களை நடத்துவதற்கும் மறியல்களை மேற்கொள்வதற்கும் பிரபாத் பேரி முழக்கங்களை எழுப்புவதற்கும் தேவையான பயிற்சிகளை அப்பெண்கள் பெற்றனர். அதற்குப் பிறகுதான், இந்தியாவை முதன்முதலாக இந்தியத் தாய் என்னும் உருவகமாக பார்க்கும் பார்க்கும் பார்வை உருவானது. துர்காபாய், கமலாதேவி சட்டோபாத்யாய, அருணா ஆசப்ஃ அலி, ரமாதேவி, மாலதி சௌதுரி, ருக்மணி லட்சுமிபதி, சௌந்திரம் அம்மாள், அம்புஜத்தம்மாள் என தனித்திறமை கொண்ட ஏராளமான பெண் தலைவிகள் உருவானார்கள்.

1930ஆம் ஆண்டில் காந்தி உப்பு சத்தியாகிரகத்தைத் தொடங்கியபோது தேசமெங்கும் ஆயிரக்கணக்கான பெண்கள் கலந்துகொண்டு சிறை புகுந்தனர். காந்தி வழியாகக் கிடைத்த உத்வேகமே, மிகப்பெரிய எண்ணிக்கையில் பெண்கள் அனைவரும் சேர்ந்து தேசிய போராட்டங்களில் பங்கேற்கத் தூண்டியது. இந்த உலகமே அதைப் பார்த்து வியந்தது. அதே ஆண்டில் அவர் 'யங் இந்தியா' இதழில் அரசியல் களத்தில் பெண்களின் பங்கேற்பை முன்வைத்து எழுதிய ஒரு கட்டுரையில், 'பெண்களின் வலிமையை உணராமல் அவரை பலவீனமான பாலினத்தவர் என்று குறிப்பிடுவது மிகப்பெரிய அவதூறாகும். அப்படிப்பட்ட ஒரு கூற்று ஆண்கள் பெண்களுக்கு இழைக்கும் மாபெரும் அநீதியாகும்' என்று குறிப்பிட்டார்.

காந்தியின் ஒவ்வொரு உரையும் ஒவ்வொரு செயல்பாடும் இன்று ஆவணமாக்கப்பட்டுள்ளன. தேடிப் படிக்கும் ஒருவர் அவற்றையெல்லாம் மிக எளிதாகப் படித்துவிடமுடியும். விலையில்லாமல் படிப்பதற்கு ஏற்ற வகையில் அனைத்தும் இணையத்திலேயே கிடைக்கின்றன. அவற்றைப்




**விடுதலைக் களத்தில் வீரமகளிர்** (பாகம் 7)

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | **உமா மோகன்** |
| வெளியீடு | : | **ஹெர் ஸ்டோரிஸ்,<br>81 நான்காவது நிழற்சாலை,<br>அசோக் நகர், சென்னை – 600083** |
| விலை | : | **ரூ. 270** |
| கைபேசி | : | **+91 75500 98666<br>+91 96003 98660** |
| மின்னஞ்சல் | : | **strong@herstories.xyz** |

படிக்கும்போது, பெண்களின் ஆற்றல் மீது அவர் கொண்டிருந்த மட்டற்ற மதிப்பை மிக எளிதாகப் புரிந்துகொள்ள முடிகிறது.

வடக்கே வங்காளத்திலிருந்தும் பஞ்சாபிலிருந்தும் தெற்கே தமிழ் மாகாணம் வரைக்கும் எண்ணற்ற பெண் தலைவர்கள் போராட்டங்களில் ஈடுபட்டு, விடுதலைக்காகப் பாடுபட்டனர். கெடுவாய்ப்பாக, அப்பெயர்கள் ஆங்காங்கே சிதறியிருக்கின்றன. நாம் வாழும் வட்டாரத்திலேயே விடுதலை போரில் ஈடுபட்டு சொல்லொணாத் துயரங்களைத் தாங்கிய ஒருவர் வாழ்ந்து மறைந்திருப்பார். ஆனால், அவரைப் பற்றி இன்னொருவர் குறிப்பிடும் வரைக்கும் நமக்குத் தெரியாமலேயே இருக்கும். காந்தியடிகளின் கடிதங்களையும் கட்டுரைகளையும் உரைகளையும் திரட்டி முறையாக வகைமைப்படுத்தி தொகுத்து ஆவணப்படுத்தியதைப்போல பெண்களின் பங்களிப்பும் பணிகளும் ஆவணமாக்கப்பட வேண்டும். ஒவ்வொரு வட்டாரம் சார்ந்தும் அத்தகு தகவல்கள் திரட்டித் தொகுக்கப்பட வேண்டும். பிறகு முறையான பரிசீலனைக்குப் பிறகு அவை தொகுதியில் சேர்க்கப்பட வேண்டும். அதுவும் நாம் செய்யவேண்டிய முக்கியமான கடமை. கூடுதலான காலம் தேவைப்படுமே என அம்முயற்சியை மேற்கொள்ளாமல் இருந்துவிடாமல், கூடுமான வரையில் அம்முயற்சியில் ஈடுபட்டு குறைவான வெற்றி ஈட்டுவதுகூட பெருமைக்குரிய ஒரு வேலையாகும். 'கான முயலெய்த அம்பினில் யானை பிழைத்தவேல் அரிது' என்னும் திருவள்ளுவரின் சொல்லை ஒருபோதும் மறந்துவிட முடியாது.

இந்திய விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்ட தியாகிகளின் வரிசையில் பெண்களின் பங்களிப்பை திரட்டித் தொகுக்கும் மாபெரும் பணியை கவிஞர் உமாமோகன் கொரானா காலத்துக்கு முன்பாகத் தொடங்கினார். யாரும் சொல்லாமலேயே தன் ஆர்வத்தின் காரணமாகவே அவர் அப்பணியை மேற்கொண்டு இதுவரை முன்னூறுக்கும் மேற்பட்டவர்களைப் பற்றிய தகவல்களைத் திரட்டி தொகை நூல்களாக வெளியிட்டிருக்கிறார். செயற்கரிய ஒரு செயலை நம் கண் முன்னால் அவர் நிகழ்த்திக் காட்டியிருக்கிறார்.

ஆவணங்களைத் தேடுதல் என்பது சாதாரணமான செயலல்ல. மலைமலையாகக் குவிந்திருக்கும் சிப்பிகளுக்கிடையில் முத்தைத் தேடி எடுக்கும் செயல். சலிப்புறாத உழைப்பின் விளைவாக, அந்தப் பணி உமா மோகனுக்குச் சாத்தியமாகியிருக்கிறது.

தொகைநூலின் ஏழாவது நூலாக இந்தப் புத்தகம் வந்திருக்கிறது. குஜராத், வங்காளம், கேரளம், ஒரிசா, தமிழகம், ஆந்திரம் என பல்வேறு மாநிலங்களைச் சேர்ந்த தியாகப் பெண்களின் வரிசை இத்தொகுதியில் இடம்பெற்றுள்ளது. மாநிலம் வேறாக இருந்தாலும், மொழி வேறாக இருந்தாலும், அவர்கள் அனைவரும் தன்னலத்தைத் துறந்து நாட்டுக்காகத் தியாக வாழ்க்கையை வாழ்ந்தவர்கள் என்பதில் ஒரே அணியின் கீழ் கருதத்தக்கவர்கள். ஒவ்வொருவரும் இரண்டு முதல் பத்தாண்டுகள் வரைக்கும் சிறைத்தண்டனை பெற்றவர்கள்.

சுமித்ரா தேவி, ஆந்திரத்தைச் சேர்ந்த முக்கியமான ஒரு தியாகி. போராட்ட குணம் மிக்கவர். மெட்ரிகுலேஷன் படிப்பை முடித்துவிட்டு ஆரியசமாஜம் முன்னெடுத்த பல போராட்டங்களில் கலந்துகொள்ளத்

தொடங்கினார். கலப்புத் திருமணம் செய்துகொண்டார். காந்தியடிகளின் வார்தா ஆசிரமத்துக்குச் சென்று நூற்பு, நெசவு, வேளாண்மை, தச்சுத்தொழில், தோல் தொழில் போன்ற கைத்தொழில்களைக் கற்றுத் தேர்ச்சியடைந்தார். அதைத் தொடர்ந்து ஆறாண்டு காலம் ஆசிரமத்திலேயே தங்கி கிராம சேவகர்களுக்கான பயிற்சியை அளிக்கும் ஆசிரியையாகப் பணியாற்றினார். பிறகு ஐதராபாத்துக்குத் திரும்பி வந்து கதர்க் கடைகளையும் நூற்புச் சங்கங்களையும் தோற்றுவித்தார். வசதி வாய்ப்புகள் குறைவான சிக்கட்பள்ளியிலும் நாராயண்குடாவிலும் பாடசாலைகளைத் தொடங்கி நடத்தினார். கைவிடப்பட்ட வறுமைக் கோட்டுக்குக் கீழே வசிக்கும் பெண்களுக்கான ஓர் அமைப்பையும் உருவாக்கி பலருடைய மறுவாழ்வுக்கும் வழிவகுத்தார். விடுதலைப் போரில் ஈடுபட்ட தியாகி என்ற வகையில் அவருக்கு அரசு அளித்த பத்து ஏக்கர் நிலத்தை காந்தி உருவாக்கிய சேவாசதனுக்கு நன்கொடையாக அளித்துவிட்டார்.

வேதாந்தம் கமலாதேவி, கடப்பா மாவட்டத்தைச் சேர்ந்த நண்டலூரர் கிராமத்தைச் சேர்ந்தவர். விடுதலைப் போராட்டம் தொடங்கிய காலத்தில் கதர்ப் பிரச்சாரம் செய்தபடி ஆந்திரம் முழுதும் பயணம் செய்தார். நூல் நூற்கவும் நெசவுத் தொழிலில் ஈடுபடவும் பலருக்குப் பயிற்சியை அளித்தார். ஒருமுறை ஸ்ரீகாகுளம் பகுதியில் உப்பு சத்தியாகிரகத்தில் ஈடுபட்டபோது காவல்துறையினர் அவரைக் கைது செய்தனர். கைது செய்யப்பட்ட குழுவில் அவர் ஒருவரே பெண்ணாக இருந்த காரணத்தால், மன்னிப்பு கேட்டுவிட்டுப் புறப்பட்டுச் செல்லலாம் என அதிகாரிகள் சலுகை காட்டினர். ஆனால், அச்சலுகையை ஏற்க விரும்பாத கமலாதேவி, "அது என் கனவிலும் நடக்காது. பூரண சுயராஜ்ஜியமே என் குறிக்கோள்" என்று சொல்லிவிட்டு துணிச்சலோடு சிறை புகுந்தார்.

கோழிக்கோட்டைச் சேர்ந்தவர் ஸ்வர்ணகுமாரி. கோழிக்கோட்டுக்கு வருகை புரிந்த காந்தி அவருடைய வீட்டில்தான் தங்கினார். சில நாட்கள் மட்டுமே அவரோடு பேசிப் பழகிய அனுபவம் அவருடைய நெஞ்சில் சுதந்திரக் கனலை மூட்டிவிட்டது. தன்னைப் போன்ற பதினைந்து வயதுக்குட்பட்ட சிறுமிகளை இணைத்து பாலிகா பாலர் சங்கம் என்னும் பெயரில் ஒரு சங்கத்தைத் தொடங்கினார். தினமும் காலையிலும் மாலையிலும் மூவண்ணக் கொடியை ஏந்தி தேசபக்திப் பாடல்களைப் பாடியபடி ஊர்வலமாகச் செல்வதும் உண்டியலேந்தி ஹரிஜன நிதிவசூல் செய்வதும்தான் அவர்கள் வேலை. ஒருமுறை படேல் கைது செய்யப்பட்ட நிகழ்ச்சியைக் கண்டித்து நடைபெற்ற ஊர்வலத்தில் சிறுமியான ஸ்வர்ணகுமாரியும் கலந்துகொண்டார். அன்று பள்ளிக்குச் செல்ல வேண்டிய நாள். ஆயினும் அதைப் பொருட்படுத்தாமல்தான் எதிர்ப்பு ஊர்வலத்தில் கலந்துகொண்டார். அந்தச் செய்தி எப்படியோ அவருடைய பள்ளி வரைக்கும் எட்டிவிட்டது. பள்ளித் தலைமையாசிரியர் அவரைப் பள்ளிக்கு உள்ளே அனுமதிக்கவில்லை. மன்னிப்புக் கடிதம் கொடுத்துவிட்டு பள்ளிக்கு வரலாம் என்று தெரிவித்துவிட்டு, வீட்டுக்கு அனுப்பிவிட்டார். ஆயினும் மன்னிப்பு கேட்க விருப்பமில்லாத ஸ்வர்ணகுமாரி அத்துடன் பள்ளிப் படிப்பைத் துறந்துவிட்டு, தன் தந்தையுடன் இணைந்து பல்வேறு போராட்டங்களில் ஈடுபடத் தொடங்கினார்.

கொல்லா கனகவல்லி தாயாரம்மா, ஆந்திரத்தைச் சேர்ந்தவர். தேவரம்பேடு என்னும் கிராமம் கடற்கரையை ஒட்டியுள்ள இடம். உப்பு சத்தியாகிரகத்துக்கு அந்த இடம் பொருத்தமான இடமென தொண்டர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டது. ஆனால், அங்கு உப்பு காய்ச்ச விடாமல் காவல் துறையினர் மிரட்டி விரட்டியடித்தபடி இருந்தனர். ஏராளமான பெண்கள் கூட்டத்துடன் அங்கு சென்ற கனகவல்லி தடையை மீறி உப்புக் காய்ச்சினர். உடனடியாக அவர்களைக் கைது செய்தனர் காவல்துறையினர். ஆனால், அவர்களை நீதிமன்றத்துக்கு அழைத்துச் செல்லாமல், எண்பது மைல் தொலைவுக்கப்பால் உள்ள சிலகலூருபேட்டை என்னும் இடத்தில் இருளடர்ந்த பகுதிக்கு அழைத்துச் சென்று இறக்கிவிட்டனர். இருளில் வழி தெரியாமல் தவித்து, எங்கெங்கோ அலைந்து திரிந்து, பிறகு அப்பகுதியிலிருந்து படாத பாடுபட்டு நடந்து ஊருக்குத் திரும்பி வந்தனர். ஒருமுறை தெனாலி பகுதியில் அவர் போராட்டத்தில் ஈடுபட்டிருந்த போது அவரைக் கைது செய்ய காவல் துறையினர் வந்தனர். அப்போது அவர் ஒன்றரை வயதுக் குழந்தைக்குத் தாய். மேலும் எட்டுமாதக் கருவை வயிற்றிலும் சுமந்திருந்தார். அவற்றையெல்லாம் பொருட்படுத்தாமல் சிறைக்குச் சென்றார். விடுதலை பெற்றதும் ஊருக்குத் திரும்பி வந்து ஹரிஜன சேவையை முன்னெடுக்கும் விதமாக ஒரு பள்ளிக்கூடத்தைக் கட்டும் வேலையைத் தொடங்கினார். காந்தியடிகளே நேரில் வந்து அப்பள்ளிக்கு அடிக்கல் நாட்டிவிட்டுச் சென்றார்.

இப்படி விடுதலைக்கும் நாட்டின் நலனுக்கும் பாடுபட்ட ஏராளமான பெயர்களை நாம் அடுக்கிக்கொண்டே செல்லலாம். அது மிகவும் பெரியது, உமா மோகன் தம் இடையறா முயற்சியின் விளைவாக, கிடைத்த தகவல்களைக் கொண்டு இத்தொகை நூலை ஒரு முத்தாரமென உருவாக்கியிருக்கிறார். அவருடைய பணி மகத்தானது. அவருடைய அயராத உழைப்பு என்றென்றும் நம் வணக்கத்துக்குரியது.

*mail to:* **writerpaavannan2015@gmail.com**



42

# முயங்கொலிக் குறிப்புகள்

● கயல்
ஓவியம்: ஞானப்பிரகாசம் ஸ்தபதி



சிநேகிதனே சிநேகிதனே
இரகசிய சிநேகிதனே
அனல் மேலே பனித் துளி
வகைப் பாடல்கள்
காற்றில் கசிந்து
உயிர் உருக்கி
மன நதியெங்கும் கூழாங்கல்லாய்
ஏக்கம் ஊறிக் கிடக்கிறது பலகாலமாக.

தீம் மேரேஜ் தடபுடல்.
மணப் பெண் ஆடுவாளா
என்னைப் பார்த்து
சுற்றத்துப் பெருசுகள் முகம் சுளிக்க
வட இந்திய மெஹந்தி சங்கீத்
அனைத்தும் முடித்து
உடல் தழுவிய புதுப் புடவையுடன்
மாடர்னாக மில்டன் ஃபிளாஸ்க்கில் ஏந்தி வந்த
ஆவின் பாலுடன்
நான் கட்டிலில் அமர்ந்த
இரண்டாவது நொடி கேட்டாய்

என் அம்மாவிடம்
பாட்டியிடம்
பூட்டியிடம்
அத்தனை பெண்களிடமும்
கேட்கப்பட்ட
அதே கேள்வியை
வெட்கத்தில் முகம் பொத்தாமல்
நிமிர்ந்து பார்த்துச் சொன்னேன்,
"இல்லை. முதலில் கொஞ்ச நேரம் பேசுவோம்"

தொடரும்

*mail to:* **dr.kayalvizhi2020@gmail.com**

நோபல் கமிட்டியின் செயல்பாடு, அதைச் சார்ந்துள்ள நடுநிலைமை அல்லது இல்லாமை, படைப்பு உயர்ந்ததா அல்லது மட்டமா என்று ஒவ்வொரு முறையும் பரிசு முடிவைத் தெரிவிக்கும் போது எழும் சர்ச்சைகள் எழுந்து, எழுந்தது போல் அடங்கியும் விடுகின்றன. ஆனால், உலக இலக்கியங்களுக்குத் தரப்படும் பரிசுகள் பலவற்றுக்கும் முன்பாக நோபல் பரிசு இன்றும் ஓர் உயர்ந்த பீடத்தைத் தக்கவைத்துக் கொண்டுள்ளது.

நோபல் உரைகள் எப்போதும் இலக்கிய ஆசிரியனின் காலத்திய சமூக, பொருளாதார, அரசியல் மற்றும் கலைச் சூழல்களைப் பிரதிபலிக்கும் விதத்தில்தான் வெளிப்படுகின்றன. இந்த உரைகளில் காணப்படும் ஒரு பொது அம்சம் படைப்பாளிகளின் இளமைக் காலமும் அவர்களின் படைப்புகளில் ஆழமாக அது பதிக்கும் விவரணைகளும்தான். இவ்வுரைகள் வாசகர் மனதில் எழுப்பும் சீரிய சிந்தனைகளும் ஆழமான புரிதல்களும் அவற்றைப் பேருரைகளாக மாற்றி விடுகின்றன. ஆனால், அவற்றை என்றும் மாறாத புனித வாக்குகளென சடுதியில் தீர்மானத்துக்கு வரவேண்டிய அவசியத்தை உண்டாக்காது, படைப்பாளியின் நோக்கம், அவன் எழுத்து பிரதிபலிக்கும் சமூகச் சூழல், இலக்கியப் பரப்புக்குள்ளேயே நிகழும் ஒத்த அல்லது மாறுபட்ட கருத்தாழங்கள் ஆகியவற்றைப் பரிசீலனை செய்கின்றன.

நோபல் உரைகளை அம்ருதா வாசகர்களின் முன் வைக்கிறோம் - மாதம் ஒன்றாக.

**11**

**1980**

# கவி மனம்

**வாழ்க்கை என்பது சிக்கலானதும் கணிக்கவியலாததுமான கடவுள் தந்த கொடை என்று புகழுவோருக்கு இந்த மேடையில் என் பிரசன்னம் வாதத்துக்குரியதாக இருக்க வேண்டும். என் பள்ளி நாள்களில் 'நோபல் விருதாளர்கள்' என்று பல தொகுதிகளாகப் போலந்தில் வெளியாகிய நூல்களை நான் படித்திருந்தேன். அந்த எழுத்துருவமும் காகிதங்களின் வண்ணமும் இப்போதும் என் ஞாபகத்தில் இருக்கின்றன.**

## செஸ்லா மிலாஸ் / Czeslaw Milosz

**● தமிழில்: ஸிந்துஜா**

*நோபல் பரிசு பெற்றவர்கள் தீவிரமான வசன நடையில் எழுதும் எழுத்தாளர்கள் என்று நினைத்திருந்தேன். பின்னர் கவிகளும் அப்பரிசைப் பெற்றவர்கள் என்று அறிந்த சமயத்திலும் என் மேற்கூறிய நினைப்பு என்னைவிட்டு அகலவில்லை. 1930இல் என் கவிதைகள் அடங்கிய முதல் கவிதைப் புத்தகம் பல்கலைக்கழக வெளியீடாக வந்த போது கூட நான் ஒரு எழுத்தாளன் என்ற அடைமொழிக்கு ஆசைப்படவில்லை. வெகு நாள்கள் கழித்து நான் தனிமையை நாடி, போலிஷ் மொழியில் கவிதைகள் எழுதும் வினோதமான வேலையை மேற்கொண்டு, பிரான்சிலும் அமெரிக்காவிலும் வாழ்ந்த போது, ஒரு ஆதர்சம் நிரம்பிய கவி என்பவன் புகழடைய வேண்டுமெனில் அவன் பிறந்த இடத்தில் அல்லது வளர்ந்த கிராமத்தில் புகழடைந்திருக்க வேண்டும் என்று ஒருவிதமான நிச்சயத்திலிருந்தேன்.*



*என் இளம் வயதில் நான் பெருமளவு ஈர்க்கப்பட்டது, அதாவது கவிதை பற்றி நான் உருவாக்கிக் கொண்ட எண்ணங்களைத் தீர்மானித்தது, நோபல் பரிசுபெற்ற செல்மா லோகர்லாஃப்தான். அவரது, 'நில்ஸின் அற்புதமான பராக்கிரமங்கள்' மீது காதல் கொண்டேன். அதன் கதாநாயகன் இரண்டு வேஷங்கள் தரித்திருப்பான். பூமியின் மேலே பறந்த அவன் மேலிருந்தபடியே கீழே பூமியிலிருக்கும் அனைத்தையும் நோக்குகிறான். இந்த இரட்டைப் பார்வை கவிதாயினியின் தொழில் நுட்பத்தைச் சுட்டிக்காட்டும் உருவகமாக விளங்கிற்று.*



கேஸிமிர் என்னும் புனைபெயரில் ஐரோப்பாவில் புகழ் பெற்றிருந்த பதினேழாம் நூற்றாண்டுக் கவியான மஸீஜ் சர்பியோவ்ஸ்கியின் ஒரு லத்தீன் இசைப்பாவில் இத்தகைய உருவகத்தை நான் பார்த்தேன். அவர் என் பல்கலைக்கழகத்தில் கவிதைக் கலை பற்றிக் கற்பித்து வந்தார். அவர் அந்த இசைப்பாவில் இறக்கைகள் கொண்ட குதிரையின் மீது ஏறிப் பயணம் செய்வதை விவரிக்கிறார். வில்நோவிலிருந்து ஆன்ட்வர்ப் வரையிலான அந்தப் பயணம் அவரது கவிதைகள் எழுதும் நண்பர்களை சந்திப்பதற்காக ஏற்பாடான ஒன்று. நில்ஸ் போல அவரும் நதிகள், ஏரிகள், காடுகள் என்று தொலைவில் உள்ளவற்றைத் தன் பார்வையில் கொண்டு வருகிறார். ஆகவே ஒரு கவியின் இரண்டு பண்புக்கூறுகள் என்பவை: பேரார்வத்துடன் இயங்கும் பார்வை, அவ்வாறு கண்டு கொண்டதைத் திறம்பட வருணிக்கும் ஆற்றல். இருந்தும், 'பார்த்ததை விளக்கும்' செயலில் ஈடுபடும் ஒருவர், நினைவில் இருத்திக்கொள்ள வேண்டிய விஷயம் கவிதையில் வலம்வரும் எண்ணற்ற நுட்பங்களுடன், நவீனத்துவம் உடன்பாடு கொள்ளாது முரண்டு பிடிக்கும் என்பதைத்தான்.

ஒவ்வொரு கவிஞனும் அவனது தாய்மொழியில் தலைமுறை தலைமுறையாக இயற்றப்பட்டவைகளுடன் சார்ந்து இருக்கிறான். அவனது முன்னோடிகள் உருவாக்கிய பாணியையும் உருவத்தையும் சுவீகரித்துக் கொள்கிறான். அதே சமயம் அந்தப் பழைய வெளிப்பாடு அவனது சுய அனுபவத்துக்குப் போதுமான விதத்தில் ஈடு செய்ய முடிவதில்லை என்று உணருகிறான். அவற்றை ஏற்றுக்கொள்ளும் அதே சமயம் அவனது மனக்குரல் முகமூடியையும் விஷத்தையும் பற்றி எச்சரிக்கின்றது. ஒரு கலகக்காரனாகப் புது முயற்சிகளில் இறங்கும் போது புதிய அலைகளை உருவாக்கும் அவனது சமகாலத்தவரிடம் போய்த் தஞ்சமடைகிறான். அவனது முதல் கவிதைத் தொகுப்பைக் கொண்டு வந்தால் போதும், அவன் ஒரு வலையில் சிக்கிக்கொள்ளும் பரிதாபம்! அந்தப் புத்தகத்தின் பக்கங்களின் மை காய்வதற்கு முன்பே அதுவரை அப்படைப்பு தனக்கானது என்று அவன் நினைத்திருப்பது, வேறொருவரின் பாணியுடன் பிணைக்கப்பட்டதாக தோற்றம் எடுத்து விடுகிறது. கண்ணுக்குப் புலப்படாமல் ஏற்படுத்தப்படும் இந்த நிலைமையை மாற்ற ஒரே வழி இன்னொரு புதிய புத்தகத்தைக் கொண்டு வருவதுதான்; ஆனால், மறுபடியும் முன்பிருந்த நிலைமையே தலை காட்டுகிறது. இந்தத் துரத்தும் ஆட்டத்தில் முடிவு என்பதே கிடையாது. ஏதோ காய்ந்த பாம்பின் தோல்களைப் போல இந்தப் புத்தகங்களை உதறிவிட்டுத் தப்பிக்கும் வழியைத் தேடி மேலும் மேலும் முன்பைப் போலவே இயங்குவது இறுதியில் நோபல் பரிசை வாங்குவதில் வந்து நிற்கிறது!

சாதித்தோம், முடிந்தது என்று உட்கார முடியாமல் மேலும் ஆர்வத்தைத் தூண்டும் இந்தப் புதிருக்குக் காரணமென்ன? மெய்ம்மையைத் தேடும் வேட்கைதான் என்று நான் நினைக்கிறேன். கடந்த சில நூற்றாண்டுகளாக நடந்த தத்துவார்த்த சர்ச்சைகளினால் ஏற்பட்ட அர்த்தமல்லாது நான் ஒரு சாதாரண அர்த்தமுள்ள வார்த்தைதான் இது என்று நினைக்கிறேன். அன்னப் பறவையின் மூலம் நில்ஸ் கண்டதும் இலத்தீன் இசைப்பாவின் ஆசிரியர் குதிரையின் மூலம் கண்டதும் ஒரே பூமியைத்தான் என்று நான் நம்புகிறேன். பூமி(களின்) செழிப்பு நிறைந்த பிரும்மாண்டமான அழகுகளை எந்த விதமான வருணனைகள் மூலமும் முழுக்க சொல்லிவிட முடியாது என்பதுதான் உண்மை. இவ்வாறு உறுதிபட ஒருவர் கூறும் போது, 'மெய்ம்மை என்றால் என்ன?' என்னும் கேள்வியை மறுக்கிறார் என்று அர்த்தம். பான்டிஸ் பைலட் கேட்ட, 'எது சத்தியம்?' என்னும் கேள்விக்கு ஒப்பானது இது. நாம் தினமும் எதிரெதிர் விஷயங்களைப் பயன்படுத்துகிறோம். வாழ்வும் சாவும் கொண்டுள்ள எதிரெதிர் நிலைப்பாடு இன்றியமையாத ஒன்று. உண்மைக்கும் பொய்மைக்கும் உள்ள வித்தியாசத்தை மறுக்க முடியாதது போல. யதார்த்தத்துக்கும் கனவுக்கும் உள்ள முரண்பாடு

போல.

**நா**ன் மிகவும் கடன்பட்டுள்ள எழுத்தாளரான சிமோன் வெய்ல் கூறுகிறபடி, ‘தொலைவுதான் அழகின் ஆத்மா’. ஆனாலும் சில சமயங்களில் ஒதுங்கியிருப்பது இயலாத காரியம். ‘நான் ஐரோப்பாவின் குழந்தை’ என்று என் கவிதை ஒன்றின் தலைப்பு இருக்கிறது. ஆனால், அது கசப்பும் ஏளனமும் நிறைந்த ஒன்று என்று நான் ஒப்புக்கொள்கிறேன். என்னுடைய சுயசரிதை பிரெஞ்சு மொழிபெயர்ப்பில் ‘இன்னொரு ஐரோப்பா’ என்ற தலைப்புடன் உள்ளது. இரண்டு ஐரோப்பாக்கள் உள்ளன என்பதில் எந்தவித சந்தேகமும் இல்லை. இரண்டாவதின் குடிமக்களான நாங்கள் ‘இருபதாம் நூற்றாண்டின் இருண்மையின் பிடி’யில் வீழ்ந்துவிட்டோம். கவிதையைப் பற்றிப் பொதுவாக எப்படிப் பேசுவதென்று என்னால் எதுவும் கூற முடியாது. ஆனால், அது பல்வேறு வித்தியாசமான சூழல்களைக் கொண்ட காலத்தையும் இடத்தையும் எதிர்கொள்ளும் விதத்தைப் பற்றிப் பேச முடியும். இன்று சாவைத் தீர்மானிக்கும் வல்லமை பெற்றவை நமக்குத் தெரிந்திருக்கும் இயற்கைப் பேரழிவுகளைக் கடந்து இயங்குகின்றன. நானும் என் சக எழுத்தாளர்களும் பழைய அல்லது நவீன உத்திகளில் சொல்ல முடியும் என்றாலும் அத்தகைய சீரழிவுகளை விவரித்து இயங்குவது என்பது இயலாத காரியம்.



சில நூற்றாண்டுகளுக்கு முன்பு ஆசிய ஐரோப்பியக் கண்டத்தைச் சார்ந்த ஒரு சிறிய தீபகற்பத்தில், விஞ்ஞானத்தையும் தொழில்நுட்பத்தையும் அனைவரும் வணங்கிப் போற்றும் விதத்தில் உருவாக்கி ஒரு பிரளயத்தையே ஏற்படுத்திய நேரத்தில் வாழ்ந்த ஒருவருக்கு, மெய்மையையும் மாயத் தோற்றத்தையும் பிரித்துப் பார்க்க இயலாது. மனிதர்கள் மீதும் இயற்கையின் மீதும் புழுத்த கருத்துக்களைச் செலுத்த முயன்ற ஒரு தரப்பின் வன்மம் நிறைந்த செயல்கள் பல்லாயிரக்கணக்கான மக்கள் மீது செலுத்தப்பட்ட போது, எழுந்த புரட்சியினாலும் போரினாலும் உடல் ரீதியாக மன ரீதியாக அழிவு ஏற்பட்டது. மனிதர்களை ஒதுக்குவதும் கொடுங்கோலுக்கு மண்டியிடுவதுமான சூழலுக்கு இரையாகாமல் பாதுகாத்த செயல்களைப் பெற்றடைந்ததற்கு மரியாதையுடனும் நன்றியுடனும் நாம் நினைவு கூர வேண்டியது அவசியம். குடும்பம், மதம், அண்டை வீட்டார், மரபுரிமை ஆகியவற்றை மக்களுக்குள் தாமாகவே நிலைநிறுத்திய செயல்பாடுகள், அராஜகக்காரர்களின் எல்லையற்ற சினத்தைச் சம்பாதித்ததில், சில நிறுவனங்களும் வாழ்க்கை முறைகளும் தாக்குதலுக்கு உள்ளாகின. தர்க்கபூர்வமற்ற, ஒழுங்கீனமான மக்கள் கூட்டம் என்று அவர்களைக் குறிப்பிட்டதற்குக் காரணம் அவர்களின் குறுகிய மனப்பான்மையும் அதற்கு அவர்கள் இரையாகிவிட்டதும்தான். பல நாடுகளில் மரபு சார்ந்த இனக் குழுமங்கள் மறைந்து வருகின்றன. அவற்றைச் சேர்ந்தவர்கள் இத்தகைய மரபு வீழ்ச்சியை உணராது இருக்கிறார்கள். ஆனால், திடீரென ஆபத்து நிறைந்த சூழல் ஏற்படும் போது எப்படியோ ஒரு பாதுகாப்பான, நம்பிக்கை ஏற்படுத்துகிற உறவு கிளம்பி வெளி வருகிறது. இதுதான் என் தாய்நாட்டின் நிலைமை. ஐரோப்பாவைச் சேர்ந்த நானும் என் நண்பர்களும் இம்மாதிரி பரிசைப் பெறும் நேரத்தில் இதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆசிர்வாதங்களைத் தெரிவித்தபடி.

மனிதர்களுடன் உறவாடும் இயற்கை, பலவிதமான மொழிகள், மதங்கள் என எல்லாமும் இணைந்து பற்பல நூற்றாண்டுகளாக இயைந்து இயங்கும் ஒரு சிறிய நாடு இது. நான் மனதில் இருத்தியிருப்பது கட்டுக் கதைகளும் கவிதைகளும் நிரம்பிய லுதானியாவைத்தான். பதினாறாம் நூற்றாண்டிலேயே எங்கள் குடும்பத்தினர் போலிஷ் பாஷையில் பேசினார்கள். கூடியிருந்தவர்கள் சுவீடிஷ் மொழியிலும் அயர்லாந்தில் இருந்த குடும்பங்கள் ஆங்கிலத்திலும் பேசியது போல. ஆகவே நான் போலிஷ் கவிஞன்; லுதானியா கவியல்ல. ஆனால், லுதானியாவின் நிலப்பரப்பும் அதன் உத்வேகமும் என்னுடனேயே இருந்தன. இலத்தீன் வழிபாடுகளைக் கேட்பதும் உயர்நிலைப்பள்ளியில் ரோமன் கவியான ஓவிட்டை மொழிபெயர்ப்பதும் ரோமன் கத்தோலிக்கரின்

சித்தாந்தவியல் மற்றும் அவர்தம் சமயத்துக்கு ஆதரவான குரல்கள் பற்றிக் கிடைத்த பயிற்சியும் இளம் வயதில் ஏற்பட்டன. வில்னோ போன்ற ஒரு நகரில் தொழில் முனைவுப் படிப்பும் பல்கலைக் கழகப் படிப்பும் கிடைத்தது என்பது பெரும் பேறு என்றுதான் சொல்ல வேண்டும். பரோக் பாணியில் கட்டப்பட்டவை வடக்கே இருந்த காடுகளுக்கு அனுப்பப்பட்டன. ஒவ்வொரு கல்லிலும் சரித்திரம் பொறிக்கப்பட்ட, நாற்பது ரோமன் கத்தோலிக்க சர்ச்சுகளும் பலவிதமான ஜெப ஆலயங்களும் நிரம்பிய நகரம். அந்தக் காலத்தில் யூதர்கள் அதை வடக்கிலிருந்த ஜெருசலேம் என்றார்கள். திண்மை நிரம்பிய சுவர்களால் சூழப்பட்டிருந்த எங்கள் புராதன பல்கலைக்கழகத்திலிருந்து கற்று எனக்கு மனப்பாடமாகத் தெரிந்து வைத்திருந்த ரோமர்களின் சட்டம் பற்றி, பழைய போலந்தின் இலக்கியம் பற்றி, அமெரிக்காவில் நான் பாடங்களைப் போதிக்கும் போது அமெரிக்க இளம் மாணவர்களுக்கு ஏற்பட்ட ஆச்சரியம்! அவர்கள் கொண்டிருந்த குறிப்பிட்ட குணாதிசயங்களை அறிய முடிந்தது: அராஜகத்துக்கு எதிர்ப்பு, கடும் பூசல்களின் போது அவற்றைத் தவிர்க்கும் முகமாக நகைச்சுவையை உதிர்ப்பது, சீரான சமூகம் பற்றிய உணர்வு, அதிகாரத்தைக் குவித்துக்கொள்ளும் மையங்களுக்கான எதிர்ப்புணர்வு.

இத்தகைய உலகில் வாழும் ஒரு கவிஞன் தியானத்தின் மூலம் மெய்ம்மையைத் தேடுபவனாக இருக்க வேண்டும். அவனுக்கு நெருக்கமாக இருக்கும் மரபு வழிக் கொள்கைகள், மணிகளின் ஓசை, நெருக்கடியிலிருந்து



விலகித் தனித்திருத்தல், சிஷ்யர்களின் இடையறாத கோரிக்கைகள், துறவிகளின் கூடத்து அமைதி. மேஜையின் மீது புத்தகங்கள் அமர்ந்திருக்க வேண்டுமெனில், கடவுளது படைப்புகளின் அதாவது மனித இயக்கத்தின் புரிந்துகொள்ள முடியாத தன்மையை விளக்குவதாக இருக்க வேண்டும். ஆனால், வெறி கொண்டலையும் ஒரு தேவதையின் பண்புக்கூறுகளை ஏற்கும் சரித்திரம் இவை கண்டடைந்த, எல்லாவற்றையும் அழித்து முடித்துவிடும் சாத்தானாகி விடுகிறது. பாதாளத்தில் உள்ள பூமியை மேலிருந்து வியப்புடன் கவனிக்கும் கவியிடம், பூமி தன்னை மேலே இருந்து பார்க்க அனுமதிப்பதில்லை. தீர்க்கமுடியாத, உண்மையான முரண் ஒன்று எழுகிறது. பகலிலும் இரவிலும் மனதுக்கு ஸந்துஷ்டியை அளிக்காத வண்ணம். நாம் அதை என்ன பெயரிட்டு அழைத்தாலும் அது இருத்தலுக்கும் செய்கைக்குமான முரண் அல்லது மற்றொரு விதத்தில் ஒருவரது சக மனிதர்களுக்குமிடையேயான முரண் என்று முன் வந்து நிற்கிறது. மெய்ம்மை, பெயரோ வார்த்தைகளோ கேட்கிறது. அது தாள முடியாததாக இருக்கிறது. அதனை நெருங்கினால், கவிஞன் புகாரெதுவும் அளிக்க முடியாத நிலை ஏற்படுகிறது. கலைகள் அனைத்தும் செயல்களுக்கு முன் ஒன்றுமில்லாதவையாக நிற்கின்றன. மெய்ம்மையை அதன் நல்லது கெட்டது என்னும் பாகுபாடுகளுடன், நிராசையுடன், நம்பிக்கையுடன் தூரத்திலிருந்து அணுக வேண்டியிருக்கிற போது அதுவும் ஒரு நம்பிக்கைத் துரோகமோ எனத் தோன்றுகிறது.

இருபதாம் நூறாண்டின் பலவிதமான சிக்கல்களின் முக்கிய காரணமாக இந்த முரண்தான் என்று தோன்றுகிறது. இன அழிப்பின் கோர முகங்களினால் சீரழிக்கப்பட்ட பூமியைக் கவிஞர்கள் கண்டடைந்தனர். நினைவுச் சின்னமென, சாட்சியமென நிலைத்து நின்ற சில கவிதைகளை எழுதிய கவிஞனின் மனதிலிருந்த எண்ணங்கள் என்னென்ன? வலியைத் தரும் முரணின் வெளிப்பாடு என்று நினைக்கிற அவன் அதற்கான தீர்வை எழுதப்படாதவை மூலம் சாதிக்கலாம் என்று எண்ணுகிறான்.

தமது ஊர், உலகங்களை நினைவில் மட்டுமே கொண்டிருந்த, நாடு கடத்தப்பட்ட கவிகளின் ரட்சகன் தாந்தே தான். கவியை நாடு கடத்துவது என்பது சமீபத்தில் கண்டுபிடிக்கப்பட்ட செயல். அதிகாரத்தைக் கையில் வைத்திருப்பவர் மொழியை அடக்கி ஆளும் சக்தியைப் பெற்றிருக்கிறார். தணிக்கை தரும் தடைகளைப் பின்பற்றுவதிலும் வார்த்தைகளின் அர்த்தத்தை மாற்றுவதிலும் அவருக்கு அதிகாரம் இருக்கிறது. அது ஒரு விநோதமான தோற்றத்துடன் காட்சியளிக்கிறது: ஒடுக்கப்பட்ட ஒரு சமூகத்தின்

மொழி நிலைத்து நிற்கக்கூடிய இயல்பாயும் சில சமயம் பெற்று விடுகிறது. மெய்ம்மையின் முழுத் தோற்றம் அழிந்து விடுகிறது எந்தவிதத் தடையமும் இல்லாமல். இலக்கியம் நிர்ணயித்திருக்கும் கொள்கைகளுக்கும் சர்வாதிகார அரசுக்கும் ஒரு மறைமுகமான தொடர்பு இருப்பது போலத் தோன்றுகிறது. எப்படியிருந்தாலும் அம்மாதிரி ஓர் அரசு அதன் எல்லைகளுக்குட்பட்ட தன்னாட்சி பற்றிய பார்வையை பரிசோதனைக் கவிதைகளுக்கும் உரைநடைகளுக்கும் அனுமதிப்பது சாலச் சிறந்தது. ஒரு கவிஞன் மெய்ம்மையை அறிந்துணருகிறேன் என்று கடன் வாங்கிய சித்தாந்தங்களின் மூலம் தன் விடுதலையை அடைய முயற்சித்தால் அவன் சற்று ஆபத்தானவன் என்றுதான் நாம் முடிவுக்கு வர வேண்டியிருக்கும். ஓர் அறையில் குவிந்திருக்கும் மக்கள், சதி நிரம்பிய மௌனத்தைக் கடைபிடிக்கும் போது, உண்மை நிரம்பிய ஒரு வார்த்தை வெளிப்படுவது கூட துப்பாக்கி வேட்டுச் சத்தமென ஒலிக்கும். அந்தோ, தவிர்க்க முடியாத ஓர் அரிப்பைப் போல நடந்ததைச் சொல்ல சொல்ல விரும்பும் ஒருவர் வேறெதையும் பற்றிச் சிந்திக்க முடியாதவராகிறார். அதனால்தான் ஒரு கவி அக வயமான, புறவயமான என்னும் இருவிதமான புகலிட வாழ்க்கையில் ஒன்றைத் தெரிவு செய்கிறான். நிதர்சனத்தின் மீதான கரிசனத்தில் அவன் இவ்வாறு நடந்துகொள்கின்றானா என்று எளிதில் கூறிவிட முடிவதில்லை. இதிலிருந்தோ மற்ற நாடுகளிலிருந்தோ கரைகளிலிருந்தோ விடுபட்டு குறுகிய காலத்துக்கென்றாவது தனது உண்மையான விடுதலையை அடைய விரும்புவது அவனது இருப்பை உணர்ந்துகொள்ளும் பொருட்டுத்தான்.

இத்தகைய நம்பிக்கை ஒரு மாயத் தோற்றம்தான். 'இன்னொரு ஐரோப்பா' விலிருந்து வந்தவர்கள் எந்த அளவுக்கு அவர்களின் புதிய உலகம் அவர்களைத் தனிமைப்படுத்துகிறது என்பதை உணருகிறார்கள். இது இன்னொரு ஒருவிதமான பிடிவாதத்தை ஏற்படுத்துகிறது. நம்முடைய கிரகம் ஒவ்வொரு வருடமும் சிறியதாகிக் கொண்டு வருகிறது. எதையும் நினைவில் இருத்திக்கொள்ள மறுக்கும் போக்குடன் பெரும் ஊடகங்கள் தப்பித்து ஓடும் மனநிலையை ஏற்படுத்துகின்றன. கடந்த நூற்றாண்டுகளில் இருந்த கல்வியறிவு அற்ற பெரும்பான்மையினர் அவர்களது நாடுகளைப் பற்றியும் அவற்றின் நாகரிகத்தையும் அறிந்திருக்கவில்லை. இன்றுள்ள படித்த, எழுதத் தெரிந்த நவநாகரிக அறிவிலிகளுக்கு - அவர்களில் பலர் பள்ளிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் கற்பிப்பவர்கள்- சரித்திரம் தெளிவற்றும் குழப்பத்தை ஏற்படுத்தும் வண்ணம் இருப்பதாகவும் தோற்றமளிக்கிறது. நவீன படைப்பாளியான மோலியர், நெப்போலியனாக வால்டேராக லெனினாக ஆகிவிடுகிறார்! மனித குலத்தின் எதிர்காலத்தைத் தீர்மானிக்கும் அறிவாற்றல் அல்லது அறிவின்மை



பற்றிச் சுட்டிக் காட்டிய சென்ற பத்தாண்டின் நிகழ்வுகள் மெல்ல நகர்ந்து மறைந்து விடுவது, நீட்சேயின் எதையும் மறுக்கும் ஐரோப்பியக் கோட்பாட்டுக்கு வழி வகுத்து விடுகிறது. 1887ஆம் ஆண்டு நீட்சே, 'எதையும் மறுத்துவிடும் கொள்கைப் பிடிப்பு உள்ளவனின் கண்கள் அவனுடைய நினைவுகளுக்குத் துரோகம் புரியும்; அந்நினைவுகள் மறைந்து போக அனுமதிக்கும்... அவன் தனக்காகச் செய்யாததை மனித குலத்துக்கே செய்ய மாட்டான். அதன் மூலம் வீழ்ச்சியை அனுமதிப்பான்' என்றார். இன்று பொதுப் புத்திக்கும் நல்லது கெட்டதுக்குமான அடிப்படை நியதிகளை மறக்கக், கடந்த காலத்தைப் பற்றிய புனைச்சுருட்டுகள் நம்மைச் சுற்றி படர்ந்திருக்கின்றன. சமீபத்தில் பல்வேறு மொழிகளில் எழுதப்பட்ட நூற்றுக்கும் மேற்பட்ட புத்தகங்கள் யூதர் இனப்படுகொலை என்று ஒன்று நடக்கவே இல்லை என்றும் அது யூதர்கள் கண்டெடுத்த பிரச்சாரம் என்றும் கூறி வருவதாக லாஸ் ஏஞ்சலீஸ் பத்திரிகை செய்தி ஒன்றை வெளியிட்டது. இம்மாதிரி ஒரு சித்த சுவாதீனமற்ற போக்கு இருக்குமெனில் எல்லாவற்றையும் மறந்துவிடும் ஒரு மனநிலையும் சாத்தியம்தானே? அம்மாதிரி இருந்தால் அந்த நிலைமை மரபணுப் பொறியியலை விட, இயற்கையைக் கொல்லும் விஷங்களை விடக் கொடியதன்றோ?

'இரண்டாம் ஐரோப்பா'வைத் தழுவிக் கொண்ட கவிஞனுக்கு யூதர் இனப்படுகொலை நிகழ்ந்த ஒன்று. அதன் நினைவிலிருந்து அவனால் எழ முடியாது;

யூத கிறிஸ்துவ சங்கீதங்களை (Psalms of David) மொழிபெயர்த்தால் ஒழிய. யூதப் படுகொலை என்னும் வார்த்தை பலவித மாற்றங்களுக்கு உட்பட்டு அது யூதர்களின் சரித்திரமென்று நிச்சயிக்கப்படும் போது அவன் ஆதங்கமடைகிறான். ஏனெனில் அது ரஷ்யர்கள், போலிஷ் மக்கள், உக்ரேனியர்கள், மற்றும் பல நாடுகளை சேர்ந்த சிறைக் கைதிகளையும் பெருமளவில் பலி கொண்ட விஷயம் என்பதை மறந்துவிடுவதால். அவன் ஆதங்கத்தின் காரணம், இம்மாதிரி நிலைமை வெகு சீக்கிரத்திலேயே, தொலைக்காட்சி கூறுவதுதான் சரித்திரம் என்னும் நிலைக்குத் தள்ளப்பட்டு, உண்மை மறைக்கப்பட்டு, புதைக்கப்பட்டு விடும் என்பதுதான். ஹெச்.ஜி. வேல்ஸ் அவருடைய 'கால யந்திரத்'தில் குறிப்பிட்ட படி, 'உலகமறியாக் குழந்தைகளால் சூழப்பட்ட பூமியில் நிச்சலனமான, நினைவு என்பதை அறியாத, அதனால் சரித்திரம் என்ற வார்த்தையையும் கேள்விப்படாத சூழலில் காட்டுமிராண்டிகளை எதிர்கொள்ள வேண்டி வரும்' என்னும் உண்மையையும் மற்றும் மேற்கத்திய நாடுகள் அவனுக்குப் புகட்டும் உண்மைகளையும் அவன் பரிசீலிக்க வேண்டிய நிலைக்குத் தள்ளப்படுகிறான்.

இன்றைய தொழில் நுட்ப முன்னேற்றத்தால் கிரகங்களை ஒன்றுபடுத்தும் , அதன் மூலம் உலக மக்கள் சமுதாயத்தை உருவாக்கும் முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. உலக நாடுகளின் சங்கம், ஐக்கிய நாடுகள் சபை ஆகியவை உருவாக்கப்பட்ட தேதிகளை நாம் நினைவில் கொள்ள வேண்டும். ஆனால், இந்தத் தேதிகள் உலக துக்க தினமாகக் கருதப்பட வேண்டிய இன்னொரு தேதியின் முன் தம் சிறப்பை இழந்து நிற்கின்றன. இதைப் பற்றி இன்றுள்ள இளைய சமுதாயத்துக்குத் தெரியாது. இந்தத் தேதி ஆகஸ்ட் 23, 1939. இரண்டு சர்வாதிகாரிகள் சேர்ந்து கொண்டு எந்தெந்த நாடுகளை அவர்கள் இருவருக்குள்ளும் பிரித்து ஆள வேண்டும் என்று இந்தத் தேதியில் தான் ரகசிய ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். இந்த ஒப்பந்தம் மிக மோசமான போரை நிகழ்த்தியது. காலனிய ஆதிக்கத்தை மறுபடியும் நோக்கிச் சென்ற இந்த மோசமான செயல் ஏதோ நாடுகள் என்பது கால்நடைக் கூட்டம், அவற்றின் எஜமானர்களால் அவற்றை வாங்கலாம், விற்கலாம் என்பது போல இருந்தது. அந்த நாடுகளின் எல்லைகள், அவற்றை நிர்ணயிக்கும் சுதந்திரம் எல்லாம் இழக்கப்பட்டு, அவர்களது பாஸ்போர்டுகள் காலாவதியாகிவிட்ட நிலைக்குத் தள்ளப்பட்டன. நாற்பது வருடங்களுக்கு முன்பு அந்த சர்வாதிகாரிகளால் எந்த மாதிரியான விதிகளுடன் இவை நடை பெற்றன என்பதை இன்று மனிதர்கள் உதட்டின் மேல் விரலை வைத்து ரகசியமாகப் பேசுவது வினோதமாக இருக்கிறது.

மனித உரிமைக் குற்றங்களைப் புற வெளியில்



ஒப்புக்கொள்ளாததோ அல்லது அவற்றைப் பொது வெளியில் கண்டிக்காததோ ஒரு விஷத்தைப் போல. இது இரு நாடுகளுக்கு இடையே உள்ள நல்லுறவைப் பாழ்படுத்தி விடும். போலிஷ் கவிதைகளின் திரட்டு நூல்கள் விளாடிஸ்லா செபிலா, லெக் பிவோவார் என்னும் காலஞ் சென்ற என் நண்பர்களின் கவிதைகளைப் பிரசுரிக்கின்றன. அவர்கள் இறந்த தினத்தையும் (1940). அவர்கள் எவ்வாறு மரணமடைந்தார்கள் என்பது போலந்தில் உள்ள அனைவரும் அறிந்த ஒன்று. அவர்களைப் போலப் பல ஆயிரக்கணக்கான போலிஷ் வீரர்கள் ஹிட்லரின் ஆட்களால் கொல்லப்பட்டு ஒரு மாபெரும் கல்லறையே உருவாகியது. இவற்றைப் பற்றி வாய் திறக்காதிருப்பது மகா மட்டமான செயலாகும். சரித்திரம் படிக்கும் மேற்கத்திய இளம் மாணவர்கள் 1944இல் இரண்டு சர்வாதிகாரிகளால் க்ஷீணமடைந்துவிட்ட வார்சாவில் இரண்டு லட்சம் பேர் கொல்லப்பட்டார்கள் என்பதை அறிய வேண்டாமா?

அந்த இரண்டு கொலைகார சர்வாதிகாரிகளும் இன்று உயிருடன் இல்லை; ஆனால், அவர்கள் ராணுவத்தை விடப் பெரிய வெற்றியைத் தங்களுடன் தக்க வைத்துக்கொண்டார்களா என்று யாரறிவார்? அட்லான்டிக் சாசனம் மூலம் நாடுகள் என்பது சீட்டாட்டத்திலோ தாய விளையாட்டிலோ உருட்டப்படும் சீட்டுக்கள், கட்டைகள் போல இல்லாவிட்டாலும் விற்பனைப் பொருள்கள்தாம் என்று நிர்ணயித்துவிட்ட பிறகு, ஐரோப்பாவை இரண்டு பகுதிகளாகப் பிரிப்பது என்பது உறுதியாகிவிட்டது. ஐக்கிய நாடுகளுள் மூன்று பால்டிக் தேசங்களைச் சேர்க்காமல்விட்டது இரண்டு சர்வாதிகாரிகளின்

நிரந்தரமான நினைவுச் சின்னமாகிவிட்டது. போருக்கு முன் அந்த மூன்று நாடுகளும் உலக நாடுகளின் சங்கத்தில் இடம் பெற்றிருந்தன. ஆனால், 1939 ஆம் ஆண்டு ரகசிய உடன்படிக்கையின் பிரகாரம் அவை ஐரோப்பாவின் வரைபடத்திலிருந்து மறைந்துவிட்டன.

நான் என் நினைவிலுள்ள காயத்தை முன் வைப்பதற்கு என்னை மன்னிக்க வேண்டும். 'மெய்ம்மை' என்னும் வார்த்தையின் மீதான என் ஈர்ப்புக்கு இது தொடர்புடையதுதான். பலமுறை இது சரியாக உபயோகப்படுத்தப் படாவிட்டாலும் மரியாதைக்குரிய ஒன்று. மக்களின் புகார்கள், துஸிடைடேட்சின் சரித்திரத்தை விட ஒப்பந்தங்கள் என்ற பெயரில் நடந்த ஏமாற்று வித்தைகள், மேப்பிள் இலையின் வடிவு, கடலின் மேல் படிந்த சூரிய உதயமும் அஸ்தமனமும் காரண காரிய இழைமானம். நாம் இயற்கை என்றோ சரித்திரம் என்றோ அழைத்தாலும் இவையெல்லாம் தகர்க்க முடியாத மறைவிலிருக்கும் மெய்ம்மையை உணர்த்த நல்ல வேளையாக இருக்கின்றன. இந்த மெய்மையே கலையையும் விஞ்ஞானத்தையும் இயக்கும் சக்தி வாய்ந்த பரிமாணத்துடன் உள்ளது.

காயத்தின் நினைவைத் தவிர வேறு எந்த நினைவும் இருக்காத சாத்தியமும் உள்ளது. இஸ்ரேலின் இன்னல்களை உள்ளடக்கிய புத்தகமான பைபிள் இதைத்தான் நமக்குக் கற்றுக் கொடுத்துள்ளது. அந்தப் புத்தகம் வெகு காலத்துக்கு ஐரோப்பிய நாடுகள் ஒருவிதத் தொடர்ச்சியைத் தக்க வைத்துக்கொள்ள உதவியிருக்கிறது - நவீனமான வரலாற்று வாய்மை என்னும் வார்த்தையுடன் இதைக் குழப்பிக்கொள்ள வேண்டியதில்லை.

வெளிநாட்டில் நான் கழித்த முப்பது வருடங்களில் என் மேற்கத்திய சக ஊழியர்களான எழுத்தாளர்கள் அல்லது இலக்கியம் கற்பிக்கும் ஆசிரியர்களை விட நான் சிறப்புரிமை பெற்றவனைப் போன்று உணர்ந்திருக்கிறேன். சமீபத்தில் அல்லது கடந்த காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் என் மனதில் கூர்மையாக விரிவாகப் படர்ந்துள்ளன. போலந்து,செக்கோஸ்லாவியா, ஹங்கேரி நாடுகளிலிருந்து வந்த கவிதைகளுக்கும் நாவல்களுக்கும் திரைப்படங்களுக்கும் மேற்கத்திய ஆடியன்ஸின் முரண்பட்ட மனநிலையை எதிர்கொள்ள வேண்டியிருந்தது. தணிக்கை முறையினால் பாதிக்கப்பட்டுப் போராடிய சூழலின் மனப்பதிவு இத்தகைய அனுபவங்களை எளிதாகக் கடந்து செல்ல உதவின. ஞாபகங்கள், ஒரு மரத்தின் அல்லது சுவரின் மேல் படர முயலும் பச்சைப் படர்க்கொடியை நினைவுறுத்தி, எங்களின் பலமாக நின்று இத்தகைய எதிர்ப்புக் குரல்களைச் சமாளிக்க உதவின,



சற்று முன்னால் ஒரு கவிஞனுக்கும் அவனது நாட்டு மக்களுக்கும் இடையே உள்ள தோழமை உணர்ச்சி பற்றிய என் கருத்தினால் ஏற்பட்டுள்ள முரண்பாட்டுக்கு ஒரு முடிவு காண வேண்டும் என்ற ஆசையைத் தெரிவித்திருந்தேன். பூமிக்கு மேலே பறக்கும் உணர்வை ஒரு கவிஞனின் தொழிலெனக் கற்பனை செய்வதில் ஒரு முரண் இருக்கிறது. ஒரு கவியின் சகாப்தம் சரித்திரத்தின் கண்ணிகளிலிருந்து விடுபடுவதில் இதைக் காணலாம். எப்படி ஒரே நேரத்தில் மேலே இருந்து கொண்டு பூமியின் எல்லா அந்தரங்கங்களையும் அறிய முடியும்? கால ஓட்டம் தரும் தொலைவு எதிரெதிரானவற்றையும் சமன்படுத்த வல்லது. 'பார்ப்பது' என்பது, கண்பார்வை குறித்தது மட்டுமல்ல; நினைவில் நிலையுறுத்துவதும் கூட. 'பார்த்து விவரி' என்பது கற்பனையூற்றை பெருகச் செய் என்பதும் கூட. காலம் ஏற்படுத்தும் தூரத் தொலைவுஎன்பதுநிகழ்வுகளையோநிலத்தோற்றத்தையோ மனிதர்களையோ நிழல்களென மாற்றி வெளிறி விடும் நிலைக்கு ஆளாக்கி விடக்கூடாது. மாறாக அது அனைத்தையும் வெளிச்சத்தில் காண்பிக்க வேண்டும். அதன் மூலம் ஒவ்வொரு நிகழ்ச்சியும் ஒவ்வொரு தருணமும் வெளிப்படுத்தப்பட்டு, மனிதரின் சிதைவும் உன்னதமும் வெளியுலகின் முன் வைக்கப்படவேண்டும். காண்பிக்க வேண்டும். அப்போதுதான் அவர்கள் கடந்த காலக் கட்டுக் கதைகளையும் புராணங்களையும் பற்றித் தெரிந்துணர்ந்து தங்களின் பொறுப்பை உணர்ந்து செயலாற்றிட முடியும்.

எனவே மேலிருந்து காணப்படும், அழிவற்ற பொறுமையைத் தன்னில் கொண்டிருக்கும் இன்றைய பூமி ஒரு கவிஞனின் கவிப் பொருளாக விளங்குகிறது.

**எ**ன் மனம் இறந்த காலத்தில் மூழ்கிக் கிடக்கிறது என்று யாரும் நினைக்க வேண்டாம்; ஏனெனில் அது உண்மையல்ல. என் சமகாலத்தினரைப் போல நிராசையின் இறுக்கம், நிகழவிருக்கும் அழிவு ஆகியவற்றை உணர்ந்திருக்கிறேன். எதிலும் நம்பிக்கை

இல்லாது திரியும் நிலைக்குத் தள்ளப்படுவதை மறுதலித்திருக்கிறேன். ஆழமாக நோக்கும் போது என் கவிதை ஆரோக்கியமானதாக விளங்குவதைக் காண்கிறேன். இருண்ட காலச் சூழலில் அது சமாதானத்தையும் நடுநிலைமையையும் விரும்பி நிற்பதைக் காண்கிறேன். பரிதவிப்புடன் நடமாடாதே என்று எனக்குக் கற்பித்த ஆசானை நினைவு கூறுகிறேன். நாடும் அதன் ஏரிகளும் ஆறுகளும் மரபுகளும் நமக்குத் தரும் சன்மானங்களைத் தவிர, நமது இளமையில் நாம் சந்திக்கும் ஆளுமைகளும் தருகிறார்கள். என் உறவினரும் பாரீசைச் சேர்ந்த துறவியும் தொலைநோக்குப் பார்வை கொண்டவருமான ஆஸ்கர் மிலாஸ் என்னை அவருடைய மகனைப் போல நடத்தியது என் வாழ்வில் எனக்குக் கிடைத்த அதிர்ஷ்டம். ஒரு காலத்தில் குடும்பப் பெயராகவும் நாடாகவும் இருந்த Grand Duchy of Lithuania-வின் சிக்கலான கதையை ஒருவர் அலசினால் அவர் ஏன் ஒரு பிரெஞ்சுக் கவியாக இருந்தார் என்று தெரிய வரும். இது இருக்கட்டும், சமீபத்தில் ஒரு பாரிஸ் பத்திரிகையில், அரை நூற்றாண்டுக்கு முன், உலகின் மிகப் பெரிய கௌரவம் என் குடும்பப் பெயரைக் கொண்ட ஒரு கவிஞருக்குக் கொடுக்கப்படாதை வருத்தத்துடன் தெரிவித்திருந்தார்கள்.

நான் அவரிடமிருந்து நிறையக் கற்றுக்கொண்டேன். பழைய, புதிய ஏற்பாடுகளைப் பற்றி ஆழமான பார்வையை என்னிடம் ஏற்படுத்தினார். மனத்தைக் கட்டுப்படுத்துவதிலும் கலையைப் பேணுவதிலும் ஒரு துறவியின் கண்டிப்பைக் கொண்டிருக்க வேண்டும் என்றார். இரண்டாந்தர விஷயங்களுக்கு முதலிடம் தருவது பெரும் பாவம் என்பது அவரது எண்ணமாக இருந்தது. அவரே சொன்னது போல 'பரிதாபம், தனிமை மற்றும் கோபத்தினால் சிதிலமடைந்த காதலை' மக்கள் மீது காட்டும் ஒரு தீர்க்கதரிசியின் பேச்சை நான் கேட்டேன். பேரழிவை நோக்கிச் செல்லும் உலகின் போக்கை எச்சரித்து அவர் கூற்றுகள் அமைந்தன. பேரழிவு நிச்சயம் என்ற அவர், அது ஒரு மாபெரும் நாடகத்தின் இறுதிப் பங்காகத் தீச்சுவாலையென எழும் என்று கணித்தார்.

பதினெட்டாம் நூற்றாண்டில் விஞ்ஞானம் எடுத்த வழிமுறை ஆழமான பாதிப்புகளைக் கொண்டது என்று அவர் நினைத்தார். அத்தகைய வழிமுறை நிலச்சரிவைப் போன்ற மோசமான விளைவுகளைக் கொண்டு வரும் என்பது அவர் கருத்து. அவருக்கு முன்பிருந்த வில்லியம் பிளேக் போலல்லாது, அவர் ஆரம்பத்திலேயே ஒரு புது உலகத்தைத் அறிவித்தார். இரண்டாம் மறுமலர்ச்சியை மாசுபடுத்திய சில விஞ்ஞான அனுபவங்களை ஒதுக்கி விடும் பணியில் ஈடுபட்டார். இதை எந்த அளவுக்கு நான் கற்றுக்கொண்டேனோ, ஒருமுனைப்படுத்தலை அது கற்றுக் கொடுக்க முனைந்ததே எனக்குப் போதும்.

ஆஸ்கர் மிலாஸும் வில்லியம் பிளேக்கைப் போல, இமானுவேல் ஸ்விடன்பர்க்கின் எழுத்துகளினால் கவரப்பட்டார். அந்த விஞ்ஞானி எல்லோருக்கும் முன்னமே நியூட்டனின் பேரண்ட விதியில் மறைந்திருந்த மனிதனின் தோல்வியைக் கண்டறிந்தார். என் உறவினரின் பாதிப்பால் நான் ஸ்விடன்பர்க்கின் எழுத்துக்கு அடிமையானேன். இன்று அவருடைய நாட்டில் நடக்கும் இந்த விசேஷ நிகழ்ச்சியில் முதன்முதலாக இப்படி வந்து சேருவேன் என்று நான் ஒரு போதும் நினைத்ததில்லை என்பதுதான் உண்மை.

நம்முடைய இந்த நூற்றாண்டு அதன் முடிவை நெருங்கும் இச் சமயத்தில் அதனுடைய செல்வாக்கை நான் குறைத்து மதிப்பிட மாட்டேன். ஏனெனில் இந்த நூற்றாண்டு எப்போதும் நம்பிக்கையைத் தந்த ஒன்று. நாம் அறிந்திராத, ஆனால், பங்கு பெற்ற, மாபெரும் பரிணாம வளர்ச்சி ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. ஒவ்வொரு முறையும் அது மேலே எழும்பி வருகையில் நமக்கு எல்லையற்ற ஆச்சரியத்தை அது அளிக்கிறது. அத்தகைய பரிணாமம், ஆஸ்கர் மிலாஸின் வார்த்தைகளில் கூறுவதென்றால் 'எழுச்சிக்கும் அளவில்லாத் துன்பத்திக்குமிடையே எண்ணிக்கை கடந்த சாதாரண மக்கள் யாருமறியாமல் பங்காற்றினார்கள்' என்பதை நிரூபிக்கும் ஒன்று. அவர்களின் ரகசியத்தில் சத்தியத்தின் வார்ப்படம் வார்த்தைகளால் சொல்லித் தீர்க்க முடியாத ஒரு மொழியில் இருந்தது. இந்த சுமையைப் பெரும் ஊடகங்களும் அறிவுஜீவிகளும் தங்களின் பொறுப்பு என ஏற்றுத்தானாக வேண்டும். ஊகங்களை மறுத்துப் பரிணாம வளர்ச்சி தன் போக்கில் செல்கிறது. நடுவில் எதிர்ப்படும் இடர்களை, ஆபத்துகளை மீறி மனிதகுலம் ஏற்றம் தரும் புத்தறிவைப் பெறும் முன்பு, காலம் தனது உளைச்சல்களைக் களைந்து விரைகிறது. தகுதி மேலான ஒரு சமூகப் படிநிலை மீது நிறுவப்பட வேண்டும். என் ஆசிரியர்களான சிமோன் வெய்ல், ஆஸ்கர் மிலாஸ் ஆகியோருக்கான தகுதியை சமூகம் 'எஸ்' என்று கூறித் தர முன் வர வேண்டும். நாம் சிலருக்கான மரியாதையைப் பெறப் போராட வேண்டிய அதே சமயம் வேறு சில பெயர்களுக்கு நமது மறுப்பை 'நோ' என்று தெரிவிப்பதில் நாம் உறுதியாக நின்றாக வேண்டும். இந்த உரை வளைந்து செல்லும் என் நினைவுப் பாதையைச் சுட்டிக் காட்டினாலும் {கவிஞர்களுக்கு இந்தக் கெட்ட பழக்கம் உண்டு) என்னுடைய 'எஸ்', 'நோ' இரண்டையும் தெளிவாக உரைத்துவிட்டேன் என்று நம்புகிறேன். இங்குள்ள உரையாற்றுபவரும் நீங்களும் கடந்த காலத்துக்கும் எதிர்காலத்துக்குமான பாலங்கள் என்பதில் சந்தேகமில்லை.

*mail to:* **weenvy@gmail.com**

## தருமமிகு சென்னை - 13

# சிந்தாதிரிப்பேட்டை
# சென்னையில் ஒரு கூவக்கரைப் பேட்டை

எனது நண்பர் திரைப்பட இயக்குநர் சிதம்பரம், சென்ற வாரத்தில் ஒரு நாள் (16.01.2025) என்னைச் சிந்தாதிரிப்பேட்டையில் வசிக்கும் ஓவியர் முருகேசனைச் சந்திக்க அழைத்துச் சென்றார்.

● **சந்தியா நடராஜன்**

இன்னும் எட்டு ஆண்டுகளில் தனது நூற்றாண்டை எட்டிப் பிடிக்க இருக்கிறார் ஓவியர். வாழ்வாங்கு வாழ்ந்த, வாழ்கிற மனிதர். வைகைக் கரையில் பிறந்த இவரது குடும்பம் தொழில் ரீதியாகச் சென்னைக்குக் குடிபெயர்ந்தபோது சென்னைவாசியானார். திருமணத்துக்குப் பிறகு தனது மனைவியின் முகவரியான, 37 நைனியப்பன் தெரு, சிந்தாதிரிப்பேட்டையில் உள்ள 'நாயகி இல்லம்' இந்த நாயகனின் நிரந்தர முகவரியானது. மகன் காங்கேயன் சிறந்த தொழிலதிபர். அண்ணா சாலையில் அண்ணா சிலைக்கு அருகில் இயங்கிவரும் 'சென்னை கார்ப்பரேட் கிளப்' காங்கேயனின் சாதனைகளில் ஒன்று.



சிந்தாதிரிப்பேட்டைக்குள் நான் காலடி வைத்துப் பத்துப் பதினைந்து ஆண்டுகள் இருக்கலாம். சென்னையில் சிந்தாதிரிப்பேட்டை ஒரு கூவ நதிக்கரை நகரம். இந்தப் பேட்டையைச் சுற்றிவரும் கூவம், பேட்டைக்கு மாலையிட்டதுபோலக் காட்சியளிக்கிறது. அண்ணாசாலை ஒருபுறம் வரம்புகட்டிச் செல்கிறது.

செயிண்ட் தாமஸ் வரை சென்று, மௌண்ட் ரோடு என்று அழைக்கப்பட்டு அண்ணாசாலை என்று பெயர் மாற்றம் பெற்றிருக்கும் இந்தச் சாலை, உண்மையில் நகரத்திற்கு நடுவகிடு எடுத்ததுபோல்தான் இருக்கிறது. இராயப்பேட்டை, தேனாம்பேட்டை, தியாகராய நகர், சைதாப்பேட்டை என எல்லாப் பேட்டைகளுக்கும் எல்லைக் கோடாகச் சென்னை நகரத்தைக் கிழித்துக்கொண்டு ஓடுகிறது அண்ணாசாலை.

நானும் சிதம்பரமும் எழும்பூரிலிருந்து சிந்தாதிரிப்பேட்டை அருணாச்சலம் சாலைக்குக் கால்நடையாகவே சென்றோம். இந்தப் பேட்டை சென்னையின் ஆரம்ப காலத்தில் நன்றாகத் திட்டமிட்டு உருவாக்கப்பட்டது. சென்னை நகரின் முதல் கழிவு நீர் அகற்றும் பம்பிங் ஸ்டேஷன் அமைந்த இடமும் இதுதான். சென்னை நகரின் பொது நூலகங்களில் 'முதல் முதல்' என்ற பெருமைக்கும் உரியதாக அமைந்திருக்கிறது இந்த, 'சின்னதறிபேட்டை' என்று காரணப் பெயர் பெற்றிருக்கும் சிந்தாதிரிப்பேட்டை. ஆங்கிலேயர் காலத்தில் ஆங்கிலேய நிறுவனங்களுக்குத் துணி நெய்து தரும் சிறு தறிகள் அதிகம் நிறுவப்பட்டிருந்த இடம் இது.

அருணாச்சலம் சாலையைச் சிந்தாதிரிப்பேட்டையின் மௌண்ட் ரோடு என்று சொல்லலாம். பேட்டையை இரு கூறாகக் கிழிக்கிறது இந்தச் சாலை. இதைக் குறுக்கிட்டு இருபுறமும் நேர்க்கோட்டில் கிடக்கும் சாலைகள் இணைகோடுகள் போல உள்ளன. அதாவது நைனியப்பன் தெரு என்றால், அருணாச்சலம் சாலையின் இடதுபுறத்திலும் நைனியப்பன் தெரு, வலதுபுறத்திலும் நைனியப்பன் தெரு. இதைப் போலவே ஐயாமுதலி தெரு, சாமி நாயக்கன் தெரு, சிங்கன்ன செட்டி தெரு ஆகியனவும். அருணாச்சலம் தெரு கூவத்துக்கு அருகில் அண்ணாசாலை நோக்கித் திரும்புகிறது. திரும்பும் இடத்தில் நேப்பியர் பூங்காவும் அதனை அடுத்து பம்பிங் ஸ்டேஷனும் அமைந்துள்ளன. திரும்பிச் சென்று அண்ணாசாலையைத் தொடுகிறது துணை மேயர் கபாலமூர்த்தி சாலை. சிந்தாதிரிப்பேட்டையின் எல்லையாக சிம்சன் கம்பெனி வளாகம் அண்ணாசாலையை ஒட்டி விரிந்து கிடக்கிறது.

சிம்சன் கம்பெனி சிந்தாதிரிப்பேட்டைக்கு ஒரு பக்க வரம்பு.

சுருங்கச் சொல்லவேண்டுமென்றால் அண்ணாசாலையின் தென்புலத்தில் தீவுத்திடல் போல வடபுலத்தில் இருக்கும் சிந்தாதிரிப்பேட்டையும் சீரமைக்கப்பட்ட ஒரு தீவாகவே ஒதுங்கி, ஒடுங்கி இருக்கிறது.

நானும் சிதம்பரமும் ஓவியர் வீட்டுக்குச் செல்வதற்கு முன்பாக தேநீர் அருந்திவிட்டுச் செல்லலாம் என்று அருணாச்சலம் சாலையில் காலாற நடந்து சென்றோம். வலது புறத்தில் ஒரு பழைய கட்டடம் கண்ணில் பட்டது. அது ஒரு வெள்ளிப் பட்டறை. 1990ஆம் ஆண்டு வருவாய் புலனாய்வுத் துறையில் இருந்தபோது அந்தக் கட்டிடத்தை அல்லும் பகலும் கண்காணிப்பில் வைத்திருந்தோம்.



ஓவியர் முருகேசன்

அன்று ஒரு பந்த் நாள் எல்லாக் கடைகளும் மூடப்பட்டிருந்தன. மதியம் சாப்பிட வழியில்லை. அப்போது நான் ஒண்டிக்கட்டை. அலுவலக டிரைவர் என்னை அப்போலோ மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றார். மருத்துவமனை காண்டீனில் சாப்பிட்டுவிட்டு வீட்டுக்குச் சென்று ஓய்வெடுத்துக் கொண்டு மாலை மீண்டும் அலுவலகம் திரும்பினேன். அந்தக் கட்டிடத்தைக் கண்காணித்துக் கொண்டிருந்த அதிகாரிகள் அங்கிருந்து ஒரு ஆட்டோவில் எடுத்துச் செல்லப்பட்ட வெளிநாட்டு வெள்ளிக் கட்டிகளைக் கைப்பற்றிய செய்தி கிடைக்கப் பெற்றது. பிறகு அந்தக் கட்டடம் முழுமையான சோதனைக்கு உட்படுத்தப்பட்டது. அதன் தொடர்ச்சியாக அந்த வெள்ளிப் பட்டறையின் உரிமையாளர் வீட்டைச் சோதனையிட எழும்பூர் மாண்டியத் லேனுக்குச் சென்றோம். நள்ளிரவில் அந்தப் பெரிய பங்களாவில் நுழைந்தோம். சோதனையின் போது ‘DR’ அல்லது ‘டாக்டர்’ என்று அறியப்பட்டிருந்த அந்த வெள்ளி வியாபாரியின் வீட்டிலிருந்தும் கடத்தப்பட்ட வெளிநாட்டு வெள்ளிக் கட்டிகள் கண்டெடுக்கப்பட்டன. சென்னை மாநகரத்தின் வெள்ளிச் சந்தையில் பிரபலமானவர் அந்த DR சார். அவரது வீட்டைச் சோதனையிட வந்திருப்பவர்கள் மத்திய வருவாய் புலனாய்வு அதிகாரிகள் என்று அறிந்தவுடனேயே ஆடிப்போன அவர், வெள்ளிக் கட்டிகள் கைப்பற்றியபின் என்ன செய்வதென்று அறியாமல் சிந்தை குலைந்து உறைந்துபோய் நின்றார்.

கடத்தல் வியாபாரத்தில் ஈடுபடும் எந்த நம்பர் ஒன் மனிதனும் அந்தப் பொருள்களை நேரடியாகக் கையாளமாட்டான். பெரிய முதலாளிகள் அவற்றைக் கண்ணால்கூடக் காண்பதில்லை. அப்படியிருக்க, இவர் மட்டும் தன் வீட்டிலேயே அந்த வெள்ளிக் கட்டிகளை வைத்திருக்க முன்வந்தது ஏன் என்ற கேள்வி எழுந்தது. இதே கேள்வியை அவரிடம் கேட்டபோது சொன்னார்: “என் நேரம் சார். பந்த் தினத்தில் யார் வரப் போகிறார்கள் என்ற அசட்டுத்தனம் சார்.”

பிறகு அவர் விசாரணைக்கு எமது தி.நகர் அலுவலகத்துக்கு அழைத்து வரப்பட்டார். விசாரணை கடுமையாக இருந்தது. நேரம் செல்லச் செல்லத் தனது விதியும் கதியும் என்ன என்பதை உணர்ந்தவுடன் மனம் திறந்தார்: “சார், நான் வாங்கி விற்கிறவன். யார் என்ன ரேட்டுக்குத் தருகிறார்கள் என்பதுதான் எனக்கு முக்கியம். அதற்கு மேல் அவன் சரித்திரம் பற்றி நான் ஏன் அறிந்துகொள்ள வேண்டும்?”

“சரி, இந்த வெள்ளிக் கட்டிகள் உங்களுக்கு சப்ளை செய்தது யார்?”

“பொதுவாக புரோக்கர்கள் மூலம்தான் என்னை அணுகுவார்கள். நீங்கள் கைப்பற்றிய வெள்ளிக் கட்டிகளைத் தந்தவர் எழும்பூர் அசோகா ஓட்டலில் _ இந்த அறை எண்ணில் __ இந்தப் பெயரில் தங்கியிருக்கிறார்.”

அசோகா ஓட்டல் பதிவேடுகளை ரகசியமாகப் பார்வையிட்டபோது விசாரணையில் சொல்லப்பட்ட தகவல்கள் சரி என்பது உறுதியாயிற்று. ஆனால், குறிப்பிட்ட அந்த அறை பூட்டப்பட்டிருந்தது. அறைக்கு உரியவர் அறையைக் காலி செய்துவிடவில்லை என்பது தெரியவந்தது. இரண்டாவது நாள் இரவும் சிவராத்திரியானது. அந்த அறைக்கு உரியவர் இரவு நெடு நேரம் கழித்தே வந்தார். அந்த அறை திறக்கப்பட்ட மறுகணம் காத்திருந்த நாங்கள் அந்த அறைக்குள் நுழைந்து அவரது உடைமைகளைச் சோதனையிட்டோம். அவரது சூட்கேசில் சென்னைத் துறைமுகத்தில் உள்ள ஒரு கப்பல் சுமந்து வந்துள்ள ஒரு கண்டெய்னரை



சிந்தாதிரிப்பேட்டை

முறைப்படி வெளியே எடுத்துச் செல்ல, சுங்கத்துறைக்குச் சமர்ப்பித்துள்ள ஆவணங்கள் இருந்தன. கப்பலின் பெயர், இறக்குமதி செய்யும் நிறுவனத்தின் பெயர், கண்டெய்னர் நம்பர், கண்டெய்னரில் உள்ள பொருட்கள், அவற்றின் மதிப்பு ஆகிய எல்லா விவரங்களும் கிடைத்துவிட்டன. அந்த ஆவணங்களை எல்லாம் முறைப்படி கைப்பற்றினோம். அறையிலிருந்த நபரை அலுவலகத்துக்குக் கொண்டு சென்றோம்.

மூன்றாம் நாள் காலை விடிந்தது. சிக்கிய இருவரும் எவ்வித மனத்தடையும் இன்றி அவரவர் வாக்குமூலத்தைத் தந்தார்கள். கப்பலில் உள்ள அந்த கண்டெய்னரில் ஏதோ மணல் அல்லது களிமண் போன்ற பொருள் இருப்பதாகச் சுங்க ஆவணங்களில் கண்டிருந்தது. ஆனால், ஓட்டலில் கைப்பற்றப்பட்ட ஒரு காகிதத்தில் அந்த கண்டெய்னரில் உள்ள தகர டின்களின் எண்கள் குறிக்கப்பட்டிருந்தன. ஒரு சில எண்கள் ஒரு வண்ணத்திலும் ஒரு சில எண்கள் வேறு ஒரு வண்ணத்திலும் சுழிக்கப்பட்டிருந்தன. மற்ற எண்கள் மீது எந்த வண்ணமும் இல்லை. விசாரணையின்போது வேண்டிய தகவல்கள், பெரும் சிரமங்கள் ஏதுமின்றி வெளிப்பட்டுவிட்டன. வண்ணம் தீட்டப்படாத எண்கள் உள்ள டின்களில் சுங்க இலாகாவுக்கு டிக்ளர் செய்த பொருள்கள் மட்டுமே இருப்பதாகவும் மற்ற இரு வண்ணங்கள் கொண்ட எண்கள் உள்ள தகர டின்களில், ஒரு குறிப்பிட்ட வண்ணம் கொண்டவற்றில் அடிப்பாகத்தில் வெள்ளிக் கட்டிகளை வைத்து அதனை டிக்ளர் செய்துள்ள மணல் போன்ற பொருளால் நிரப்பி மறைத்திருப்பதாகவும் தெரிய வந்தது. அதே போல் இன்னொரு வண்ணம் கொண்ட எண்களுக்குரிய டின்களின் அடிப்பாகத்தில் பால் பேரிங்குகள் மறைத்து வைக்கப்பட்டிருப்பதும் தெரியவந்தது.

அடுத்து தி.நகர் அலுவலகத்திலிருந்து சென்னைத் துறைமுகத்திற்குச் சென்றோம். கப்பலிலிருந்து வேண்டப்பட்ட கண்டெய்னரை இறக்கிச் சோதனையிட்டோம். கைப்பற்றப்பட்ட காகிதத்தில் குறிப்பிடப்பட்ட எண்களுக்குரிய டின்களைத் திறந்து சோதனையிட்டபோது கடத்திவந்த வெள்ளிக் கட்டிகளும் பால் பேரிங்குகளும் சுங்க சட்டத்தின் கீழ் கைப்பற்றப்பட்டன. குற்றம் இழைத்த இருவரும் உரிய நேரத்தில் கைது செய்யப்பட்டு சிறையிலடைக்கப்பட்டனர்.

இவர்களில் சிந்தாதிரிப்பேட்டைக்காரர் இறுதிக் கட்டத்தில் தன் நிலை மறந்து ஒரு சாதாரண மனிதனாகக் கலங்கி நின்றார். “எதை வேண்டுமானாலும் இழக்க நான் தயார் சார். பொருள் போகட்டும். என்னை வழக்கில் உட்படுத்தாதீர்கள். கைது செய்துவிடாதீர்கள்” என்று மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டிருந்தார். அதற்கு வாய்ப்பில்லை என்று தெரிந்தும் அதை ஏற்க மறுத்தது அவர் மனம்.

“நான் தவறு செய்துவிட்டேன்” என்று அலுக்காமல் சலிக்காமல் சொன்னார். பிறகுதான் தெரியவந்தது, அவரது மகளுக்கும் ஒரு மிகப்பெரிய செல்வந்தர் வீட்டுப் பையனுக்கும் திருமணம் நிச்சயிக்கப்பட்டிருந்தது என்று. தனது மகளுக்காகத் தான் கட்டி எழுப்பிய சாம்ராஜ்யத்தை இழக்கக் கூடியவர்தான் அவர்.

சட்டத்திற்கு எதிராக விளையாடும் நெஞ்சுரம் படைத்தவர்கள்கூட அன்பின் பிடியில் அகப்படும்போது குரல் உடைந்தும் மனம் நொறுங்கியும் போகிறார்கள்.

**சி**ந்தாதிரிப்பேட்டை அருணாச்சலம் சாலையைக் கடக்கும்போதெல்லாம் கடந்துபோன இந்த நிகழ்வும் இந்த உணர்வும் தலைகாட்டாமல் இருப்பதில்லை.



சிந்தாதிரிப்பேட்டை சந்தை பழைய படம் (நன்றி: தி ஹிந்து)

இந்த மீள் நினைவுகளுடன் தேநீர் குடித்து முடித்தேன். பிறகு நானும் சிதம்பரமும் நாயகி இல்லத்திற்கு நடந்து சென்றோம். ஓவியர் முருகேசனின் மாடி அறைக்குச் சென்றோம். அறையில் இருள் சூழ்ந்திருந்தது. கணினியில் ஏதோ வேலை செய்துகொண்டிருந்தார். மின் விளக்கை ஒளிரவிட்டபின் ஓவியரின் உருவம் தென்பட்டது. ஆனால், அவரின் வயது தென்படவில்லை. உற்சாகத்துடன் வரவேற்றார். "வெகு நாட்களாக உங்களைச் சந்திக்கும் வாய்ப்பு இல்லாமல் போய்விட்டது" என்று கனிவான குரலில் பேசத் தொடங்கினார். அவரைப் பேசவிட்டு, நானும் சிதம்பரமும் கேட்டுக்கொண்டிருந்தோம்.

"இந்த வீட்டின் வயது 170 ஆண்டுகள். கடந்த 60 ஆண்டுகளுக்கு மேலாக நான் இந்த வீட்டில் வாழ்ந்து வருகிறேன். ஆரம்ப கட்டத்தின் கூவம் தெளிந்த நீருள்ள ஆறாக ஓடிக் கொண்டிருப்பதை நான் பார்த்திருக்கிறேன். கூவத்தில் குளிப்பார்கள். கூவத்து நீரை வீட்டில் பயன்படுத்திக்கொள்வார்கள். சாமி நாயக்கன் தெரு, ஐயா முதலி தெரு, வெங்கடேச கிராமணி தெரு எல்லாம் கூவத்தில் போய் முடியும். கூவத்துக்கு அக்கரையில் புறநகர் ரயில் கூவியபடி ஓடிக்கொண்டிருக்கும். இந்தச் சிந்தாதிரிப்பேட்டையையும் என்னையும் பிரிக்கவே முடியாது."

நூறு ஆண்டுகளைத் தொடப்போகிற இந்த ஓவியரின் குரலிலும் பிசிறில்லை; நினைவோட்டத்திலும் தடையில்லை.

"'டம்பாச்சாரி'ன்னு ஒரு திரைப்படம் வந்தது தெரியுமா? அந்த டம்பாச்சாரி இங்கதான் இருந்தார். எம்.ஆர். ராதா பிறந்த இடம் இதுதான். அவங்க அப்பாவுக்கு மூர் மார்க்கெட்ல கடை. எம்.ஆர்.ராதா போல வாழ்க்கை யாருக்கும் அமைந்ததில்லை. ஈ. வெ.ரா. மீது அளவு கடந்த பற்று. ஆனால், அவரது கட்சியில் உறுப்பினராகவில்லை. யாருக்கும் கட்டுப்படாதவர். மதுரையில அனுப்பானடின்னு ஒரு இடம். அங்கதான் நாடக கொட்டாய்; கீற்றுக் கொட்டாய். அங்கேயே ராதாவைப் பார்த்திருக்கிறேன். டிகேஎஸ் பிரதர்ஸ் வந்த பிறகுதான் மதுரையில் கோபாலகிருஷ்ண தியேட்டரை நாடக அரங்கமாக மாற்றினார்கள்."

எம்.ஆர். ராதாவை அவ்வளவு புகழ்ந்து பேசும் ஓவியர் முருகேசன் பல்வேறு துறை சார்ந்த பெரியவர்களிடமும் பழக்கம் கொண்டிருக்கிறார். சிந்தாதிரிப்பேட்டையில் வாழ்ந்திருந்த கிருபானந்த வாரியார் சாமிகள், அ.ச. ஞானசம்பந்தம் போன்றவர்களைப் பற்றியும் பேசுகிறார். தெ.பொ.மீயும் ஔவை துரைசாமி பிள்ளையும் சிந்தாதிரிப்பேட்டையில் வாழ்ந்தவர்கள் என்கிறார். சௌகார் ஜானகி, சரசுவதி பாய், ரத்னா பாய் போன்ற நாடக நடிகைகள் எல்லாம் ஆரம்பத்தில் சிந்தாதிரிப்பேட்டை வாசிகளாக இருந்திருக்கிறார்கள்.

"ஈ.வெ.ராவின் அச்சகம் இங்குதான் இருந்தது. மீரான் சாகிப் தெருவில் அவரது வீடு இருந்தது. எங்க வீடு வழியாகத்தான் போவார். எங்க வீட்டுத் திண்ணையிலிருந்தபடி அவரைப் பார்த்திருக்கிறேன். பெரியார் திடல் எல்லாம் அப்புறம் வாங்கினது. எப்பன்னா ராஜாஜி முதலமைச்சரா இருந்தபோது டிராம் சென்னைக்கு ஒத்துவராதுன்னு நிறுத்திட்டார். அப்ப அது இங்கிலீஷ்காரன் கம்பெனி. பெரியார் திடல் இருக்கிற இடத்தில் டிராம்ஷெட் இருந்தது. டிராம் இயக்கம் நின்றுபோன பிறகு டிராம்ஷெட்



*கூவம் ஆறு (1900)*

இருந்த இடம் விலைக்கு வந்தது. அப்பதான் பெரியார் வாங்கினார். அதில் ஒரு பகுதியை தினத்தந்திக்கு விட்டுக்கொடுத்தார்.''

உரையாடல் சிந்ததிரிப்பேட்டையின் மாபெரும் தொழிற்சாலையான சிம்சன் குழுமம் பற்றி நகர்ந்தது. ஆங்கிலேயர்கள் தொடங்கிய இந்தக் கம்பெனியை அனந்தராமகிருஷ்ணன் வாங்கினார். சிவசைலம் என்ற நெல்லைப் பகுதி ஊர்தான் இவரது பூர்வீகம். கதீட்ரல் சாலையில் நியூ உட்லண்ட்ஸ் ஓட்டலுக்கு அடுத்த சிவசாமி ஐயர் பேலஸை அனந்தராமகிருஷ்ணன் வாங்கினார். சென்னையின் மிகப் பிரபல வழக்கறிஞரான சிவசாமி ஐயர் தஞ்சாவூர் ஜில்லாவில் உள்ள திருக்காட்டுப் பள்ளியைச் சேர்ந்தவர். சிவசாமி ஐயர் திருக்காட்டுப்பள்ளியில் ஓர் ஆண்கள் பள்ளிக்கூடத்தையும் சென்னையில் மைலாப்பூரில் ஓர் உயர்நிலைப் பள்ளியையும் நிறுவியிருக்கிறார். திருக்காட்டுப் பள்ளியில் கட்டணமின்றி இலவச உணவுடன் கல்விப் பணி செய்திருக்கிறார் சிவசாமி. இப்படியும் கல்வியாளர்கள் வாழ்ந்திருக்கிறார்கள்.

அனந்தராமகிருஷ்ணன் வாழ்ந்த 'சிவசாமி ஐயர் பேலஸ்' பிறகு சிருங்கோ மடத்திற்குத் தானம் கொடுக்கப்பட்டதாகவும், சமீபத்தில் அந்த மடாதிபதி இங்கு வந்து முகாமிட்டிருந்ததாகவும் நண்பர் ஐ.ஓ.பி. சந்திரசேகர் கூறுகிறார். அந்த மாளிகையின் மதிப்பு எத்தனை நூறு கோடிகள் என்று சொல்லமுடியும். மனிதனுக்கோ மதத்துக்கோ இத்தனை கோடிகளை வாரி வழங்கும் வள்ளன்மை எத்தனை பேரிடம் இருக்கும்!

அனந்தராமகிருஷ்ணனைச் சந்தித்த ஒரு நிகழ்வை நினைவு கூர்ந்தார் ஓவியர் முருகேசன். ஒரு முறை அவரும் அவரது நண்பர் முத்துவும் ஸ்பென்சர் பிளாசாவில் டீ சாப்பிடச் சென்றிருக்கிறார்கள். முத்து ஒரு கார் மெக்கானிக் என்பதைவிட கார் பைத்தியம். ஓவியருக்கும் கார் வாங்கி விற்பதில் ஈடுபாடு உண்டு. இருவரும் ஸ்பென்சர் வளாகத்தில் நின்றுகொண்டிருந்தபோது ஒரு விலையுயர்ந்த ஜாகுவார் காரை நிறுத்திவிட்டு ஒருவர் உள்ளே சென்றிருக்கிறார். ஓவியரும் முத்துவும் அந்தக் காரை வியந்து சுற்றிச்சுற்றிப் பார்த்துக்கொண்டு இருந்தபோது ஏதோ சில பொருட்களை வாங்கிக் கொண்டு கார்காரர் திரும்பி வந்திருக்கிறார். காரை ஆசையோடு பார்த்துக் கொண்டிருந்த இவர்களைப் பார்த்து, ''என்ன இந்தக் காரை அப்படிப் பார்க்கிறீர்கள்'' என்று கேட்டிருக்கிறார். முத்து தனது கார் மோகம் பற்றிச் சொன்னபோது, ''சரி, இந்தக் காரை ஓட்டிப் பார்'' என்று கார் சாவியைத் தந்திருக்கிறார். ஓவியர் பின் சீட்டில் ஏறி அமர, முத்து காரை ஓட்டியிருக்கிறார். கார்காரர், ''சிம்சன் கம்பெனிக்கு ஓட்டு'' என்று சொல்ல, முத்துவும் சிம்சன் கம்பெனியில் நிறுத்தியிருக்கிறார். அப்போதுதான் தெரிந்திருக்கிறது அவர்தான் சிம்சன் கம்பெனியின் முதலாளி அனந்தராமகிருஷ்ணன் என்று. எத்தகைய மனம் படைத்தவராக இருந்திருக்க வேண்டும் அவர்!

சிம்சன் நிறுவனம் சிம்சனில் தொடங்கி ஹிக்கின்பாதம்ஸ் புத்தகக் கடை வரை எத்தனை நிறுவனங்களை இயக்கி வந்திருக்கிறது. ஹிக்கின்பாதம்ஸ் சிம்சன் குழுமத்தைச் சேர்ந்ததுதான். அமால்கமேஷன் குரூப் என்று அறியப்படுகிறது இந்தக் குழுமம். ஹிக்கின்பாதம்ஸ்க்குப் பின்பக்கம் உள்ள அசோஸியேட்டட் பிரஸ் இந்தக் குழுமத்தின் நிறுவனத்தில் ஒன்று. டீசல் எஞ்சின்

தயாரிப்பாளர்களாகத்தான் சிம்சன் நிறுவனத்தைப் பொதுமக்களுக்குத் தெரியும். தற்போது ஆயிரத்திற்கும் மேற்பட்ட பொறியாளர்களும் மேலாண்மை அதிகாரிகளும் இந்த நிறுவனத்தில் பணிபுரிந்து வருகிறார்கள்.

சிம்சன் கம்பெனி சென்னையில் செம்பியத்திலும் அண்ணாசாலையிலும் இயங்கி வருகிறது. கும்பகோணத்திலும் ஒரு தொழிற்சாலை உண்டு. இந்த கம்பெனி தொழிற்படும் இடத்தின் அளவு ஏறக்குறைய நான்கு லட்சம் சதுர அடிகள். டிவிஎஸ், அசோக் லேலண்ட் போன்று சிம்சன் மக்கள் மத்தியில் அதிகம் அறியப்படாமல் இருக்கலாம். ஆனால், அனந்தராமகிருஷ்ணன் காலத்திலிருந்து இன்றுவரை சிம்சன் ஒரு Professionally Managed கம்பெனி. அனந்தராமகிருஷ்ணனுக்குப் பிறகு அவரது மகன் சிவசைலம் நிர்வாக இயக்குநர் ஆனார். அவரும் தற்போது உயிருடன் இல்லை. அவரது மகள் மல்லிகா சீனிவாசன் TAFE என்ற டிராக்டர் தயாரிக்கும் நிறுவனத்தின் இயக்குநர் ஆனார். மல்லிகா டிவிஎஸ் குரூப்பின் சீனிவாசனை மணந்தார். தொழிலதிபர்களாக இருந்த அய்யர் குடும்பமும் அய்யங்கார் குடும்பமும் ஒன்றிணைந்தன.



சிம்சன்
அனந்தராமகிருஷ்ணன்

சிம்சன் நிறுவனம் தொழிற்சங்க வரலாற்றிலும் தமிழக அரசியல் களத்திலும் வன்முறை, கொலைச் சம்பவங்களுடன் தொடர்புடைய தொழிற்கூடமாக அமைந்துவிட்டது ஒரு துரதிர்ஷ்டமே. சிம்சன் தொழிற்சங்க போராட்டங்களில் ‘உழைக்கும் மக்கள் மாமன்றம்’ என்ற அமைப்பை உருவாக்கிய குசேலர், தோழர் வி.பி. சிந்தன் ஆகிய இருவரின் செயல்பாடுகள் முக்கியமானவை. தொழிலாளிகள் மீது தொழிலதிபர்களின் நெருக்கடியும் தாக்குதலும் அதிகரித்துவந்த காலகட்டம் அது. ஆளும் கட்சியின் தொழிலாளர் அணிகளும் தீவிரம் காட்டத் தொடங்கின. இந்தச் சூழ்நிலையில் 1971 ஜூன் 15ஆம் நாள் சிம்சன் கம்பெனியின் காண்டீனில் ஒரு அசம்பாவிதம் நிகழ்ந்தது. தொழிலாளர்களை மிரட்டியும் துன்புறுத்தியும் அடித்தும் பணியவைத்து வந்த கம்பெனியின் கைக்கூலியாகக் கருதப்பட்ட பிரதாப் சிங் அன்றைய தினம் காண்டீனில் தொழிலாளிகளிடம் அடாவடித்தனம் செய்திருக்கிறார். பிரதாப் சிங்கின் செயலை எதிர்த்துத் தொழிலாளர்கள் எதிர்க்குரல் கொடுத்தனர். இரு தரப்பினருக்கும் நடந்த மோதலில் பிரதாப் சிங் மரணமடைந்தார். இந்தச் சம்பவத்தைத் தொடர்ந்து தொழிலாளர் தரப்பில் கண்ணன் என்பவர் கொலை செய்யப்பட்டார்.

அரசியல் களத்தில் திமுகவும் கம்யூனிஸ்ட் தலைவர்களும் எதிரிகளாகும் நிலைக்கு சிம்சனில் நடந்த பிரதாப் சிங் கொலை காரணமாயிற்று. வி.பி.சிந்தனும் குசேலரும் கொலை செய்யப்பட வேண்டும் என்று துண்டறிக்கைகள் உலவத் தொடங்கின. இந்தத் துண்டறிக்கையுடன் சூழ்நிலையை விளக்கி, தங்களுக்குப் பாதுகாப்புக் கோரி அன்றைய முதல்வர் கலைஞருக்கும் மாநிலத்தின் ஐ.ஜி அருளுக்கும் கம்யூனிஸ்ட் தலைவர்கள் கோரிக்கை வைத்தனர். ஆனால், அடிமட்டத்தில் கொதிநிலை கூடிக்கொண்டே சென்றது.

ஜூலை 18 அன்று மாலை மாதவரம் பால் பண்ணைத் தொழிலாளர்கள் சங்கம் ஏற்பாடு செய்திருந்த பொதுக்கூட்டத்தில் உரையாற்றுவதற்குக் குசேலரும் வி.பி.சிந்தனும் அழைக்கப்பட்டிருந்தனர். சிம்சன் தொழிலாளர் சங்கத்திலிருந்து சிந்தன் ஒரு டாக்ஸியில் புறப்பட்டுச் சென்றார். டாக்ஸி வியாசர்பாடி வழியாக மாதவரம் நோக்கிச் சென்றுகொண்டிருந்தது. மூலக்கடைக்கு முன்பாக டாக்ஸி பழுதடையவே சிந்தன் அங்கிருந்து ஒரு பேருந்தில் ஏறிப் பயணமானார். இதைக் கண்ட எதிராளிகள் மூலக்கடையிலிருந்த கட்சிக்காரர்களுக்குத் தகவல் அளித்தனர். மூலக்கடையில் வி.பி. சிந்தன் கத்தியால் குத்தப்பட்டார். குற்றவாளிகள் கைது செய்யப்பட்டபோதிலும் வழக்கு காவல்துறையினரால் சரியாகக் கையாளப்படவில்லை. தீர்ப்பு குற்றவாளிகளுக்குச் சாதகமாகியது. குற்றவாளிகள் விடுவிக்கப்பட்டார்கள்.

இந்தச் சம்பவம் திமுகவையும் கம்யூனிஸ்டுகளையும் எதிரெதிராக நிறுத்தியது. கலைஞரைத் தொடர்ந்து ஆட்சிக்கு வந்த எம்ஜிஆர் தீவிர கம்யூனிஸ்டுகளைத் தேடிப் பிடித்து ஒடுக்குவதிலும் அழிப்பதிலும் முனைப்புக் காட்டினார். காவல்துறையில் தேவார படலம் தொடர்ந்தது. இன்று தீவிர கம்யூனிஸ்டுகளும் தொலைந்து போய்விட்டனர். தொழிற்சங்கப் போராட்டங்களிலும் வீரியம் வெகுவாகக் குறைந்து வருகிறது.

முன்னாள் இந்தியக் குடியரசுத் தலைவர் ஆர். வெங்கட்ராமன் சிம்சன் குழும தொழிலாளிகள் சங்கம் நிறுவப்பட்டபோது அச்சங்கத்தின் தொழிற்சங்கத் தலைவராக இருந்திருக்கிறார். சிம்சன் நிறுவனத்தின் இன்னொரு தொழிற்சங்கத் தலைவர் சென்னையின் தத்தா சாமந்த் என்று அழைக்கப்படும் குசேலர். 1960களில் தொழிற்சங்கத் தலைவர்களின் சர்வாதிகாரப் போக்குக்கு எதிர்க்குரல் எழுப்பியவர். தொழிற்சங்கத் தலைவர்கள் தேர்தல் மூலம் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்று பிரகடனம் செய்தவர். குசேலருக்கு எதிராகக் குறைந்தது நூறு வழக்குகளாவது பதிவு செய்யப்பட்டிருக்கும். 1969இல் அவர் மீது கூலிப்படையினரால் கொலை முயற்சி



சிந்தாதிரிப்பேட்டையிலுள்ள பள்ளி-தேவாலயக் கட்டிட ஓவியம் 1855 (படம்: விக்கிப்பீடியா)

மேற்கொள்ளப்பட்டது. கத்திக்குத்துக்கு ஆளானவரை மக்கள் காப்பாற்றினர். குசேலரின் குரலுக்குச் செவி சாய்த்து சிம்சன் தொழிலாளிகள், தொழிற்சங்கத் தேர்தல் நடத்தப்பட வேண்டும் என்று கோரிக்கை வைத்தனர். ஆளும் கட்சியான திமுகவைச் சார்ந்த தொழிற்சங்கத் தலைவர் பதவி விலகினார். அதற்குப் பின் நடந்த தேர்தலில் குசேலர் வெற்றி பெற்றார். பெங்களூரில் சட்டப்படிப்பை முடித்து வழக்கறிஞரான குசேலர் இருநூறுக்கும் மேற்பட்ட தொழிற்சங்கப் போராட்டங்களை நடத்தியிருக்கிறார். மிசா சட்டம் அமுலுக்கு வந்த நான்காம் நாள் கைது செய்யப்பட்டவர் குசேலர். 1975இல் நெருக்கடி நிலை பிரகடனப் படுத்தப்பட்டபோதும் மீண்டும் இவர் கைதியானார்.

தற்போது குசேலர் 90 வயதைக் கடந்துவிட்டவர். சென்னையில் வசிக்கிறார். போர்க்குணம் கொண்ட தொழிற்சங்கத் தலைவரான இவரது மூன்று மகள்களில் இருவர் கம்யூனிஸ்டுகாரர்களுக்கே பிடிக்காத அமெரிக்க மண்ணில் வாழ்ந்து வருகிறார்கள். ஒருவர் நியூசிலாந்தில் வாழ்கிறார்.

ஓவியர் முருகேசனுடனான உரையாடல் தொடர்ந்தது. படப்பையில் 'Celebrity Club' நடத்திவரும் ஓவியரின் மகன் காங்கேயன் வந்தார். அவர் படப்பையில் 2000 பேர் அமரும் வகையில் கட்டி முடித்திருக்கும் விழா அரங்கம் பற்றி விவரித்தார். வருகிற பிப்ரவரி 3ஆம் நாள் அதன் திறப்புவிழா நடக்க இருக்கிறது. ஓவியர் முருகேசன் சென்னை ஓவியக் கல்லூரியில் பயின்று அதே கல்லூரியில் முதல்வராகவும் பணியாற்றியவர். ஓவியர் மருது, ஜேகே, நடிகர் சிவகுமார் எல்லோரும் இவரது மாணவர்கள்.

சென்னை ஓவியக் கல்லூரி 1850ஆம் ஆண்டிலேயே தொடங்கப்பட்டது. ஹன்டர் என்ற ஆங்கிலேயர் அதன் கண்காணிப்பாளர். அவர் தொழில்முறை ஓவியர். அவர் பெயரிலேயே புரசைவாக்கத்தில் ஒரு சாலைக்கு ஹன்டர் சாலை என்று பெயரிட்டிருக்கிறார்கள். இன்றைய கல்லூரி 'முதல்வர்' பதவிதான் அக்காலத்தின் கண்கணிப்பாளர் என்றழைக்கப்பட்டது. சௌத்ரிதான் இக்கல்லூரியின் முதல் இந்திய முதல்வர். அவருக்கு முன்னால் இருந்தவர்கள் எல்லாம் ஆங்கிலேயர்களே. 1950இல் ஓவியர் முருகேசன், சௌத்ரி முதல்வராயிருந்தபோது ஓவியக் கல்லூரியில் தானாகவே சென்று சேர்ந்தார். 1955இல் படிப்பை முடித்துவிட்டு அங்கேயே மாணவர்களுக்குப் பயிற்றுவிக்கும் பணியில் அமர்ந்தார்.

"இங்கே ஓவியத்துக்கும் மக்களுக்கும் பெரிய இடைவெளி இருக்கிறது. தொழில் சார்ந்த ஓவியர்களுக்குத்தான் வரவேற்பு அதிகம். அதாவது, 'Applied Art'இல் புழங்குபவர்களுக்கு வருமானம் இருக்கும். ஓவியத்தில் நவீனத்தைப் புகுத்தியவர்களில் ஆதிமூலம், மருது, கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் முக்கியமானவர்கள்' என்று விவரித்தார் ஓவியர் முருகேசன்.

காலம் கடந்துகொண்டிருந்தது. ஓயாமல் பேசிக்கொண்டிருந்த ஓவியரை ஒய்வெடுக்கச் சொல்லிவிட்டு நானும் சிதம்பரமும் சிந்தாதிரிப்பேட்டை ஐயா முதலி தெரு வழியாகச் சென்றோம். NLS Temple Umbrella என்று கோயில் குடை செய்யும் கடை ஒன்றைப் பார்த்தோம். இந்தக் கோயில் குடை செய்பவர்கள் எல்லாம் சிந்தாதிரிப்பேட்டையில்தான் இருக்கிறார்கள். எல்லோரும் சௌராஷ்டிரர்கள்.

ஆம், சென்னை ஒரு காஸ்மோபாலிட்டன் சிட்டிதான்.

தொடரும்

mail to: **sandhyapathippagam@gmail.com**

# இரவாடி

நேற்றிரவே அடுக்ககத்தின் கண்காணிப்பாளரிடமிருந்து ஒவ்வொரு வீட்டுக்கும் ஒரு குறுஞ்செய்தி வந்துவிட்டது. 'நாளை காலை ஆறு மணியிலிருந்து இரவு மணி எட்டு வரை மின் பராமரிப்பின் காரணமாக நமது பகுதியில் மின்சாரம் கிடையாது. கவனமாக முன்னேற்பாடுகளை இப்போதே துவங்குங்கள். நமது ஜெனரேட்டர் இரண்டு நாளாக பழுதாகியிருக்கிறது என்பதை அறிவீர்கள். அதை இரண்டு நாளில் சரி செய்து விடுவோம். சிரமங்களுக்கு மன்னிக்கவும். '

● பூமா ஈஸ்வரமூர்த்தி

பகல் வெளிச்சத்தில் அலுவலகத்தில் இருக்கும் வரை இந்த செய்தி ஞாபகத்திற்குள் வரவில்லை. வெளிச்சம் நம் நடமாட்டத்தை சுலபமாக்குகிறது. வீட்டிற்கு இன்னும் மூன்று தெருக்களே இருக்கும் போது, அதுவும் இருளில் நுழைய நேர்ந்த போதுதான், இப்போது அந்த குறுஞ்செய்தி தலைக்குள் கறுத்த அடர் வானத்து மின்னல் போல வந்து போகிறது.

இருண்ட எங்கள் தெருவுக்குள் நுழைகிறேன். ஏற்கனவே தெருவில் அங்கங்கே குழிகளும் பள்ளங்களும் தெரு நாய்களும் உண்டு. இப்போது தூறலுக்கான கட்டியமும் வேறு சேர்ந்திருக்கிறது. குழிகள், பள்ளங்கள் நெருங்கி வரும் உள்ளாட்சி தேர்தலுக்குப் பிறகுதான் முடிவுக்கு வர வாய்ப்பு.



ஆனால், தெரு நாய்களை பொறுத்தவரை அவைகளை துரத்த வேண்டும் என்ற நினைப்பு எனக்கு ஒரு போதும் இல்லை. யாரையும் பயம் காட்டாமல் தொந்தரவு படுத்தாமல் அவைகளும் நம்மைப் போல இருந்து விட்டு போகட்டுமே என்றுதான் நினைப்பேன். இன்றும் தெருவில் விளையாடும் சில குழந்தைகளுக்கு அவைகள் நண்பர்கள்தான்.

வாகனத்தின் வேகத்தை குறைத்து அடுக்ககத்தின் வாசலில் நிறுத்தி ஒலி எழுப்புகிறேன். இன்னும் விழாத மழையை நினைத்து கறுப்பா நீலமான்னு தெரியாத ஒரு குடையை பிடித்து வந்த செக்கியூரிட்டி நெருங்கி முகத்தை உற்றுப் பார்த்து உள்ளே அனுமதிக்கிறான். அனிச்சையாக நன்றியும் சொல்லிக்கொள்கிறேன்.

வாகன முகப்பு விளக்கின் உதவியோடு முதல் தாழ் தளம் நோக்கி மெல்ல செலுத்துகிறேன். ஒதுக்கப்பட்ட இடத்தில் நிறுத்துகிறேன். முகப்பு விளக்கை அணைத்ததும் நானும் இருளும் தனித்து விடப்படுகிறோம். அலைபேசியில் நேரத்தை பார்த்தால் ஏழே முக்கால் காட்டுகிறது. இன்னும் கால் மணி நேரம் இருக்கிறது. அலைபேசியில் சார்ஜ் ஒரு கோடுதான் இருக்கிறது. கடைசியாக நேற்றிரவு சார்ஜ் போட்டது. எந்நேரமும் முடிந்துவிடலாம். அலைபேசியை அடிக்கடி உபயோகிக்கக் கூடாது.

நேற்றைக்கு அமாவாசை. இன்றைக்கு பிரதிமை. இன்றைக்கே இரவு வானில் முழு வெளிச்சத்தை எதிர் பார்க்க முடியாது. உத்தேசமாக சறுக்குப் பாதையில் இருளில் நீந்தி மேலேறுகிறேன். கவனமாக இரண்டு பாதை ஓரங்களையும் தவிர்க்கிறேன். ஓரங்களையே ஊர்ந்து செல்ல பாம்புகள் தேர்ந்தெடுக்கின்றன.

அப்படியும் சொல்லிவிட முடியாது. ஒரு முறை கல்லிடைகுறிச்சி புது பேருந்து நிலையத்தை தாண்டி அலுவலகத்துக்கு பேருந்தில் போகும்போது பார்க்க நேர்ந்தது. ஒரு பெரிய மலைப் பாம்பு எப்போதே கடந்து சென்ற பேருந்தில் நடுரோட்டில் அடிபட்டு மரித்திருந்தது. இரவில் அடிபட்டிருக்கும் போல. சுற்றி மக்கள் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஒரே நாளில் அந்த பேருந்து ஓட்டுநரை தேடிக் கண்டுபிடித்து பத்தாயிரம் ரூபாய் அபராதம் கூட விதித்தார்கள் என்றும் பேச்சு உண்டு.

பாம்புகள் பற்றின பயங்களை உதறிவிட்டு, கன்னங் கறுப்போ செதில்கள் நிறைந்த மண் நிறமோ, பாம்புகள் ஊர்ந்து செல்வதைப் பார்த்தால் காரணம் சொல்லத் தெரியாமல், ஏனோ புணர்ச்சிக்கு ஈடாக மனதிலும் உடலிலும் கிளர்ச்சி ஏற்படுகிறது.



அடுக்ககத்தின் நாலு புறமும் மரங்கள், பூ பூக்கும் செடிகள். தத்தித் தத்தி செல்லும் தவளைகளும் நீண்ட கால்களுடன் வரலாம். அடிப்பக்கம் பழுப்பு நிறத்தோடும் மேலே அழுக்கு பச்சை நிறத்திலும் அவைகளுக்கு உருண்டு திரண்ட உடல் உண்டு. விரல்களுக்கு இடையே இடைவெளி இல்லாமல் சதைப் பிணைப்புகளும் உண்டு. வெளித் தள்ளி தொங்கி நிற்கும் பரிதாபமான விழிகளும் உண்டு. தவளைகளை மிதித்து விடலாகாது. எனக்கு தவளைகளை பார்க்கவே பிடிக்காது. அலுவலகத்தில் பக்கத்து மேஜையில் சக பணியாளர் ஒருவர் தவளை பொம்மை ஒன்றை வைத்திருக்கிறார். அது ஒரு நாள் என் மேலோ என் மேஜையின் மீதோ தாவத்தான் போகிறது.

மெதுவாக நடந்து நடந்து படியேறும் பக்கம் வருகிறேன். இதே படிகளில் இறங்கி வரும்போது எதிரே வளர்ந்து படோபமில்லாமல் வாளிப்பாக நிற்கும் மாமரத்தை கண் குளிரப் பார்த்து விட்டுதான் தினம் நகருவேன். ஒவ்வொரு முறையும். மாமரத்தை பார்க்கும் போது கை நழுவின கூட்டுக் குடும்பம் நினைவுக்கு வருகிறது. கிளைகள் இலைகளென்று பிரித்துப் பார்க்காமல் மரத்தை என்னால் மொத்தமாக பார்க்க முடியும். தற்சமயம் இந்த இருட்டில் மரத்தை இருளிலிருந்து பிரித்து பார்க்க என்னால் இயலவில்லை.

காலையில் பக்கத்து மாட்டுப் பண்ணையிலிருந்து கோழி கூவ மறந்தாலும் மறக்கும்; தினம் ஒரு மரத்துக்காவது அதிகாலையில் ஒரு சின்ன வாளியில் நீர் ஊற்றுவது எனக்கு பிடித்தமான பணி. அதை ஒரு நாளும் மறக்கமாட்டேன். ஒவ்வொரு நாளுக்கும் ஒவ்வொரு செடி அல்லது ஒரு மரத்தை கவனித்துக்கொள்வேன். தோட்டக்காரன் வின்செண்ட் ஒரு நாள் விட்டு ஒரு நாள் மாலையில் நீளமான கறும் பச்சை ரப்பர் ட்யூப் கொண்டு எந்த ஒரு செடியையும் மரத்தையும் விட்டு வைக்காமல் அனைத்துக்கும் நீருற்றுவான். அப்போதெல்லாம் தாய்மை ததும்பும் அவன் முகத்தை பார்த்திருக்கிறேன். எவ்வளவு கனிவாக இருக்கும்.

நான் சைத்திரிகன் இல்லை. எனக்கு பதிலாக அப்படியொருவன் அந்தக் காட்சியைப் பார்க்க வேண்டுமென்ற நினைப்பு உண்டு. ஒரு பறவையை என்னால் அப்படி மொத்தமாக பார்க்க முடியாது. நிறமிகள் நிறைந்த அதன் வண்ணம், அலகுகள், கூர்மையான கண்கள், நகமுள்ள பாதங்கள் என்று தனித்தனியாக பிரித்தே பார்க்க முடிகிறது.

நீள் சதுரத்திற்குள் எங்கள் அடுக்ககத்தை வடிவமைத்திருக்கிறார்கள். நாலு பக்க சுவரோரத்திலிருந்தும் நாலடி தாண்டி ஒரு அடிக்கு சிமிண்ட் சுவரை உயர்த்தி உள்ளே மரம் செடி கொடி வளர்க்கிறார்கள். வெள்ளை செம்பருத்திப் பூக்களிலும் நந்தியாவட்டைப் பூக்களிலும் பவழ மல்லிகைகள் பன்னீர் பூக்களிலெல்லாம் இன்று இருள் தன் சாயத்தை

பூச முயன்று தோற்றுப் போய் இருக்கிறது. இந்த சுற்றுப் பாதையில் எங்கோ ஒரு கருவேப்பிலை மரமும் உண்டு. அந்த மரம் எங்கிருந்தாலும் இருட்டாக இருந்தாலும் பெண்களின் கண்களுக்கு மட்டும் தெரியும்.

சரசரவென்று ஏதோ ஒன்று வேகமாக குறுக்கே ஓடும் சத்தத்தை கேட்கிறேன். அது அந்த அழகான சாம்பல் நிற பூனையாக இருக்கலாம். அது அழகாக இருக்கும். ஆனால், சதா கோபத்தில் இருக்கும். மூஞ்சியை உர்ரென்று வைத்திருக்கும். அந்த பூனையால் இப்போது துரத்தப்படுவது ஒரு பெண் பூனையாக இருக்கலாம். உணவுக்கான ஒரு எலியாகவும் இருக்கலாம். அதன் ஓட்டமான ஓட்டத்தில் காற்றில் படபடக்கும் உரத்த பனையோலை சத்தம் எனக்கு கேட்கிறது.

இருளில் என்னைத் தவிர என்னை ஒருவரும் கண்டுபிடிக்க முடியாது என்று நினைத்துக் கொண்டிருந்த நேரத்தில்தான், ''கொஞ்சம் எங்களோடு வெளியே நில்லுங்களேன். மின்சாரம் வந்துவிடும். எதற்கு இருளில் தட்டுத் தடுமாறி மேலே போக வேண்டும்?'' என்றது ஒரு குரல். அந்தக் குரல் வெளியே இருந்தா உள்ளே இருந்தா என்றால், இருள் போல அது எனக்கு உள்ளேயும் இருக்கலாம் வெளியேயும் இருக்கலாம்.

எந்த நேரத்திலும் நான் ஒரு தவளையை மிதித்துவிடும் அபாயம் இருக்கிறது. தடுமாறியாவது என் வீட்டிற்குள் போய்விட வேண்டும். அங்கு தவளை இருக்காது.

இருளில் நான் எடுத்து வைக்கும் ஒவ்வொரு காலடியிலும் நான் உயிரோடுதான் இருக்கிறேன் என்பதை ஒரு பலமாக உணர்கிறேன். இருள் பயத்திலும் மரங்களின் கிசுகிசுப்பு செவி மடலை குளிர்போல தொடுகிறது. கொஞ்சமாவது வெளிச்சம் இருந்தால் மர்மம் நிறைந்த நிழல்களை பார்க்கலாம். என் நிழலையும் சேர்த்துதான்.

வெறுமனே கதவு சாத்தி உள்புறம் தாளிடாத கதவுகளோடு ஏதோ ஒரு அறையில் அவள் எனக்காக காத்திருக்க வேண்டும் என்பது என் தினசரிக் கனவு. அந்தக் கனவு சில நாட்களில் பன்னீர் பூக்கள் சிதறி மழை ஈரத்தில் நனைந்திருக்கும் நிலம் போல வசீகரிக்கும். பல நாட்களில் அந்தக் கனவே கனைக்கும் குதிரையாக மாறி வேகமெடுக்கிறது. குதிரை பின்னே ஓடிஓடி ஏறினால் குதிரை சவாரி பதற்றமாகவும் தடுமாற்றமாகவும் இருக்கிறது. லகானை பிடித்து நேராக நிமிர்ந்து உட்கார்ந்தால் உடலெல்லாம் முறுக்கேறுகிறது.

என் வீடு முதல் தளத்தின் கடைசியில் இருக்கிறது. நாலைந்து படியேறி இடது பக்கம் திரும்பினால் லிப்ட். அங்கே போவதில் இப்போது பயனில்லை. வலது பக்கம் திரும்பி ஆறு படிகளையும் பின் மடங்கி ஏழு படிகளையும் வலது பக்கத்து மின்னும் ஹிண்டோலியக் கம்பிகளை பிடித்தே ஏறிவிடலாம். அப்படித்தான் ஏறினேன். இங்கும் அதே இருள்தான். இந்த இருள் எங்கு பிறந்து இங்கு வந்து உலாத்திகொண்டு திரிகிறதோ.

கும்பகோணத்தில் வேலைக்கு சேர்ந்த புதிதில் ஒரு மேன்ஷனில் தங்கியிருந்த போது நண்பர்களோடு சேர்ந்து ஒரு ஞாயிறுக்கிழமை பக்கத்தில் ஒரு ஊருக்குப் போயிருந்தோம். அந்த ஊரின் பெயர் ஜெயம் கொண்ட சோழபுரமான்னு ஞாபகம் இல்லை. அங்குள்ள கோவிலை சுற்றி காண்பித்த வழிகாட்டி கடைசியில் கோபுரத்தின் உச்சி நோக்கி கோபுரத்தின் உள் வழியாக அழைத்துச் சென்றார். இருட்டான இருட்டு. முன்னே செல்லும் வழிகாட்டி கையில் ஒரு நீண்ட டார்ச் லைட்டை வைத்திருந்தார். அந்த வெளிச்சத்தில் நாங்கள் ஐந்து பேரும் ஒருவர் தோளை ஒருவர் பிடித்து படிப்படியாக அச்சத்தோடு கொஞ்சம் கொஞ்சமாக மேலேறினோம். இரவாடிகளின் எச்சம் நாசியை நெருடியது.

ஓரிடத்தில் வழிகாட்டி, ''நீங்கள் பயப்படாதீர்கள். நான் டார்ச் லைட்டை சிறிது நேரம் அணைக்கப் போகிறேன். இருட்டின் அடர்த்தியை பாருங்கள் அசந்து போவீர்கள்'' என்றார். அணைக்கவும் செய்தார். இருட்டென்றால் அப்படியொரு இருட்டு. ''அந்தகார இருட்டென்றால் இதுவாகவும் இருக்கலாம்'' என்றார். அந்த நாளிலிருந்துதான் அந்தகார இருட்டின் மீது எனக்கு அதிகமான பயமும் வாஞ்சையும்.

கொட்டும் அருவியிலாவது சத்தம் கேட்டுக் கொண்டேயிருக்கும், நமக்கு தனிமை தெரியாது. ஆனால், இங்கே இருள் அருவி போல விழுந்து கொண்டேயிருக்கிறது, சத்தம் இல்லை. எஞ்சி நிற்கிறது இழந்த காதல் தரும் அதே தனிமை.

படியேறி முதல் தளத்துக்குள் நுழைந்ததும் அந்தகார இருள்தான் எனக்கு நினைவுக்கு வருகிறது. முதல் தளத்தில் கடைசியில் இருக்கும் என் வீடு நோக்கி தளர் நடையில் சுவரில் கை வைத்தே நகர்க்கிறேன். இருளில் எல்லாப் புலன்களும் உயிர்ப்புடன் இயங்க வேண்டிய கட்டாயம் இருக்கிறது. கண்களை இதற்கு மேலும் கூர்மையாக்க முடியாது. அந்தப் பூனைகள் போல தப்பிக்கும் எலிகள் போல என் கண்களை இடுக்கி வைத்துக்கொண்டு நகர்ந்தாக வேண்டும்.

சுவரை பிடித்து பிடித்து நகர்வதிலும் ஒரு பிரச்சனை இருக்கிறது. அங்கங்கே வீட்டு வாசலின் இடதோ வலதோ பக்கத்தில் செருப்புகளுக்கான திறந்த இரும்பு அலமாரி இருக்கலாம். அவைகளில் கால்களை இடித்துக்கொள்ளக் கூடாது. சில இரும்பு அலமாரிகள் துருப்பிடித்தும் இருக்கும். சுவற்றில் தளத்திற்கு இரண்டு தீயணைப்புக் கருவியும் கையெட்டும் உயரத்தில் இருக்கும். அதில் தலையை இடித்துக்கொள்ளக் கூடாது.



இப்போது பார்த்து ஒரு ஆகாய விமானம் கட்டிடத்துக்கு மேலே பறந்து போகிற இரைச்சல். விமானத்துக்கு இருள் ஒரு பிரச்சனை இல்லை. சாதாரண நேரமாக இருந்தால் பகலானாலும் இரவானாலும் அண்ணாந்து பார்த்து பறக்கும் விமானத்தை ரசித்திருப்பேன். இப்போது எனக்கு முடியாது. காரிடாரின் இரு முனையிலும் பெரிய ஜன்னல் இருக்கிறது. ஆனால், அந்தப் பக்கமோ இந்தப் பக்கமோ அவ்வளவு தூரம் என்னால் இருளில் நடக்க முடியாது. பயத்தில் கால்கள் பின்னி கீழே விழுந்தாலும் விழுந்துவிடுவேன்.

எந்தப் பக்கம் திரும்பினாலும் இருள். வீதி மறைத்து நிற்கும் பெரிய யானை

போல கண்களை மறைக்கிறது. தினசரி மனிதன் வாசிக்கும் தினசரி புத்தகத்தில் இருள் என்ற பக்கக்களும் கண்டிப்பாக இருக்கும். இருளே விலகிப் போ என்றாலும் சொல்லுக்குப் பயந்து இருள் விலகப் போவதில்லை.

பூமி இன்னும் கொஞ்சம் வேகமாக சுழன்றால் இருளை சீக்கிரம் கடந்து

வெளிச்சத்தை பார்த்து விட வாய்ப்பு எனக்கு தரப்படலாம். ஆனால், பூமியை எப்படி வேகமாக சுழற்றுவது?

முதல் தளத்தில் முதல் வீட்டில் ஒரு இளம் வயதுப் பையன் நாய் வளர்க்கிறான். அதிக விலை – பன்னீரண்டாயிரம் - கொடுத்து வாங்கி வளர்க்கிறான். முன் பக்கம் எது பின் பக்கம் எது என்று கண்டுபிடிக்க முடியாமல் மொத்ததில் ரப்பர் பந்து போல இருக்கும். உயரம் ஒரு அடி இருந்தாலே அதிகம். வெள்ளையும் பாஃண்டா ஆரஞ்சுமாக இருக்கும். அது குரைத்தாலும் சன்னமாக குழந்தை தும்மல் போடுவது போல இருக்கும். அவனும் சரி மாலை நேரம் அதனோடு விளையாடும் குழந்தைகளும் சரி அதற்கு என்னன்னவோ பெயர் வைத்திருக்கலாம். நான் ரப்பர் என்று அதைக் கூப்பிடுகிறேன். அந்த ரப்பர் இப்போது எங்கே இருக்கிறதோ.

சொல் பேச்சு கேட்காமல் அங்குமிங்கும் ஓடும் குழந்தைகள், சாந்தமான பெரியவர்கள், சளசளக்கும் பெண்களென்று யாரையுமே காணோம். எங்கே போயிருப்பார்களோ. ஒரு வேளை மொட்டை மாடியில் போய் அமர்ந்து இருக்கிறார்களோ. அது எட்டாவது மாடி அல்லவா? தண்ணீர் பாட்டில்கள் சாப்பாடு பாத்திரங்களோடு அத்தனை மாடியும் ஏறிப் போயிருப்பார்களா. எட்டு மணிக்கும் கரண்ட் வரவில்லை என்றால் எல்லோரும் ஒரே நேரத்தில் வருந்த வேண்டி வரும்.

சொன்னபடி எட்டு மணிக்கு மின்சாரம் வந்துவிட்டால் நான் என்ன செய்யப் போகிறேன். வீட்டுக்குள் ஒவ்வொரு அறையாக நுழைந்து மின் விளைக்கை எரிய வைத்து ஒவ்வொரு அறையையும் புதிகாகப் பார்ப்பேன். புதிதாக உணர்வேன். கண்ணாடி முன் நின்று என்னை நானே பார்த்துக்கொள்வேன். என் முகம் மகிழ்வாக வெளிச்சமாக இருக்கப் போகிறது, என் சருமம் மா நிறமாக இருந்தாலும்.

என் வீட்டில் குழந்தைகள் கிடையாது. மாதாமாதம் எதிர்பார்த்து ஏமாறுவதில் இது ஏழாவது வருடம். நாய்க் குட்டிகள் கிடையாது. எங்களிடம் ஒரு மீன் தொட்டியும் அதில் வண்ண வண்ண மீன்களும் உண்டு. அவைகள் தொட்டிக்குள் சுற்றிச் சுற்றி வரும். மற்றபடி நான் இங்குதானே இருக்கிறேன் என்று சொல்லும் குழந்தைகளின் கால் கொலுசு சத்தமெல்லாம் மீன்களுக்கு இல்லை.

வீடு வந்தது. அலைபேசி வெளிச்சத்தில் உயரே என் வீட்டு எண்ணை சரி பார்க்கிறேன். வீட்டு எண் சரிதான். நேற்று இரவு அலைபேசிக்கு சார்ஜ் போட்டது. எந்நேரத்திலும் அலைபேசியும் காலை வாரிவிடலாம். அணைத்து அணைத்து அலைபேசியை உபயோகிக்க வேண்டும்.

கைப் பையிலிருந்த வீட்டுச் சாவியை துழாவித் தேடிக் கண்டுபிடிக்கிறேன். சாவிக் கொத்தில் எது வாயிற் கதவுச் சாவின்னும் கண்டுபிடிக்கிறேன். இந்தப் பொறுமையால் மனதிற்குள் சகிக்கயியலாத நசநசப்பு.

மறுபடி அலைபேசி வெளிச்சத்தில் கதவு சாவியை கதவு துவாரத்தில் பொருத்தி சாவியை கடிகாரச் சுற்றில் சுற்றுகிறேன்.

வினோதம். சாவிக்கு வேலையில்லை. கதவு திறந்திருக்கவில்லை. மாறாக கதவின் பூட்டு ஏற்கனவே திறந்துதான் இருக்கிறது. யார் உள்ளேயென்று யோசித்ததில் அவளிடமும் ஒரு சாவி இருப்பது ஞாபகத்திற்கு வருகிறது.

*mail to:* **boomaeswaramoorthy@gmail.com**

# மஞ்சுளா கவிதைகள்

ஓவியம்: **ஆர்.பி. பாஸ்கரன்**



## 1.

சிறுத்தைப் புலி ஒன்று
எதையோ கவ்வி ஓடுகிறது

அணிற்பிள்ளையொன்று
மரத்தின் மீதேறி ஓடி
விளையாடுகிறது

ஒன்று என் மனதாகவும்
இன்னொன்று
என் கண்களாகவும் பாவிக்கிறேன்

அன்றைய பகற் பொழுது
இதமான சூட்டில் வேகிறது

ஒரு தோசை போல்
அதை விழுங்கி விட்டு
மாலையில் இளைப்பாறுகிறேன்

இரவின் வெதுவெதுப்பில்
என் கனவில் வருவது
யாராக இருக்கக் கூடும்?

அருகிலேயே காத்திருக்கிறது
வளர்ப்பு பூனை

## 2.

எப்போதும் ஒரு பறவை
தன் கனவில் வரும் மீனை
வானத்தில் அடையாளமிட்டு
வரைந்து கொண்டேயிருக்கிறது

குளத்து மீன்களை
அடையாளம் காண
ஒரு மழைக் காலம்
வர வேண்டும்

நதி ஓடாத நகரத்தில்
கண்ணாடித் தொட்டியில்
வளர்ப்பு மீன்கள் வரவேற்பறையில்
நம்மை கண்டது போல்
வரவேற்கின்றன

மனிதர்கள்
நகரத்தில் காணாத மீனை
வறுத்த பிறகு வரும் வாசத்தில்
காண்கிறார்கள்

வீட்டிற்கு திரும்பும் நானும்
அடையாளம் காண்கிறேன்
நோட்டுப் புத்தகத்தில்
மகள் வரையும்
கடலையும் மீனையும்

கடலையும் மீனையும்
கொண்டு வராத
நள்ளிரவு
ஒரு படகாக மிதந்து செல்கிறது
என் அறையின் வெப்பத்தில்

**3.**



நினைவின் தூரில்
அமிழ்ந்தமிழ்ந்து
எழுகின்றன
எனது இதயத்தசைகள்

நினைவின் பிடிமானத்தில்
இல்லாது நழுவி ஓடும்
சிற்சில குறிப்புகளை
காரண காரியங்கள் கொண்டு
நீக்கவோ அல்லது
காயத்தை மறக்கவோ தற்சமயம்
முயற்சிக்கலாம்

முயற்சியில் சிறு பிழை
வரலாம்
சிறு பிழை சந்திக்கும் விளைவோ
வாழ்வைச் சுருக்கும்
கயிறாகி விடலாம்

சாவு
சிறு உறக்கம் என்பதை அறிவேன்

ஒரு பேழைக்குள் அழகாய்
உறங்கும் பிணத்தின் சாயலாய்
அதை பத்திரப்படுத்தி
பூமிக்குள் இறக்கி வைக்க
காலத்தின் உதவியை வேண்டுகிறேன்

வீணாய் உறக்கம் இல்லாது
தவிக்கும் கண்களிடம்
தனது இறுதிப் பயணத்துக்கு
தயாராகும் படி கேட்டுக்கொள்கிறேன்

காவல் தெய்வங்கள்
பூமியை பத்திரப்படுத்துவது போல்
நம்பிக்கொண்டிருக்கும்
மனங்களில்
ஒரு இரவு மட்டும் பயணம் செய்து
சாவின் மீதான சந்தேகங்களை
அப்புறப்படுத்தி
ஒளிவு மறைவற்ற பிரதிகளை
எப்போதும்
அவர்களுக்கு வழங்கும்படி செய்வேன்

நிகழ் என்பதை
கனவு போல் துரத்தி
தூரத்தில் நிறுத்துவேன்

என் இமைகள் வலிக்காமல்
என் கண்களில் வெளிச்சமாய்
நீளும் இந்த பொழுதில்
மறையும் சூரியனை
பூமியின் இன்னொரு பகுதியில்
நான் சந்திக்கலாம்

எச்சங்களை வைத்துக்கொண்டு
உண்மையின் வேர்களை
பிறகு தோண்டிப் பார்க்கும்
காலத்தை நான்
எப்போதும் அறியப்போவதில்லை

காலம் ஆழ்ந்த நினைவுகளையும்
கூடவே மறதிகளையும் உடையது
என்பதை நான் எப்போதும்
அறிந்தே வைத்திருக்கிறேன்

என்னிலிருந்து என்னை விடுவிக்க
மொட்டவிழ்வது போல்
நிகழட்டும்
ஒரு கணம்

*mail to:* **manjulagopi04@gmail.com**

# இருட்டு

**சரணடைவது பற்றிய எந்த எண்ணமும் அவனுக்கு இருக்கவில்லை. இன்றோடு தன்னுடைய வாழ்வு முடிந்து விடும் என்று நினைக்கும் போது இனந்தெரியாத மிருகமொன்று மூளையை தின்று கொண்டிருப்பதாக உணர்ந்தான்.**

● தானா விஷ்ணு

சித்தம் குழம்பிய வேட்டைநாய் செய்வதறியாது அங்கும் இங்கும் ஓடியலையும் மனநிலையே இப்போது அவனுக்கு இருந்தது. காலம் கடந்துவிட்டது. இனி வெல்வதற்கோ தப்பிப்பதற்கோ போர் செய்ய முடியாதென்பது அவனுக்குத் தெரியும். சண்டைக்குச் சலிக்காத தளபதிகளின் வீரத்தாலும் வீரர்களின் தியாகத்தாலும் வென்ற போர்க்களங்கள் ஏராளம். முப்பது வருடத்திற்கு மேலாக உலகின் எல்லாத் திசையிலும் தனது பேரும் பெருமையும் நிலைத்து நிற்பதற்கு அந்த வெற்றிகளே காரணம் என்பதனை மறந்தவன் இல்லை.

'அந்தத் தளபதிகள், அந்த வீரர்கள் இப்போது எங்கே?'

இருள் சூழ்ந்த வெளியெங்கும் அலசிப் பார்க்கிறான். ஏமார்ந்து போகிற மனசை எது சொல்லியும் திருப்பதிப்படுத்த முடியவில்லை. அவனைச் சூழவும் காவலர்கள் நிற்கின்ற போதும் தனித்து விடப்பட்டதான படபடப்பு அடங்கவில்லை.



'இன்னும் எந்தனை மணி நேரங்கள்? எத்தனை நிமிடங்கள் இருக்கின்றன, தன்னுடைய ஆன்மா கடைசிக் கணத்தினை அடைவதற்கு?'

கண்களை மூடி கணக்குப் போட்டுப் பார்க்கின்றான். வேட்டுச் சத்தங்கள் மிக அருகில் வந்துவிட்டன. 'தன்னுடலில் கடைசி வல்லமை இருக்கும்வரை துப்பாக்கியில் இறுதித் தோட்டா இருக்கும்வரை சரணவடைது என்ற வார்த்தைக்கே இடமில்லை'. திரும்பத்திரும்ப அவனது ஆழ் மனம் சொல்லிக் கொண்டேயிருந்தது.

அவன் ஓர் இனத்தின் தலைவனாக தன்னை தகவமைத்துக் கொண்டவன். தன் இனத்தின் மீது வன்முறைகள் நிகழ்த்தப்பட்டபோது கொதித்தெழுந்த வீரர்களில் ஒருவன். வன்முறைகளாலும் கொலைகளாலும் கொள்ளைகளாலும் தமது இனம் தீராத் துயரத்தினை அனுபவிக்க நேர்ந்த பொழுது அதிகமான வீரர்கள் கொதித்தெழுந்தார்கள். ஒன்றாகி நின்று வன்முறையாளர்களின் முதுகுகளில் ஓங்கி அறைந்தார்கள். அவர்கள் செய்வதறியாது நிலைகுலையத் தொடங்கிய காலப்பொழுதொன்றில் வீரர்கள் தனித்தனி குழுக்களாய் தம்முள் பிரிந்து நின்று போராடத் துணிந்தார்கள். அத்தனைபேரும் தம் மக்களைக் காக்கவும் அவர்களின் கௌரவத்தை நிலைநிறுத்தவும் தங்களை தியாகிப்போம் என்ற திடசங்கற்பத்தோடு புறப்பட்டவர்கள். ஆனால், அத்தனை சுமைகளையும் இப்போது அவன் மட்டுமே சுமந்து கொண்டிருந்தான். இது அவன் வலிந்து பெற்றுக்கொண்டதுதான் என்றாலும் கொள்கைப் பிடிப்போடு கடைசிவரை நின்று சமர் செய்யத் துணிந்தவனாகவும் வல்லமையுள்ளவனாகவும் இருந்தவன் அவன்தான்.

காலம் எப்படி எப்படியோ போய் எப்படி எப்படியோ மாறி இப்போது அவனை காடு தூக்கியெறிய ஒரு பக்கம் நெடுங்கடலாலும் மறுபக்கம் சிறு கடலாலும் சூழப்பட்ட நிலத்தில் அவனைக் கொண்டுவந்து நிறுத்தியிருக்கிறது.

மிக நெருக்கமாகப் பின்னிக்கிடக்கும் இருள். அருகில் இருப்பவர்களைக் கூட அடையாளம் காட்டாது மறைத்து வைத்திருக்கிறது. அந்த இருளுக்குள் பொதிந்திருக்கும் அமைதியைக் கிழித்தபடி வேட்டுச் சத்தங்கள் கேட்டுக் கொண்டிருந்தன. எதிரிகள் அண்மையிலா தொலைவிலா நிற்கின்றார்கள் என்று ஊகித்துக் கொள்ள முடியாதபடி சத்தங்கள் அண்மையிலும் தொலைவிலுமாகக் கேட்டுக் கொண்டிருந்தன. அத்தகைய வேட்டுக்களே தன்னுடைய முப்பதாயிரம் படைகளையும் அழித்தும் சிதறடித்தும்



இருக்கின்றன என்பதனை அவன் நினைத்துப் பார்க்கிறான். எஞ்சியவர்கள் எங்கிருக்கிறார்கள்? எதிர்த்து நின்று சமராடுகிறார்களா? என்பதனை அவனால் திடமாக சொல்ல முடியவில்லை. இடைவிடாத எதிரிப்படையிகளின் வேட்டுச் சத்தங்களுக்கு நடுவில் தீர்க்கப்படும் ஒன்றிரண்டு வேட்டுக்கள் இன்னும் எதிர்த்து நிற்பதற்கு சிலர் இருக்கிறார்கள் என்பதனை அவனுக்குச் சொல்லியது.

எல்லாம் இன்று இரவுடன் முடிந்துவிடும். மிகப்பெரிய இராட்சியம் துரும்பளவில் மாறும் என்று எப்போதுமே நினைத்துப் பார்த்தவனல்ல. மிகச் சிறிய குழுவாக இருந்த தன்னுடைய படையை பேராட்சியத்தை ஆளக்கூடிய வலிமை கொண்ட அமைப்பாக மாற்றிய வல்லமையாளன் அவன். அதற்காக எத்தனை தியாகங்கள், கொலைகள், கபடத்தனங்கள் செய்ய வேண்டியிருந்தது என்பது அவனுக்கு மட்டும்தான் வெளிச்சம்.

ஒருவனின் மரணபயம் பிறனை வீரனாக்கும் என்பது வரலாற்றுண்மை. அந்த வரலாற்றுண்மையை நன்றாக அறிந்த அவன் காலத்தைத் தனக்குச் சாதகமாக்கிக் கொண்டான். ஒன்றாகி நின்றவர்கள் இரண்டாகினார், நான்காகினர், பின் எட்டாகினர். இப்படியே ஆகி ஒவ்வொருவருக்குள்ளும் முரண்பட்டு ஒருவரை ஒருவர் கொல்லவும் காணாமல் ஆக்கவும் தொடங்கினர். யார் சரி யார் பிழை என்று கணக்குப் போட முடியாத கால இடைவெளிக்குள் எதிர்த்து நிற்க முடியாதவர்கள் அழிந்து போயினர் அல்லது ஒளிந்துகொண்டனர். வல்லமையுள்ளவனும் முந்திக்கொள்ளும் திறனுள்ளவனுமான அவன் எல்லோர் முதுகிலும் ஏறி தனது வெற்றியை நாட்டிக் கொண்டான். ஒடுக்கப்பட்ட இனத்தின் தனித்த காப்பாளனாகத் தன்னை பறைசாற்றிக் கொண்டான். முப்பது வருட முயற்சியில் எல்லோரும் தன்னை நம்பும் படியாக எல்லாவற்றையும் கட்டமைத்துக் கொண்டான். அவன் பெயர் தேசியத்தின் குறியீடாக மாறியிருந்தது. சிலர் தெய்வத்துக்குச் சமமாக எண்ணவுமான பெயராகிப் போனது. வழிபடுவோர் வழிபடவும் துதிபாடுவோர் துதிபாடவும் கூடுமான காலத்தினை உருவாக்கிய பெருமிதம் அவனுக்கிருந்தது. அவன் பாட்டுடைத் தலைவனாகினான்.

**போ**ற்றுவோர் தூற்றப்படவும் தூற்றப்படுவோர் போற்றப்படுவதுமான காலச் சுழற்சிக்குள் இப்போது அவன் இருந்தான். மனம் வயதின் முதிர்ச்சியை உணர்வதில்லை. மனத்தினை முந்தும் அறிவுதான் முதிர்ச்சியையும் அதனால் ஏற்படும் அயற்சியையும்

அறியும். அந்த முதிர்ச்சிக்கும் அயர்ச்சிக்கும் ஏற்ப செயலாற்றும் திறத்தினாலே மட்டும்தான் காலத்தையும் காலத்தில் கொள்ளும் காரியத்தையும் வெற்றி கொள்ளமுடியும். அவன் மனத்தின் வயப்பட்டவனாகவே இருந்தான். போரை ஆரம்பித்த காலத்துக் கனவிலேயே உழன்று கொண்டிருந்தான்.

'போர் எப்போதும் ஒரு போக்கில் போவதில்லை. உலகின் போக்கில் அதன் மாற்றத்தில் போரியல் தன்மைகளும் உத்திகளும் மாற்றமடையும்' என்று தத்துவாசிரியர்கள் சொன்னதை அவன் சரியாகப் புரிந்துகொள்ளவுமில்லை. புரிந்துகொள்ளும் மனமும் அவனுக்கிருந்ததாகத் தெரியவில்லை. தத்துவாசிரியர்களின் வெறுப்புக்கும் உள்ளாகிப்போனான்.

இத்தனை காலத்தில் தன்னுடைய வியூகத்திலும் துணிவிலும் எத்தனையோ போரை, எத்தனையோ படையை வெற்றிகொண்டவன் என்ற கர்வம் அவனிடம் எப்போதுமே இருந்தது. அந்தக் கர்வமே தன்னை உயர்ந்த இடத்துக்குக் கொண்டு வரவும் அழிவு நிலைக்கு கொண்டு செல்லவும் காரணமாகியிருந்தது என்பதனை உணரும் நேரத்தில் அவன் இருள் சூழ்ந்த கடற்கரை வெளியில் தனித்துக்கிடந்த படகின் மீது அமர்ந்திருக்க வேண்டியவனாகக் காலம் மாற்றியிருந்தது. சுய கௌரவம் அப்போதும் விடவில்லை, இப்போதும் விடுவதாயில்லை.

**எ**து எப்படியோ நடந்துவிட்டது இனி என்ன செய்வது என்ற கணக்கைத்தான் சமப்படுத்த எண்ணிக் கொண்டிருந்தான். எதிரிகளிடம் சரணடைவது இத்தனை காலத்து வெற்றியையும், தன் மீது எல்லோரும் கொண்டுள்ள நம்பிக்கையினையும் தன் கர்வத்தையும் துடைத்தழித்துவிடும் என்று நினைத்துக்கொண்டான். ஆனாலும் மரணம் அவனை நெருங்கிக் கொண்டிருந்தது.

எத்தனை வயதானாலும் மரணம் என்று நினைக்கும் போது சிறு அச்சம் தானும் காட்டாதவர்கள் யார் உள்ளனர்? எத்தனையோ வரலாற்று நாயகர்கள் நெஞ்சை நிமிர்த்தி மனத் தைரியத்துடன் மரணத்தை எதிர் கொண்டார்கள் என்று வரலாற்றில் படித்திருக்கிறோம், வரலாற்றில் புனைவுகள் அதிகரித்திருக்கும் காலத்தில் நாங்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். பிறிதொரு கால வரலாற்றில் அவன் அஞ்சா நெஞ்சுடன் மரணத்தைத் தழுவிக்கொண்டான் என்று குறிக்கப்படும்போது பின்னவர்கள் அதனை நம்பத்தான் போகிறார்கள். வீரனாகச் சித்திரிக்கப்பட்ட ஒருவன் மரணத்தை எதிர்கொள்ள நேரிடும் போது அவனுள் தோன்றும் அச்சம் அவஸ்தை, வலி, வேதனை இவை எதுவும் வரலாற்றுப் பதிவுகளில் இருப்பதில்லை

**அ**வனைச் சுற்றி பாதுகாவலர்கள் எதற்கும் தயாராக நின்றார்கள். என்னதான் முயன்றாலும் தங்களையோ அவனையோ காப்பாற்றிவிட முடியாது என்பது அவர்களுக்கும் தெரியும். மீள்வதற்கு வழியெதுவும் இல்லை என்றாகும்போது முடிவு தற்கொலையாகத்தான் இருந்தது. தன்னுடைய கடைசி உயிர் இருக்கும்வரை எதிரியைச் சுட்டு வீழ்த்துவதென்று சத்தியம் செய்த போர் வீரர்கள் தங்கள் உடம்புகளில் வெடிமருந்துகளைச் சுமந்துகொண்டு நின்றார்கள்.

பாதுகாவலர்களுக்கு அவனை நினைக்கும் போதும் அவனுக்கு பாதுகாவலர்களை நினைக்கும் போதும் பரிதாபமாக இருந்தது. இத்தனை காலாப் போரில் கொடுத்த உயிர்விலையின் அர்த்தங்கள் சிதைந்து கொண்டிருப்பதனை நினைத்து வேதனை கொள்வதனைத் தவிர வேறென்ன செய்யமுடியும் இப்போது அவனால்.

**எ**திரிப்படைகள் அண்மித்துக் கொண்டிருந்தார்கள். இன்னும் சற்று நேரத்தில் அல்லது சற்றுத் தாமதமாக அவர்கள் இந்த இடத்திற்கு வந்துவிடுவார்கள். அவனுடைய படைகளில் எத்தனை வீரர்கள் எஞ்சியிருக்கிறார்கள் எனத் தெரியவில்லை. சிலர் தங்களைத் தாங்களே வெடிக்கவைத்து மரணத்தைத் தழுவிக் கொண்டார்கள் என்றும் இன்னும் சிலர் எதிரிப்படைகளிடம் மக்களோடு மக்களாக சரணடைந்து கொண்டிருக்கிறார்கள் என்றும் அவனுக்கு அறியக் கிடைத்தது. மக்களை எதிரிப் படைகளிடம் சரணடைவதற்கு ஏற்றுக்கொள்ளாது அவர்களை அச்சுறுத்தியும் கொன்றும் காவலில் நின்றவர்கள் இப்போது சரணடைகிறார்கள் என்று கேள்வியுறும் போது அவமானத்தால் மேலும் நிலைகுலைந்துபோனான். அவன் இருக்கும் மனநிலையில் எதுவும் செய்யவோ சொல்லவோ முடியவில்லை. வீரர்கள், கோழைகள் என்று வகைப்பிரித்துப் பார்க்கவும் முடியவில்லை. இறுகிப்போய் மௌனமாகவே இருந்தான். தான் நம்பிய தளபதிகள் தன்னைக் கைவிட்டார்களா? தன்னை நம்பிய தளபதிகளைத் தான் கைவிட்டேனா? என்பதைக் கூட ஊகிக்க முடியாத மனநிலையே இப்போது அவனுக்கு இருந்தது.

**வே**ட்டுச் சத்தங்கள் அருகாய் வந்து கொண்டிருக்க இன்னும் அவன் அமைதி குலைந்து கொண்டிருந்தான். மூளையில் ஞாபகங்கள் குளம்பத் தொடங்கின. மூளை சுருங்குவதும் விரிவதும் அவனுக்குத் தெளிவாகத் தெரிந்தது எண்ணுக்கடங்காத நினைவுத் திசுக்கள் உள்ளுக்குள் சுழலத் தொடங்கின. உண்மையில் அவன் உறங்கி எத்தனையோ நாட்கள் ஆகிவிட்டன.



பெருநிலப்பரப்பின் முதல் நகரம் எதிரிப்படைகள் வசம் வீழ்ந்த பொழுது தொலையத் தொடங்கிய உறக்கம், தொடர்ந்து நகரங்களை எதிரிப்படைகள் கைப்பற்ற முற்றுமுழுதாக அவனிடமிருந்து விலகிக்கொண்டது. மூளை சீராக இயங்குவதற்குப் போதுமான உறக்கம் அவசியம் என்பதும் அப்போதுதான் சீரான சிந்தனையுடன் திட்டங்களை வகுக்க முடியும் என்பதும் அவனுக்கும் நன்கு தெரியும். ஆனாலும் எப்படி உறங்க முடியும். தன் மரணம் மட்டுமல்ல மனைவி பிள்ளையின் மரணமும் தன்னை நம்பி வந்த மக்களின் மரணமும் கண்ணுக்கு முன் நிழலாய் ஆடும்போது எப்படி மூளை உறக்கத்தைத் தேடும். தன்னை நம்பிவந்த மனைவியின் நம்பிக்கையும் பாழ் மக்களின் நம்பிக்கையும் பாழ்.

தன்னுடைய தளபதிகளும் படை வீரர்களும் மீண்டும் இழந்த நகரை மீட்டுவிடுவார்கள் என்று நம்பியிருந்ததில் எந்தப் பலனும் இல்லாமல் போய்விட்டது. எத்தனை வியூகங்கள் வகுக்கப்பட்டன. அனைத்தையும் தவிடுபொடியாக்கி எதிரிப்படைகள் முன்னேறிக் கொண்டதில் அவனுக்கு ஆச்சரியம் தாங்க முடியாமல்தான் இருந்தது. போர்க்களத்தில் ஒரு துளி இரத்தத்தைப் பார்த்ததும் ஸ்தம்பிக்கும் இந்தப் படைகள் எப்படி வேகம் கொண்டு வருகின்றன என்பதனைப் புரிந்து கொள்ளமுடியவில்லை. அகலக்காலை வைக்கட்டும் துவசம் செய்துவிடுகிறோம் என்று தளபதிகள் சொன்னதை நம்பி ஏமாந்து போனதை நினைக்கும் ஒவ்வொரு பொழுதும் தன்மீதே சினத்தையும் எரிச்சலையும் கொட்டிக் கொண்டான். ‘எத்தகைய குருட்டு நம்பிக்கையில் இருந்திருக்கிறேன். தன்னுடைய போரனுபவங்கள் இப்படி வீணாய்ப்போய்விட்டதே’ என்பதனை நினைக்கும் போது கூடுதல் வெறுப்பு தன்னைச் சுற்றிக் கொண்டிருந்ததனை நினைத்து துயரப்பட்டான்.

இனி எதை நினைத்துத்தான் என்ன பயன். ஒவ்வொன்றையும் நினைக்கும் போதும் தலை கிறுகிறு என்று சுழல்வதுபோல் தோன்றியது. உறக்கமற்று இருப்பதால் இன்னும் மண்டைக்குள் குளவிகள் ஊர்வதுபோலவும் இரைவதுபோலவும் குறுகுறுப்பும் குடைச்சலும் அதிகமாகிக் கொண்டிருந்தன. கொஞ்சம் தூங்கி எழவேண்டும் போல் இருந்தது. ஆனால், அதற்கு அவகாசம் இருக்கவில்லை. இப்பவோ அப்பவோ எதிரிப் படைகள் முற்றுமுழுதாக தன்னைச் சூழ்ந்துவிடும் அபாயத்தை எதிர் நோக்கிக் கொண்டிருந்தான். அயர்சி, மூலைச்சோர்வு அவனது உடலையும் உளத்தையும் வாட்டிக் கொண்டிருந்தன. அரை மயக்கத்தில் மிதப்பவன் போலவே அவன் இருந்தான். நிதானமாக இருக்கவோ நிதானமாக சிந்திக்கவோ கூடிய மனத்தை அவன் மெல்ல மெல்ல இழந்கொண்டிருந்தான்

தன்னுடைய அதிகாரக் கனவு எத்தனை பேரைப் பலி எடுத்தது என்ற கணக்கு இப்போது அவனிடம் இல்லை. போர் என்பதே அதிகாரக் கனவில் தோன்றுவதுதான். அந்த அதிகாரக் கனவுகளில் தோன்றும் போர் வன்முறைகளிலேயே வந்து முடிகிறது. விடுதலைக்கான போரில் பங்கெடுத்த வீரர்கள் இறுதியில் தங்களது இருப்பையும் அதிகாரத்தையும் நிலைநிறுத்தும் முயற்சியிலேயே முண்டியடித்துக் கொண்டிருந்தார்கள். ஒவ்வொருவர் அதிகாரமும் ஒவ்வொருவரை காவு வாங்குவதற்குத் தயாராகவே இருந்தது. எவன் முந்துகிறானோ அவனே வன்முறையின் வெற்றியாளனாகிறான். அத்தகைய வன்முறையின் வெற்றியாளன் இப்போது சித்தம் குளம்பும் நிலைக்குத்

தள்ளப்பட்டிருக்கும் போது பாவங்கள் தன்னைச் சூழ்ந்திருப்பதாக எண்ணும் நிலை இயல்பாகவே வந்து சேரும். பயம் நெருக்கமாகக் குடிகொள்ளும். பாவங்கள் திரட்சியாக கண்முன் வந்து ஆடும். இவை தவிர்க்க முடிவதில்லை.

அவனைச் சூழ்ந்துள்ள இடம் நிலையாக நிற்பதாக இல்லை. அவனைச் சுற்றிச் சுற்றி வலம் வந்து கொண்டிருந்தது. மரம், செடி, கொடி, தெரு, கடல். இப்படி எல்லமே அவனைச் சுற்றிக் கொண்டிருந்தன. அவனால் நிலையாக ஓர் இடத்தில் இருக்கவும் முடியவில்லை. எழுந்து இன்னொரு இடம் நகரவும் முடியவில்லை. அத்தகைய மனநிலையில் தன் மனம் சிதைந்து கொண்டிருப்பதாகவும் காற்றில் சாம்பலாகப் பறந்து கொண்டிருப்பதாகவும் உணர்ந்து கொண்டான். தன்னை நிதானப்படுத்த முடியாமல் தனக்குள் போராடிக் கொண்டிருந்தான்.

அவனுக்கு கண் மங்கிக் கொண்டிருந்தது. தன்னைச் சூழ சில உருவங்கள் வந்து மறைவது போல் தோன்றியது. அத்தனை முகங்களும் நன்கு பழக்கப்பட்டவையாக உணர்ந்தான். இடையிடையே வேட்டுச் சத்தங்கள் மிக அருகாக கேட்டுக் கொண்டும் இருந்தன.

காவலன் ஒருவன் அருகில் வந்து காதில், ‘‘அக்கா பிழைச்சுப்போட்டா’’ என்று சொன்னதும் ஓவென்று அழுவதா? மார்பில் அடித்துக் கத்துவதா? எதுவும் தோன்றவில்லை. போரியல் வரலாற்றில் எந்த இழப்புக்காகவும் வெளிப்படையாக அழுதவனில்லை அவன். தன் வீரத்தை யாரும் குறைத்து மதிப்பிடுவதில் எப்போதும் விருப்பம் கொண்டவனில்லை. இப்போது மட்டும் எப்படி அழுவது? புரியவில்லை. அவன் அழவில்லை.

மகன் களத்தில் மடியும் போது மனைவி அழுத அழுகை கண்ணுக்குள் நின்றாடியது. காவலர்கள், தோழர்கள், போராளிகள் சூழ்ந்திருந்தார்கள். அவர்களின் கண்களிலும் கண்ணீர்த்துளி பனித்துக் கிடந்தது. ஆனால், தனது வீரத்தைக் குறைத்துவிட அவனுக்கு மனம் ஏகவில்லை. மகள் இறந்த போதும் அப்படித்தான் இருந்தான். இப்போது எல்லாவற்றுக்கும் சேர்த்து அழ வேண்டும் போல் தோன்றியது. எல்லாத் தாய்மைகளின் துயரத்தினையும் ஒன்று சேர்த்து அழுதால் இறுதி நேரத்தில் ஆன்மா சுத்தப்படும் போல தோன்றியது. சுயகௌரவம் இப்போதும் விடுவதாயில்லை.

வந்தவனிடம் ‘‘உடல்’’ என்று ஆரம்பிக்கவும், ‘‘எரித்து முடித்தாயிற்று’’ சொல்லி காவலன் பின் நகர்ந்தான். அவனது மனதின் ஆழத்தில் கருங்கல்லொன்று நொருங்கிக் கொண்டிருந்தது.

பாவங்கள் தன்னை சூழ்ந்து கொண்டிருப்பதாகக் கண்டான். தன் வார்த்தைகளை வேதவாக்காகக் கொண்டு மாண்ட மாவீரர்கள் கல்லறைகளில் இருந்து எழுந்து வந்து புகையாய் தன்னைச் சூழ்வதாக பிரமை தோன்றவும் கொடுகிக் கொண்டான். அவர்களையும் நானேதான் கொன்றேன். என் நண்பர்களைக் கொன்றேன். நண்பர்களின் நண்பர்களைக் கொன்றேன்; அவர்களின் நண்பர்களையும் கொன்றேன். தந்தையைக் கொன்றேன், அவனின் மகனைக் கொன்றேன். மகனின் மகனையும் கொன்றேன்.

புனிதம் என்ற ஒற்றை வார்த்தையில் இருந்து எத்தனை சாம்பல் மேடுகள், எத்தனை புதைகுழிகள். நினைக்க நினைக்க உடல் நடுங்கத் தொடங்கியது அவனுக்கு. அவர்கள் அனைவரின் ஆன்மாக்கள் தன்னை பழி தீர்ப்பதற்காகக் கிளம்பி வந்துவிட்டதாக எண்ணத் தோன்றியது.

எல்லாம் முடிவுறும் தருணத்தில் அவன் நின்று கொண்டிருந்தான். தப்பித்தலுக்கான எந்த உபாயமும் அவனிடம் இல்லை. இனி தப்பித்துத்தான் என்ன பயன்? பல்லாயிரம் படைவீரர்கள், இலட்சக்கணக்கான ஆயுதங்களால் தரமுடியாத வெற்றியை நிராயுதபாணியாய் தன்னால் எப்படி பெற்றுக்கொள்ள முடியும். ஒரு கோழையாகி வாழ்வதனைவிடவும் செத்து வீரனாய் வாழ்வது சிறந்தது என்ற எண்ணம் மனதுக்குள் குறுகுறுத்துக் கிடந்தது.

தாயின் மடியில் படுத்துறங்கினால் ஆசுவாசமாக இருக்கும் போல் தோன்றவும், கடுமிருள் சூழ்ந்த காட்டில், உறைந்து போகும் குளிரில் போர் சுமத்திவிடப்பட்ட பிள்ளைகளின் ஏக்கம், துயரம், மரண ஓலம் அவனுக்கு மிக நெருக்கமாக வந்தமர்ந்து உரசிக் கொண்டிருந்தது. குறுகிக் கொண்டான். மனம் சோர்வுடன் அடங்கிக் கொண்டிருப்பதை உணரத்தலைப்பட்டான். யேசுநாதரின் ஓரிரு வாசகங்களும் பரமாத்மாவின் கீதா உபதேசகத்தின் ஒருசில வார்த்தைகளும் காதின் வழி நுழைவது போலிருக்க துப்பாக்கிச் சன்னமொன்று மூளையைக் குடைந்து ஊர்ந்து கடந்து செல்வதனை உணர்ந்தான். மிக நெருக்கமாக தன்னுடைய போர்வாளின் இரத்தப் பசிக்கு இரையாகிப் போன முன்னாள் நண்பர்களின் முகங்கள் தன்னைப் பார்த்துப் பரிகசிப்பது போலவும் பரிதாபமாய்ப் பார்ப்பது போலவும் தோன்றியது.

காடும் வானமும் கடலும் மங்கிக் கொண்டிருந்தன. குருதி கன்னத்தின் வழியே சூடாக இறங்கிக் கொண்டிருந்து. தொலைவிலிருந்து இருள் எல்லாவற்றையும் விழுங்கியபடி அருகே வந்திறங்கியது. வேட்டோசையையும் பொருட்படுத்தாது குருதியை ருசித்துண்ண கரும்பூனையொன்று அருகில் அமர்ந்து சுற்றும்முற்றும் பார்த்துக் கொண்டிருந்தது.

*mail to:* **thanavishnu@gmail.com**

## இமையத்தின் ‘உப்பு வண்டிக்காரன்’

# சமகாலத்தை எழுதுவதின் வகை மாதிரி

‘உப்பு வண்டிக்காரன்,’ இமையத்தின் புதிய நாவல் (அக்டோபர், 2024). அவரது முதல் நாவல் ‘கோவேறு கழுதைகள்’ (1994) வெளிவந்தபோது அவருக்கு வயது 30. வெளிவந்த சில மாதங்களுக்குள்ளேயே ஆதரவும் எதிர்ப்புமான விமரிசனங்களைப் பெற்றுக் கவனிக்கத்தக்க எழுத்தாளராக அவரை முன்வைத்தது.

● அ. ராமசாமி

ஒடுக்கப்பட்ட சமூகத்துப் பெண்ணொருத்தியின் துயரார்ந்த வாழ்க்கையைத் துன்பியல் உணர்வெழுச்சியோடு எழுதிக் காட்டியது. அதன் வடிவம், மொழிப் பயன்பாடு, மனிதாபிமானம் சார்ந்த உரிப்பொருள் நோக்கம் என பலவிதமான இலக்கியவியல் சிறப்புகள் கொண்டது என்பதைப் பலரும் சுட்டிக்காட்டினர். முதல் விமரிசனத்தை எழுதிய எழுத்தாளர் சுந்தர ராமசாமி, இந்த ஆண்டின் சாகித்திய அகாடெமி விருதைக் கோவேறு கழுதைகளுக்கே தரவேண்டும் என எழுதினார்.

கோவேறு கழுதைகளைத் தொடர்ந்து ‘ஆறுமுகம்’ (1999), ‘செடல்’ (2005), ‘எங்கதெ’ (2015), ‘செல்லாத பணம்’ (2018), ‘வாழ்க வாழ்க’ (2020), ‘இப்போது உயிரோடிருக்கிறேன்’ (2022), ‘நெஞ்சறுப்பு’ (2024) எனச் சீரான இடைவெளியில் நாவல்களை எழுதி வெளியிட்ட இமையத்தின் ஒன்பதாவது நாவல் ‘உப்புவண்டிக்காரன்’. இந்த ஆண்டிலேயே வந்துள்ள இரண்டாவது நாவல். அவரது ஐந்தாவது நாவலான ‘செல்லாத பணம்’ இந்திய அரசின் உயர் இலக்கிய விருதான சாகித்திய அகாடெமி விருதை அவருக்குப் பெற்றுத் தந்தது.



நாவல் என்னும் புனைகதை வடிவத்தில் மட்டுமல்லாது, சிறுகதை வடிவத்திலும் தொடர்ச்சியாக எழுதிக் கொண்டிருப்பவர், இமையம். ‘மண்பாரம்’ (2005), ‘வீடியோ மாரியம்மன்’ (2008), ‘கொலைச்சேவல்’ (2013), ‘சாவுச்சோறு’ (2005), ‘நறுமணம்’ (2016), ‘நன்மாறன் கோட்டைக்கதை’ (2019), ‘தாலிமேல சத்தியம்’ (2022), ‘திருநீறுசாமி’ (2023) என எட்டுத் தொகுதிகள் இதுவரை வந்துள்ளன. ‘பெத்தவன்’ என ஒரேயொரு குறுநாவல் அவரால் எழுதப் பெற்றுள்ளது.

‘உயிர்மை’ இதழில் (செப்டம்பர், 2012) அச்சாகி வந்த பெத்தவனை வாசித்தவுடன், ‘காலத்தின் எழுத்தாளன்’ எனத் தலைப்பிட்டு உயிர்மைக்கு ஒரு வாசகர் கடிதம் எழுதினேன். அப்போது நான் போலந்து நாட்டின் வார்சா பல்கலைக்கழகத் தமிழ் இருக்கைப் பேராசிரியராக இருந்தேன். அந்த கடிதத்தில், “‘பெத்தவன்’ கதையை இமையத்தின் மிக முக்கியமான-சமகாலக் கதையாக நினைக்கிறேன். நமது காலத்தின் –சமூகத்தின்- பெருநெருப்பு ஒன்றின் ஜ்வாலையைத் திறந்து காட்டியிருக்கிறது” என்று குறிப்பிட்டேன்.

தமிழின் குறுநாவல் வரலாற்றில் ‘பெத்தவன்’ ஒருமைல் கல். அக்குறுநாவலில் இடம்பெற்ற நிகழ்வுகளின் சாயலோடு வெவ்வேறு நிகழ்வுகள் தமிழ்நாட்டில் நிகழ்ந்து கொண்டிருந்தன என்றாலும், இளவரசன் என்னும் இளைஞனைச் சாதி ஆணவக்கும்பல் கொலை செய்து ரயில் பாதை ஓரத்தில் வீசியது கதை எழுதப்பெற்ற ஆறுமாதத்திற்குப் பின் நிகழ்ந்தது. அந்நிகழ்வை முன் உணர்த்திய ‘பெத்தவன்’ பல ஆயிரம் பிரதிகள் அச்சடிக்கப்பெற்றுத் தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர்கள் சங்கத்தினரால் தமிழகமெங்கும் விநியோகிக்கப்பட்டது.

‘பெத்தவன்’ குறுநாவலைக் குறிப்பிட்ட அதே சொற்களால் உப்பு வண்டிக்காரன் நாவலையும் குறிப்பிட விரும்புகிறேன். ‘உப்பு வண்டிக்காரன்’ சமகாலத்தின் எழுத்து. இந்நாவலின் வடிவம், உரிப்பொருள், விவாதிக்கும் முறை, வாசகர்களிடம் எழுப்பும் கருத்தோட்டம், உணர்வெழுச்சித் தூண்டல்

ஆகியவற்றோடு காலப் பின்னணி காரணமாகவும் சமகாலத்தை எழுதுவதின் வகைமாதிரியாக இருக்கிறது.

"உப்பு உப்பே" எனத் தலைச்சுமையாகத் தூக்கிக்கொண்டு ஊர்ஊராய் உப்பு விற்பதைத் தொழிலாகக் கொண்ட தம்பதியின் நீண்ட வாழ்க்கையைப் பேசும் நாவலே 'உப்பு வண்டிக்காரன்'. அத்தம்பதியினர் வாழ்ந்த இடம், தமிழ்நாட்டின் விருத்தாசலம் பகுதியிலிருக்கும் வேப்பூர் என்னும் சிறுநகருக்குப் பக்கத்தில் உள்ள விளாம்பூர் கிராமம். அக்கிராமத்தில் உப்பு வியாபாரம் செய்து வாழ்ந்த சண்முகம் - முத்துக்கருப்பாயி தம்பதியினரும் அவர்களது ஒரே மகனும் அவனது மனைவி கலாவும் நாவலின் முதன்மைப் பாத்திரங்கள். இவர்களோடு அந்த ஊரில் இருந்த வடமலை, சந்திரன், ஆனந்தவள்ளி, செல்லமுத்து எனப் பெயரிடப்பட்ட பாத்திரங்களும் பெயரிடப்படாத பல பாத்திரங்களும் நாவலில் இடம்பெற்றுள்ளனர்.

விளாம்பூரில் தொடங்கும் நாவலின் முதல் நிகழ்வைத் தொடர்ந்து அடுத்தடுத்த நிகழ்வுகளுக்காக விருத்தாசலம், சிதம்பரம் அண்ணாமலை நகர் என இன்னும் சில இடங்களையும் நாவலின் களமாக -இடப்பின்னணியாகக் கொண்டிருக்கிறது.

தலைச்சுமை விற்பனைக் காலத்திலிருந்து தள்ளுவண்டிக் காலத்திற்கு நகர்ந்து, உப்பு விற்பதோடு காய்கறிகளையும் விற்றுப் பிழைத்த சண்முகம்-முத்துக் கருப்பாயி தம்பதியின் தொழில்கள் மீது விருப்பமே இல்லாதவன் அவர்களின் மகன். நாடோடித் தன்மையிலான தொழில் செய்யும் பெற்றோர்களின் பிள்ளை என்பதால் கிடைத்த அவமானத்தால், அவர்கள் மீது வெறுப்போடு இருக்கும் மகனுக்குப் பெற்றோர் வைத்த பெயர் 'கவர்னர்'. அந்தப் பெயர் அவனுக்குப் பொருந்தும் விதமாக, இதுதான் வேலை என்று சொல்லிக்கொள்ளும் விதமாகத் தொழில் எதுவும் இல்லை. கல்லூரி வரை சென்று படித்தவன் என்ற மிதப்பும் அரசியல் ஆர்வத்தால் வார்டு உறுப்பினர் தேர்தலில் நின்று தோற்றவன் என்ற அடையாளமும் உண்டு. அந்த மிதப்பைக் காரணமாக்கியே தான் விரும்பிய பெண்ணான கலாவைத் திருமணமும் செய்துகொண்டவன். அவர்களுக்கு ஒரு மகளும் மகனும் -ஆனந்தி ஆனந்தன்- இருக்கிறார்கள். அவனது தந்தை சண்முகம் தனது தொழில் மூலம் சம்பாதித்து வாங்கிய கொஞ்சம் நிலமும் வீடும் இருக்கிறது. அதைப் பார்த்துக் கொள்வது கவர்னரின் வேலைகளில் ஒன்று. அத்தோடு ஊரின் பொதுக்காரியங்களில் ஈடுபாடு காட்டும் இளைஞன்.

இத்தகைய குடும்பங்களைக் கடந்த கால் நூற்றாண்டுக் காலத்தில் தமிழ்நாட்டில் பார்ப்பது அரிது. சரியாகச் சொல்வதானால் உலகமயத்திற்குப் பின்னால் தோன்றிய புதுவகைச் சந்தையின் வரவால் உப்பை வண்டியில் எடுத்துச் சென்று விற்கும் தொழிலெல்லாம் காணாமல் போய்விட்டது. ஆகவே இத்தகைய தொழிலைச் செய்யும் தொழிலாளர்களைச் சமகாலத்தவர் எனச் சொல்வது சரியானது அல்ல. ஆனால், இமையம் தனது நாவலுக்கான காலத்தையும் குறிப்பான பின்னணி நிகழ்வுவொன்றையும் தேர்வு செய்து அடுக்கியிருப்பதின் மூலம் காணாமல் ஆக்கப்பட்ட உப்பு வண்டித் தொழிலுக்கு 'சமகாலத்தன்மை'யை உருவாக்கியிருக்கிறார். இந்தக் காலத்தெரிவின் காரணமாக நாவலில் விவரிக்கப்படும் ஒவ்வொரு நிகழ்வும் விளாம்பூர் கிராமத்து நிகழ்விலிருந்து ஒட்டுமொத்த உலகத்தின் நிகழ்வாக மாறி விரிந்து பரவி நிற்கிறது. அதுவே இந்த நாவல் ஆக்கத்தின் சிறப்பு.

நாவலுக்கான காலம் உலகமெங்கும் கோவிட் நோய் பரவிய காலம். இந்தியாவில் கோவிட், நான்கு அலைகளாகச் சொல்லப்பட்டது. இந்நான்கு அலைகளில் நாவல் இரண்டாம் அலையின் காலத்தைத் தெரிவு செய்திருக்கிறது என்று ஊகிக்க இடமிருக்கிறது. கோவிட் நோய் உண்டாக்கிய அச்சத்தின் பரபரப்பு; அதற்கு அரசமைப்புகள் ஏற்படுத்திய போக்குவரத்து தடைகள்; மக்களை வீட்டுக்குள் முடக்கிப்போட்ட கட்டுப்பாடுகள்; காவல்துறை, வருவாய்த் துறை முகாம்கள், தனிமைப்படுத்தும் சிறப்புமுகாம்கள்; மருத்துவ உதவிகள் போன்றன விவரிக்கப்படும் முறையைக் கொண்டு இதனைச் சொல்லலாம். மனிதர்கள் ஒவ்வொரு நாட்டிலும் பல ஆயிரக்கணக்கில் இறந்த அலை இரண்டாம் அலைதான். அந்தக் காலகட்டத்தில் தான் அரசுகளும் அமைப்புகளும் செய்வதறியாது திகைத்து நின்றன. கூட்டம் கூட்டமாகக் கூலித் தொழிலாளர்கள் அலையலையாய்ப் புலம்பெயர்ந்தார்கள். இந்தியாவில் ஒன்றிய அரசாங்கம் ஏமாற்றமளிக்கும் சடங்குகளின் பக்கம் திருப்பிவிட்டது. அந்த இரண்டாம் அலையின் காலம் 2020 மார்ச் – ஜூலை. இவை எல்லாவற்றையும் தனது பார்வைக்குள் – பேச்சுக்குள் - விவாதத்திற்குள் – விமரிசனத்திற்குள் கொண்டுவந்துள்ளது இமையத்தின் நாவல்.

நாவலின் நேரடிக்காலம் மிகக்குறைவானவை. அதிகபட்சமாக இரண்டு வாரத்திற்கும் குறைவானதே அந்தக் காலம். செல்லமுத்துவின் மரணத்தில் தொடங்கிக் கொரானோ தாக்குதலில் சிக்கிய கவர்னர், கட்டுப்பாட்டு முகாம்களிலும் சிறப்பு மருத்துவக் கண்காணிப்பிலும் தங்கியிருந்து வீடு திரும்பும் காலம் தான் நாவலின் காலம். ஆனால், அந்தக் காலத்திற்குள் மொத்த வாழ்க்கையும் நினைவுகளாக



விரிக்கப்பட்டுள்ளன. சண்முகத்தின் இளமைக்காலம், குடும்ப வாழ்க்கை, மகன் பிறப்பு, வியாபார வளர்ச்சி, நிலங்கள் வாங்கிச் சொந்தவீடு கட்டியது, அவரது மகன் கவர்னரின் படிப்பு, திருமணம், பொதுவாழ்க்கை ஈடுபாடு, தேர்தலில் நின்று தோற்றது என அனைத்தும் நினைவுகளின் வழியாகவே வாசகர்களுக்கு வந்து சேர்கிறது.

நாவலின் நிகழ்வுகளும் பாத்திரங்களும் இருப்புநிலையும் மனவோட்டங்களும் என அனைத்துமே 'கவர்னர்' என்ற பாத்திரத்தின் வழியாகவே சொல்லப்படுகிறது.

***கவர்னரின் வீட்டுக்குப் பக்கத்து வீடுதான் செல்லமுத்துவினுடையது. வயது ஐம்பதைத் தாண்டியிருக்காது. திடகாத்திரமான ஆள்தான். கவர்னருக்குத் தெரிந்து நோய்நொடி என்று படுத்த ஆளில்லை. கடுமையான உழைப்பாளி. முகம் முறித்து யாரிடமும் பேசமாட்டார். கவர்னருக்கு அப்பா முறை.***

எனத்தொடங்கும் நாவல்,

***கவர்னரும் கலாவும் வாய்விட்டு அழுதுகொண்டிருப்பதைப் பார்த்து ஆனந்தியும் ஆனந்தனும் அழ ஆரம்பித்தனர். அப்போது லேசாக இடி இடிக்க ஆரம்பித்தது. மழை பெய்ய ஆரம்பித்தது.***

***நான்குபேரும் அழுது கொண்டிருந்த சத்தம் ஊருக்கும் கேட்கவில்லை. சுடுகாட்டிற்கும் கேட்கவில்லை. அவர்களின் அழுகுரல் இடிச்சத்தத்திலும் மழை பெய்கிற சத்தத்திலும் கரைந்து போயிற்று. இருட்டில் நால்வரும் உருவமுமற்றுப் போயிருந்தனர்.***

என முடிகிறது.

இந்தத் தொடக்கத்திற்கு முடிவுக்கும் இடையில் திரும்பத் திரும்பக் கேட்கப்படும் கேள்வியாகக் கவர்னர் தனக்குத் தானே கேட்டுக்கொள்ளும் கேள்வி, 'செல்லமுத்துவின் சாவுக்குப் போனது தவறா? பக்கத்து வீட்டுக்காரரின் சாவுக்கு எப்படிப் போகாமல் இருக்கமுடியுமா?' என்பதுதான். சாதாரணக் காய்ச்சலுக்கு மருத்துவமனைக்குப் போன செல்லமுத்துவின் வழியாகக் கொரானா விளாம்பூர் கிராமத்திற்குள் நுழைந்தது என்பதில் தொடங்கி, அவரது சாவுக்குப் போனவர்களுக்குத் தொற்றுகிறது. கவர்னரும் அதில் ஒருவன். அவன் வழியாக அவனது அப்பா சண்முகம், அம்மா முத்துக் கருப்பாயி எனப் பற்றிக் கொள்கிறது. இதன் பின்னர் நாவலின் காட்சிகளும் நகர்வுகளும் எண்ணவோட்டங்களும் உரையாடல்களும் முழுவதும் 'கோவிட்-19' என்று பெயரிடப்பட்ட கொரானாவைச் சுற்றிச் சுற்றியே நிகழ்கின்றன.

**நா**வல் ஆக்கத்தின் தன்மையைக் கூடுதல் சிறப்பாக ஆக்கும் பொருட்டும் எளிய சொல்முறையை உருவாக்க வேண்டும் என்ற நோக்கத்திலும் நாவலின் கட்டமைப்பை உருவாக்கியிருக்கிறார் இமையம். 248 பக்கங்களில் அச்சிடப்பெற்றுள்ள நாவல், ஐந்து பகுதிகளைக்

கொண்டிருக்கிறது. ஒவ்வொரு பகுதியும் குறிப்பிட்ட ஒரு இடத்தில் நிகழும் நிகழ்ச்சிகளைக் கொண்டுள்ளன. தமிழ்க் காப்பியங்களின் காண்டங்கள் இடத்தை அடிப்படையாகக் கொண்ட பிரிவுகளால் ஆனவை என்பதை இங்கே நினைவுபடுத்திக் கொள்ளலாம். சிலப்பதிகாரத்தில் புகார்க்காண்ட நிகழ்வுகள் அனைத்தும் சோழநாட்டில் நிகழ்வன; மதுரைக்காண்டம் பாண்டிய நாட்டு நிகழ்வுகளைக் கொண்டவை. வஞ்சிக்காண்டம் சேரநாட்டுப் பகுதிக்குள் நிகழ்வன. இமையத்தின் உப்பு வண்டிக்காரன் நாவலில் இப்படியான பெயரோடு கூடிய பிரிப்புகள் இல்லை. ஆனால், ஐந்து பிரிப்புகளும் ஒவ்வொரு இடத்தினை அடிப்படையாகக் கொண்டே பிரிக்கப்பட்டுள்ளன. விளாம்பூர், விருத்தாசலம், சிதம்பரம் மருத்துவக் கல்லூரி விடுதி, ராஜா மருத்துவமனை, விளாம்பூர் சுடுகாடு என்பன அந்த ஐந்து வெளிகள். ஒவ்வொரு பகுதியையும் இடப்பின்னணியால் அடையாளப்படுத்திக் கொண்டு ஒற்றைக் காட்சியையும் அங்கு நடக்கும் உரையாடல்களையும் ஒரு இயல்போல அமைத்துள்ளார். அவை பின்வருமாறு உள்ளது.

முதல் பகுதி, வேப்பூர் பக்கம் விளாம்பூரில் நடப்பன. இந்த பகுதியில் 13 பிரிவுகளில் செல்லமுத்துவின் சாவு தொடங்கி, அரசு இயந்திரத்தின் ஆட்கள் வந்து கொரானா நோயாளிகளைக் கண்டறிந்து அடையாளப்படுத்திச் சிறப்பு முகாமிற்கு அழைத்துச் செல்லும் நிகழ்ச்சிகள் நடக்கின்றன. கவர்னரோடு சேர்த்துப் பத்துக்கும் அதிகமானோர் வரிசைப்படுத்தப் படுகிறார்கள். அடுத்தடுத்த நாட்களில் கூட்டம் அதிகமாகிறது. கவர்னர் குடும்பத்தில் அவனது பெற்றோரோடு சேர்த்து மூவர் அடையாளப்படுத்தப் படுகிறார்கள்

இரண்டாவது பகுதியில் 16 இயல்கள். பக்கத்தில் உள்ள நகரமான விருத்தாசலத்தில் ஏற்படுத்தப்பட்ட கொரானா சிறப்பு முகாம் நிகழ்வுகள். அரசினர் மாணவர் விடுதியில் அமைக்கப்பட்ட சிறப்பு முகாமில் அந்த வட்டாரத்தின் பல்வேறு ஊர்களிலிருந்து நோய் அறிகுறியாளர்கள் கொண்டுவரப்பட்டு அடைக்கப்படுகின்றனர். அவர்களைக் காவல் துறை, வருவாய்த்துறை, மருத்துவத்துறை போன்றன கட்டுப்படுத்தும் நடைமுறைகள் விவரிக்கப்படுகின்றன.

மூன்றாவது பகுதியில் கொரானா நோயாளிகளுக்கு அளிக்கப்படும் சிகிச்சைக்கான முகாம். 17 பகுதிகள் கொண்ட அது சிதம்பரம் அண்ணாமலை நகர் ராஜா முத்தையா மருத்துவக் கல்லூரி விடுதியில் அமைக்கப்பட்ட சிகிச்சை முகாம். தனிமை, உணவு வழங்கல், அதிகாரிகளின் கெடுபிடிகள், ஒவ்வொருவரும் அச்சத்தின் பிடியில் இருத்தல், மரணத்தின் ஓலங்கள் என ஒவ்வொன்றும் நிகழ்கின்றன. உலகெங்கும் நடக்கும் கொரோனா அவலங்களைத் தொலைக்காட்சிகள்




**உப்பு வண்டிக்காரன்**

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | **இமையம்** |
| வெளியீடு | : | **க்ரியா பதிப்பகம், 58 TNHB காலணி, சானடோரியம், தாம்பரம், சென்னை – 600 047** |
| விலை | : | **ரூ. 350** |
| கைபேசி | : | **+917299905950** |
| மின்னஞ்சல் | : | **crea@crea.in creapublishers@gmail.com** |

வழியாகவும் யூ ட்யூப் வரிசைகள் மூலமாகவும் அறிந்து கொள்வதாக விரிக்கப்பட்டுள்ளது.

நான்காவது பகுதி ராஜா முத்தையா மருத்துவக் கல்லூரி மருத்துவமனையில் நடப்பன. 13 பகுதிகளால் ஆன அந்தப் பகுதியில் நோய் முற்றிய நிலையில் கவர்னரின் அப்பாவும் அம்மாவும் போகும் இடம்; அவர்களைச் சந்திக்க முடியாமல் கவர்னரும் அவனது நண்பர்களும் தவிக்கும் தவிப்பு; அப்பாவின் மரணம்; அந்தப் பிணத்தைப் பெறமுடியாமல் போனதின் கழிவிரக்கமும் பெருந்துயரமும்; அம்மாவின் நிலை என்னவென்று அறியமுடியாத நிலை ஆகியன விரிக்கப்பட்டுள்ளன.

கடைசி, ஐந்தாவது பகுதி 4 பகுதிகளைக் கொண்டது. விளாம்பூர் சுடுகாட்டில் நிகழ்வன. உறவுகளற்று, சடங்குகள் இல்லாமல் சண்முகமும் முத்துக் கருப்பாயியும் புதைக்கப்பட்ட அவலம்; புதைத்தபோது செய்யவேண்டிய சடங்குகளையும் செலுத்தவேண்டிய கருமங்களையும் அடுத்த நாட்களில் தனியாகக் குடும்ப உறுப்பினர்களோடு பெருமழையில் செய்து முடிக்கும் அவலத்தின் உச்சம் என விரிக்கப்படுகின்றன

ஐரோப்பிய நல்திற/ ஐந்தங்க நாடகங்களின் பிரிப்புகள் கூட பெரும் இடத்தை அடிப்படையாகக் கொண்ட பிரிப்புகளே. அவற்றின் காட்சிகள் தனிநிகழ்வுகளின் அளவுகளால் ஆன அலகுகள். இடத்தை அடிப்படையாகக் கொண்ட எளிய சொல்முறையை முதல் மூன்று பகுதிகளில் வரிசையாக நடத்திக்கொண்டு போகும் இமையம், நான்காவது பகுதியில் சண்முகம்–முத்துக் கருப்பாயி குடும்ப வாழ்க்கையையும் மருத்துவமனைக்குள் அவர்கள் நோயின் பிடியில் இருப்பதையும் இணைநிலையாக வைத்து நகர்த்துகிறார். அதனால் காலத் தொடர்ச்சி உடைக்கப்படுகிறது. நேர்வரிசைக் கதைசொல்லல் குலைக்கப்பட்டு முன்னும்பின்னுமாக மாறிக் காட்சிகள் வைக்கப்பட்டுள்ளன. கவர்னரின் நினைவோட்டங்கள் முன்னும்பின்னுமாக நகர்ந்து கொண்டே இருக்கின்றன.

கொரோனா தாக்குதலில் பாதிக்கப்பட்டு ஆஸ்பத்திரிக்குள் அடைக்கப்பட்ட தந்தையைப் பார்க்க முடியாதபோதும், அவரது மரணத்திற்குப் பின் ஏற்பட்ட விரக்தி நிலையிலும், கவர்னரின் தவிப்பு மேலோங்கி வரும்போது அவனது கடந்த காலம் நினைவுக்கு வந்து அலைக்கழிக்கிறது. அவனது பொறுப்பற்ற கடந்த காலத்தின் மீது சுயவெறுப்பையும் குற்றமனத்தையும் மோதவிடுகிறான். இந்தப் பகுதியில் உரையாடல்களும் உள்ளோட்டங்களும் வலுவாக உள்ளன.

பொதுவாகத் தமிழ் எழுத்துகளில் அம்மா - மகன் உறவு, கணவன் - மனைவி உறவு, சகோதரப் பாசம் போன்றன உணர்ச்சிகரமாக - விரிவாக எழுதப்படுவதுண்டு. இந்த நாவலில் தந்தை - மகன் உறவுக்குள் இருந்த பகைமையோடு கூடிய வெறுப்பு விரிவாகப் பதிவாகியிருக்கிறது. இது அதிகமும் எழுதப்படாத ஒன்று. தந்தையின் மீது விருப்பமில்லாமல் இருந்ததற்காகக் கவர்னர் கொள்ளும் குற்றமனத்தின் எண்ணங்கள் இதுவரை வாசிக்கக் கிடைக்காத எழுத்துப் பகுதி. தமிழ்ப் புனைகதைப் பரப்பில் புதியது. இந்தக் கதாபாத்திர வார்ப்பும் வளர்ச்சியும் தான் இந்த நாவலைச் செய்தித் தன்மையிலிருந்து விலக்கி நாவலென்னும் கலைப்படைப்பாக ஆக்கியிருக்கிறது. அதனை உணரும் விதமாக நாவலின் பகுதிகள் சிலவற்றை இங்கே வாசிக்கத் தரலாம்:

*சண்முகத்தின் பக்கத்தில் படுத்துக்கொண்டிருப்பதே கவர்னருக்குச் சங்கடமாக இருந்தது. வீட்டில் சண்முகத்தின் பக்கத்தில் படுத்திருந்ததாக அவனுக்கு நினைவே இல்லை. எட்டாம் வகுப்பு, ஒன்பதாம் வகுப்பு படிக்கும் வரையில் முத்துக் கருப்பாயியின் பக்கத்தில் படுத்திருக்கிறான். அதன் பிறகு தனியாகத்தான் படுத்துக்கொள்வான். வழக்கமாக அவன் படுக்கிற இடத்தில் முத்து கருப்பாயி படுத்திருந்தால், என்னோட இடத்தில் எதுக்குப் படுத்திருக்கிற? என்று கேட்பான் (32)*

*கவர்னர் பத்தாம் வகுப்புக்குப் போன பிறகு சண்முகம் அவனிடம் பேசுவதைக் குறைத்துக்கொண்டார்.காரணமில்லாமல் பேசுவதில்லை. பேசினாலும் ஒன்றிரண்டு வார்த்தைகள்தான் பேசுவார். கவர்னர் என்ன தவறு செய்தாலும் நேரிடையாக அவனிடம் கேட்க மாட்டார். முத்து கருப்பாயியிடம், 'என்னடி புள்ள பெத்து வச்சியிருக்க?' என்று கேட்டு, கவர்னர் செய்த தவறுகளுக்கெல்லாம் அவள்தான் காரணம் என்பதுபோல் பேசுவார். 'இன்னமுட்டும் வீட்டுலதான் இருந்தான். அவன்கிட்ட நேரா, 'ஏண்டா கழுத இப்படிச் செஞ்ச?'னு கேட்டா என்ன. மகன் மொகம் கோணக்கூடாது. அப்பனுக்கும் மவனுக்கும் பொன்னேரிக்காரன் மவதான் கெடச்சாளா, திட்டுறதுக்கும் கேள்வி கேட்கிறதுக்கும் சண்டை பண்றதுக்கும்?' என்று கேட்டு சண்முகத்திடம் சண்டைக்குப் பாய்வாள். (111)*

*கவர்னர் படுக்கையில் படுத்துக்கொண்டு கண்களை மூடியபோது பகலாக இருந்தது. அவன் கண்களைத் திறந்து பார்த்தபோது இருட்டாக இருந்தது. முத்து கருப்பாயியின் பேச்சுக்குரல் கேட்டுக் கொண்டிருந்ததே எங்கே இருக்கிறாள் என்று பார்த்தான். ஆளில்லை. இருட்டு மட்டும்தான் தெரிந்தது.*

*சண்முகத்தின் உயிர் எப்படி அடங்கியிருக்கும் என்று யோசித்தான். அப்பன் செத்துப் பிணமாகத் தனி அறையில் கிடக்கும்போதும் எனக்கு எப்படித் தூக்கம் வந்தது? சண்முகம் இறந்துவிட்டார் என்று சொன்னபோது மனதில் ஏற்பட்டிருந்த பயமும் கவலையும் தணிந்திருந்தது. ஆனாலும் கட்டிலை ஓங்கி ஒரு குத்துவிட்டான். பிறகு அழ ஆரம்பித்தான். (184)*

*அவன் சொன்னது ஜன்னலிடமா ஜன்னலுக்கு வெளியே இருந்த இருட்டிடமா? 'கடல் தண்ணிய*

*வெயில்ல காய வச்சா உப்பு. உப்ப கடல்ல கொட்டுனா தண்ணி. இதுதான் வாழ்க்க. இதுதான் ஒலகம். பொறந்ததிலிருந்து சுடுகாடு போறவர 'சீ அவனா'னு பேரு எடுக்காமப் போகணும்' என்று எப்போதோ கவர்னரிடம் சண்முகம் சொன்னது நினைவுக்கு வந்தது. "செத்திட்டியா அப்பா" என்று சொல்லி கவர்னர் கதறி அழுதான்.* (188)

*ஒவ்வொன்றாக நினைத்துப் பார்த்த கவர்னர், "எங்கப்பாவ கொரானா கொல்லல. நான்தான் கொன்னுட்டன். ஏன் தான் அன்னிக்கி சாவுக்குப் போனேனோ தெரியலியே" என்று சொல்லிவிட்டு அழ ஆரம்பித்தான். கவர்னர் அறையில் தனியாக அழுது கொண்டுருந்தான். 'அழாத விடு பார்த்துக்கலாம்' என்று சொல்வதற்கு ஆளற்ற இடத்தில் அழுது கொண்டிருந்தான். எவ்வளவு நேரம் அழுதாலும், 'எதுக்கு அழுவுற?' என்று யாரும் வந்து கேட்க மாட்டார்கள் என்று தெரிந்தும் அழுது கொண்டிருந்தான். "செத்தவன் கிட்டத்தான்னு இல்ல, அழுவுறவன்கிட்டயும் யாரையும் அண்டவிடலியே கொரானா" என்று சொல்லி அழுதான்.* (206)

*"ஒம் பொணத்துக்கு ஒரு மாலை போட முடியல. ஒம்பொணத்த தொட்டுத் தூக்க முடியல, ஒம்பொணத்துமேல ஒரு கைப்புடி மண்ணக்கூட அள்ளிப்போட முடியல. எனக்கு உசுரக் கொடுத்த ஒனக்கு என்னால என் தல மசுரக்கூடக் கொடுக்க முடியல. இந்த நோவு யாரும் யாருக்கும் சொந்தமில்லைன்னு ஆக்கிடிச்சே. அப்பன், மவன்ங்கிற மொறயில இத்தன வருசத்தில நேருக்கு நேரா நின்னு அஞ்சி, பத்து நிமிஷம் கூட நீயும் நானும் பேசிக்கலியே. எங்கப்பன் சாவல. எஞ்சாமி செத்துடுச்சி" என்று சொல்லி வாய்விட்டுக் கதறி அழுத கவர்னர் நெடுஞ்சாண்கிடையாகத் தரையில் விழுந்து கும்பிட்டான்.* (216)

*"இருட்டுற நேரத்தில புள்ளைங்கள அழச்சிக்கிட்டு சுடுகாட்டுக்குப் போவலாமா?" என்று கலா கேட்டதும் கவர்னருக்குக் கோபம் வந்துவிட்டது. "எங்கப்பன் தெருத்தெருவா ஊர் ஊராப் போயி உப்பு வித்த காசில சோறு தின்னு வளந்த புள்ளங்கதான? ஒரு கை மண்ணள்ளிப் போடட்டும். புண்ணியம் கிடைக்கும்" என்று சொன்னான். பிறகு ஆனந்தியிடம்,"தாத்தா குழி மோட்டுல கை நெறைய மண்ணள்ளிப் போடணும், விழுந்து மூணு மொற கும்பிடணும், புரியுதாம்மா" என்று கேட்டான்.*

*"சரிப்பா, தாத்தா எப்பவும் என்னெ, 'தங்கம் தங்கம்'னுதான் கூப்பிடுவாருப்பா" என்று ஆனந்தி சொன்னதும் கவர்னருக்கு அழுகை வந்துவிட்டது.* (246)

**கொ**ரோனோ நோயின் பின்னணியில் உப்பு வண்டிக்காரனின் மகன் வழியாகச் சொல்லப்படும் குடும்பத்தின் துயரக் கதையைத் தாண்டி; கொரோனோ என்னும் பெருந்தொற்று, உலகத்தைப் படுத்திய பாடுகளைப் பாத்திரங்களுக்கிடையே நடக்கும் உரையாடல்கள் வழியாக விரிவாக எழுதிக் காட்டுகின்றார். அதில் அந்தக் காலகட்டத்தின் நடவடிக்கைகள் மீது தீவிரமான விமரிசனங்களையும் செய்துள்ளார் இமையம். நெருக்கடியான காலச்சூழலில்/ காரணங்களில் அரசு அமைப்புகள் எப்படிச் செயல்படுகின்றன என்பதை நுட்பமான அவதானிப்புகளாலும் நகைச்சுவை தொனிக்கும் உரையாடல்களாலும் எழுதிக் காட்டுகின்றார். சட்டத்தின் விதிகளைச் சொல்லித் தப்பிக்கும் அதிகாரிகள், அந்த வேலையிலும் லஞ்சம், ஊழல், அதிகார மீறல் போன்றவற்றில் எப்படி ஈடுபடுகிறார்கள் என்பதையும் சில காட்சிகள் வழியாகச் சொல்லியிருக்கிறார். எல்லா நெருக்கடியிலும் மனிதர்கள் காதலிக்கிறார்கள்; கல்யாணம் செய்துகொள்கிறார்கள்; காமத்தில் திளைக்கிறார்கள் என்பதையும் சொல்லியிருக்கிறார்.

நேரடியாக நாவலின் காட்சிகளாக இல்லாமலேயே கொரோனா காலகட்டத்து ஊடகச் செயல்பாடுகளையும் அரசியல் கட்சிகளின் பொருத்தமற்ற கொள்கைகளையும் பேசிக் கடக்கும் பாத்திரங்களின் உரையாடல்கள், நாவலின் கனதியான துயரத்திலிருந்து விடுவிப்பு மனநிலையை உண்டாக்கி வாசிப்பைத் தக்க வைத்துள்ளன. சமயவாதிகளின் கையறு நிலையையும் காதலிப்பவர்களின் சுயநலத்தையும் காமத்தைத் தணித்துக்கொள்வதில் இருந்த அச்சத்தையும் கூடப் போகின்ற போக்கில் – குறிப்பாகக் கவர்னரின் பார்வைக் கோணத்தில் சொல்லிவிடுகின்றார் இமையம்.

திரும்பத் திரும்பச் சொல்லி அழுத்தம் தர நினைக்கும் எழுத்து முறை தன்னுடையது என நம்புகிறார் இமையம். அதற்குக் காரணமாக இருப்பன இமையத்தின் புனைவுகளில் இடம்பெறும் அதிகப்படியான உரையாடல்களே. இந்த நாவலிலும் பல இடங்களில் திரும்பத் திரும்பப் பேசும் உரையாடல்கள் உள்ளன.

இந்த நாவலின் மையப்பாத்திரமான 'கவர்னர்' என்ற பெயரிடல் திட்டமிட்டு வைக்கப்பட்டது போல முதலில் தோன்றியது. ஆனால், தமிழ்நாட்டுக் கிராமங்களில் கலெக்டர், முன்சீப், சிவிலியான், ஐகோர்ட் மகாராசன், டிஎஸ்பி, ஏட்டு, தாசில்தார்

போன்ற பதவிப் பெயர்களைச் சூட்டுவதில் ஓர் அரசியல் உண்டு. அதே நுட்பமான அரசியல் தொனியோடு தான் இந்த நாவலின் கவர்னர் என்ற பெயரும் சூட்டப்பட்டுள்ளது என்பது பின்னர் புலனாகிறது. அந்தப் பெயர் ஒவ்வொரு கட்டத்திலும் ஒவ்வொரு இடத்திலும் உண்டாக்கும் எரிச்சலும் எள்ளல் தன்மையும் தொடக்கத்தில் இருக்கும் அதே நிலையில் பின்னர் இல்லை. மருத்துவமனைக்குள் தந்தையையும் தாயையும் அனுப்பிவிட்டுத் தவிக்கும்போது அந்தப் பெயரும் அவனது முந்திய தெனாவட்டுப் போக்கும் காணாமல் போய்விடுகின்றன.

கொரானோ ஏற்படுத்திய அச்சமும் அச்சம் சார்ந்த துயரமும் என்னும் உரிப்பொருள் தெரிவுக்காக மட்டுமல்லாமல், அதனைத் தேர்ந்த நாவல் வடிவில் தந்துள்ளார் என்பதற்காகவும் இந்த நாவல் சிறப்பான எழுத்தாக இருக்கிறது எனக் கூறத்தோன்றுகிறது.

காலம், இடம், பாத்திரங்கள் என்ற மூன்றிலும் விரிவுகளை ஏற்படுத்திக்கொள்ளும் வாய்ப்புக் கொண்ட இலக்கிய வடிவம், நாவல். அதனாலேயே உலக இலக்கியங்கள் பற்றி விரிவான ஆய்வுகள் செய்தவர்கள் நாவல் வடிவம், செவ்வியல் காலக் காவியத்தின் நவீன வடிவம் என்கின்றனர். தமிழின் நாவல் வரலாற்றில் குறிப்பான வட்டாரத்தைப் பின்னணியாகக் கொண்ட நாவல்கள் ஏராளமாக உள்ளன. கொங்கு வட்டாரப் பின்னணியை ஆர்.சண்முகசுந்தரமும் கரிசல் வட்டாரப் பின்னணியை கி.ராஜநாராயணனும் தொடங்கி வைத்த பின்னர் இவ்விரு வட்டாரங்களின் அடையாளத்தோடு பலர் வட்டாரப் புனைகதைகளை எழுதி நிரப்பினார்கள். ஒரு கிராமத்தை மையமாக்கிக் கொண்டு, அதனைச் சுற்றியுள்ள கிராமங்களின் தொகுப்பைப் பின்னணியாகக் கொண்ட வட்டார நாவல்களின் எண்ணிக்கை 1970கள் தொடங்கி 2000 வரை ஆண்டுதோறும் அச்சாகின. அதற்குப் பின்பு நகரப் பின்னணியில் எழுதப்பெற்ற நாவல்கள் வந்துள்ளன. ஆனால், குறிப்பான காலப் பின்னணியையும் அந்தக் காலகட்டத்தில் நிகழ்ந்த பெரும் நிகழ்வுகளையும் உள்ளடக்கிய இலக்கியப் பனுவல்கள் குறிப்பிட்டுச் சொல்லும்படியாக எழுதப்படவில்லை.

நகர் மயமாதல், தொழில் மயமாதல் போன்ற கருத்து நிலைகளைப் பின்னணியாக்கி தமிழில் நாவல்கள் எழுதப்பெற்றுள்ளன. சா. கந்தசாமியின் 'சாயாவனம்', சுந்தர ராமசாமியின் 'ஒரு புளியமரத்தின் கதை' இவ்விரு போக்குக்கும் எடுத்துக்காட்டுகள். தேச விடுதலைப் போராட்டத்தின் பின்னணியில் ர.சு. நல்லபெருமாள் (கல்லுக்குள் ஈரம், போராட்டங்கள்), க.சீ. வேங்கடரமணி (தேசபக்தன் கந்தன்), நா. பார்த்தசாரதி (ஆத்மாவின் ராகங்கள்) ,சி.சு. செல்லப்பா( சுதந்திரதாகம்) போன்றவர்களின் நாவல்கள் வந்துள்ளன. அதேபோல் இடதுசாரி இயக்கங்கள் கிராம வாழ்க்கையில் ஏற்படுத்திய தாக்கங்களைக் குறிப்பாகச் சொல்லாமல் பொதுநிலைப் படுத்திக் காட்டும் நாவல்களும் ஆலைத்தொழில் வளர்ச்சியில் நடத்திய போராட்டங்களையும் நாவல்கள் ஆக்கியுள்ளனர். டி.செல்வராஜின் 'மலரும் சருகும்' தொ.மு.சி. ரகுநாதனின் 'பஞ்சும் பசியும்' அப்படியான நாவல்களே.

இந்த அளவுக்குக் கூடத் திராவிட இயக்கங்களின் போராட்டங்களைக் குறிப்பாகக் காட்டும் நாவல்கள் இடப் பின்னணியோடும் காலப் பின்னணியோடும் எழுதப்படவில்லை. ஒட்டுமொத்தத் தமிழகத்தையும் கொதிநிலைப்படுத்திய இந்தி எதிர்ப்புப் போராட்டம் நாவல் வடிவத்தில் எழுதப்பெறவில்லை. அதே நேரத்தில் அவர்கள் தங்களின் கருத்தியல்களைத் திரள் மக்களிடம் கொண்டுபோய்ச் சேர்க்கும் நாடகங்களில் வெளிப்பட்டார்கள் என்பதும் கவனத்தில் கொள்ளவேண்டியது. 1990களில் தொடங்கிய தலித்திய எழுச்சியோடு அச்சான தலித்திய நாவல்கள் சாதிய முரண்களைப் பேசுவதற்கும் விவாதிப்பதற்கும் கற்பனையான பாத்திரங்களைத் தேர்வு செய்தே பேசியிருக்கின்றன.

இத்தகைய போக்குகளின் நீட்சியாக இல்லாமல், குறிப்பான பெரும் நிகழ்வின் பின்னணியில் இமையம் இந்த நாவலை உருவாக்கியிருக்கிறார். அதனாலேயே தனிச்சிறப்பான இடத்திற்குரியதாக ஆகியிருக்கிறது

கோவிட் நோய்த்தொற்று அலைகளால் நெருக்குண்ட காலகட்டத்தில் வாழ்ந்த ஒவ்வொருவரும் நாவலை வாசிக்கும்போது நாவலில் விவரிக்கப்படும் நிகழ்வுகளை அவரவர் அனுபவங்களாகக் கருதிக்கொள்ள வாய்ப்புகள் உண்டு. நான் அப்படித்தான் உணர்கிறேன். இந்த நாவலில் இடம்பெற்றுள்ள முகாம்கள் பெரும்பாலும் அரசு முகாம்கள்; இலவசமாக மருத்துவம் தந்த முகாம்கள். நானும் கோவிட் நோயில் பாதிக்கப்பட்டு மருத்துவமுகாமில் இருந்தேன். ஆனால், நானிருந்தது ஒரு லட்சம் பணம் செலுத்தித் தனியார் மருத்துவமனை ஒன்றில். ஒருவார காலம் தங்கித் திரும்பிய அந்தக் காலம் வாழ்க்கையில் மறக்க முடியாத ஒன்று. பெரும் துன்பியல் நினைவுகளாக இப்போதும் விரிந்துகொண்டே இருக்கின்றன. ஓராண்டுக்கும் மேலாக உலகத்தையே அச்சத்தில் ஆழ்த்தி-மரணத்தின் பிடியில் நிறுத்தி, மனித வாழ்க்கையின் இருப்பின் மீது இரக்கமற்று வினையாற்றிய நோய்க்காலம் அது. அதனைக் குறித்ததொரு நாவலை எழுதியதின் மூலம் இமையம் தனது எழுத்து வாழ்க்கையில் இன்னொரு மைல்கல்லை எட்டியிருக்கிறார். ●

*mail to:* **ramasamytamil@gmail.com**

# தமிழரின் பெருமை

'இந்தியா மட்டுமல்லாமல் உலகளவிலேயே தமிழ் நிலப்பரப்பில் இருந்துதான் இரும்புக் காலம் தொடங்கியது; 5,300 ஆண்டுகளுக்கு முன்பே, இரும்பை உருக்கும் தொழில்நுட்பம் தமிழ் நிலத்தில் இருந்தது' எனும் அறிய கண்டுபிடிப்பு வெளியாகியுள்ளது.

● பிரபு திலக்



புதுச்சேரி பல்கலைக்கழக வரலாற்றுத் துறையின் முன்னாள் பேராசிரியர் கா. ராஜனும் தமிழ்நாடு தொல்லியல் துறையின் இணை இயக்குநர் ஆர். சிவானந்தமும் இணைந்து தொகுத்துள்ள 'இரும்பின் தொன்மை' என்ற ஆய்வு நூல் சமீபத்தில் தமிழ்நாடு முதலமைச்சர் மு.க. ஸ்டாலினால் வெளியிடப்பட்டது. இந்த விழாவில் பேசிய முதலமைச்சர் மு.க. ஸ்டாலின், "5300 ஆண்டுகளுக்கு முன்பே 'உருக்கு இரும்பு தொழில்நுட்பம்' தமிழ் நிலத்தில் அறிமுகமாகிவிட்டது. இப்போது, தமிழ்நாட்டில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகள் மூலம் அண்மையில் கிடைக்கப்பெற்ற காலக்கணக்கீடுகள் இரும்பு அறிமுகமான காலத்தை கி.மு. 4,000ஆம் ஆண்டின் முதற்பகுதிக்குக் கொண்டு சென்றிருக்கின்றன.

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையால் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகளில் சேகரிக்கப்பட்ட மாதிரிகள், புனேவில் உள்ள பீர்பால் சகானி தொல் அறிவியல் நிறுவனம், அகமதாபாத் நகரில் இருக்கும் இயற்பியல் ஆராய்ச்சி ஆய்வகம், அமெரிக்க நாட்டின் ஃபுளோரிடா மாநிலத்தில் இருக்கும் பீட்டா ஆய்வகம் ஆகியவற்றுக்கு அனுப்பப்பட்டன.



தேசிய நிறுவனங்களில் OSL பகுப்பாய்வுக்கும் பீட்டா ஆய்வகத்தில் கதிரியக்க காலப் பகுப்பாய்வுக்கும் ஒரே தாழியிலிருந்து மாதிரிகளை அனுப்பி வைத்தோம். இப்படியான மூன்று நிறுவனங்களிடம் இருந்தும் ஒரே மாதிரியான பகுப்பாய்வு முடிவுகள் பெறப்பட்டிருக்கின்றன. அதன்படி கி.மு. 3345இலேயே, தென்னிந்தியாவில் இரும்பு அறிமுகமாகி விட்டது என்று தெரிய வருகிறது" என்று கூறினார்.

இதுவரை, வடக்கு எகிப்தின் அல்-கெர்சேவில் கிடைத்த இரும்பினால் ஆன மணிகள்தான் உலகிலேயே மிகப் பழமையான இரும்புப் பொருட்களாகக் கருதப்படுகின்றன. இவற்றின் காலம் கி.மு. 3,400 முதல் கி.மு. 3,100வரை என கணிக்கப்பட்டுள்ளது. ஆனால், இந்த மணிகள் விண்ணிலிருந்து விழுந்த கல்லில் இருந்து செய்யப்பட்டவை. இதனடிப்படையில் இரும்பை உருக்கி பொருட்களை உருவாக்கும் தொழில்நுட்பம் கி.மு. 2000க்கும் கி.மு. 1000க்கும் இடைப்பட்ட காலத்தில் தொடங்கியதாக கருதப்பட்டு வந்தது.

இதனிடையே தமிழ்நாட்டில் சுமார் 3,000க்கும் மேற்பட்ட இரும்புக்கால ஈமச் சின்னங்கள் கண்டறியப்பட்டன. ஆகவே, தமிழ்நாட்டில் இரும்பின் பயன்பாடு எப்போது தொடங்கியது என்பதை அறிவது தொடர்பான ஆர்வம் தொடர்ந்து நீடித்து வந்தது. இதன் தொடர்ச்சியாக, திருநெல்வேலி மாவட்டம் ஆதிச்சநல்லூர் அகழாய்வில் கிடைத்த ஒரு ஈட்டி 3200 ஆண்டுகள் பழமையானது எனக் கண்டறியப்பட்டது. இந்த ஈட்டியின் நீளம் 5 அடி நீளம்; திடீர் என எதிரி எதிர்பார்க்காத வேளையில் இந்த ஈட்டியின் நீளத்தை அதிகப்படுத்தவும் முடியும் என்பதுதான் இதன் சிறப்பு. அதாவது 3200 ஆண்டுகளுக்கு முன்பே எதிரியை எளிதாக வெற்றிகொள்ள தமிழ் நிலப்பரப்பில் சிறந்த ஆயுதம் இருந்துள்ளது. 3200 ஆண்டுகளுக்கு முன்பே இப்படியொரு ஈட்டியைத் தயாரித்த ஆதிச்சநல்லூர்காரர்களுக்கு இரும்பு புதியதாக இருந்திருக்க வாய்ப்பில்லை. இதன் தொன்மை இன்னும் மிகவும் முற்பட்டதாக இருக்க வாய்ப்புண்டு என்று உறுதியாக நம்பப்பட்டது.

தொடர்ந்து, கடந்த 2022ஆம் ஆண்டில், கிருஷ்ணகிரி மாவட்டம் மயிலாடும்பாறை தொல்லியல் ஆய்வில் கிடைத்த பொருட்களின் மீது நடத்தப்பட்ட காலக் கணிப்புப் பரிசோதனைகளின்படி, தமிழ்நாட்டில் 4,200 ஆண்டுகளுக்கு முன்பே இரும்பு பயன்படுத்தப்பட்டது தெரியவந்ததாக, தமிழ்நாடு தொல்லியல் துறை அறிவித்தது.

இந்நிலையில்தான் தமிழ்நாட்டில் ஆதிச்சநல்லூர், சிவகளை, கீழ்நமண்டி, மயிலாடும்பாறை, மாங்காடு ஆகிய இடங்களில் கிடைத்த இரும்பு தொல் பொருட்களின் மாதிரிகள் ஆய்வுக்கு அனுப்பப்பட்டு, பெறப்பட்ட முடிவுகள் அடிப்படையில் '5,300 ஆண்டுகளுக்கு முன்பே, இரும்பை உருக்கும் தொழில்நுட்பம் தமிழ் நிலத்தில் இருந்தது' என்ற கண்டுபிடிப்பு 'இரும்பின் தொன்மை' நூலில் தெரிவிக்கப்பட்டுள்ளது. அதாவது, தாமிரபரணி ஆற்றங்கரையில் உள்ள சிவகளையில் 5369 ஆண்டுக்கு முன்பே இரும்பை உருக்கிப் பயன்படுத்தத் தொடங்கிவிட்டனர் என்கிறது இந்த கண்டுபிடிப்பு.

இது தமிழ்நாடு கொண்டாட வேண்டிய மகத்தான கண்டுபிடிப்பு. இன்று உலகமெங்கும் நாம் காணும் நவீன தொழில் நுட்ப முன்னேற்றத்திற்கு இரும்பின் பயன்பாடுதான் மூலக் காரணம். இந்த இரும்பை உலகுக்குத் தந்தது தமிழர்கள் என இப்போது உறுதி செய்யப்பட்டுள்ளது. இதன் மூலம் உலகின் தொன்மையான சிந்துசமவெளி, மெசபடோமியா, எகிப்து நாகரிகளுக்கு இணையான இடமாகத் தமிழ் நிலமும் உள்ளது என உறுதியாகியுள்ளது. இந்தக் கண்டுபிடிப்பை நிகழ்த்திய கா. ராஜன், சிவானந்தம் இருவருக்கும் உயரிய விருது கொடுத்து கௌரவப்படுத்த வேண்டும். ●

published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.
Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.
Editor : PRABHU THILAAK

Posted at patrika channel egmore (Posted between 28-31st of Every month)
Date of Publications : 25th of every month Reg.No.TN/TBM/150/2024-2026. ISSN Number 2456-3447 Dated: 04/10/2016.
R.DisNo. 2010/2002 RNI. TNTAM/2006/17955 Licenced to Post without Prepayment No: TN/PMG(CCR)/WPP 722/2024-2026.